# சங்க இலக்கியம் –
# கலித்தொகை காட்டும் ஐந்திணை வாழ்வியல்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
திருமதி **ஏ. பிரேமா,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
(Ref. No:Ph.D.Regn./36/FT/05/2015/5890/04.09.2015)
முழுநேர ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.

நெறியாளர்
முனைவர் **ந. பழனிசாமி**
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.




**தமிழ்த்துறை**
**பச்சையப்பன் கல்லூரி**
சென்னை - 600 030.

**அக்டோபர் - 2018**

**முனைவர் ப. அனுராதா,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.

# துறைத்தலைவர் சான்றிதழ்

***சங்க இலக்கியம் - கலித்தொகை காட்டும் ஐந்திணை வாழ்வியல்*** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு பச்சையப்பன் கல்லூரி, தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி) பட்டப்பேற்றிற்காக திருமதி **ஏ. பிரேமா** 2015–2018ஆம் கல்வியாண்டில் நிகழ்த்திய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை– 600 030.
நாள்:

**(ப. அனுராதா)**
துறைத்தலைவர்

முனைவர் **ந. பழனிசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.

# நெறியாளர் சான்றிதழ்

***சங்க இலக்கியம் - கலித்தொகை காட்டும் ஐந்திணை வாழ்வியல்*** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு பச்சையப்பன் கல்லூரி, தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி) பட்டப்பேற்றிற்காக திருமதி **ஏ. பிரேமா** 2015–2018ஆம் கல்வியாண்டில் நிகழ்த்திய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை– 600 030. **(ந. பழனிசாமி)**
நாள்: நெறியாளர்

திருமதி **ஏ. பிரேமா,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்),
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை – 600 030.

# ஆய்வாளர் உறுதிமொழி

***சங்க இலக்கியம் - கலித்தொகை காட்டும் ஐந்திணை வாழ்வியல்*** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்பேற்றிற்காக முனைவர் **ந. பழனிசாமி** இணைப்பேராசிரியர் அவர்களின் மேற்பார்வையில் பச்சையப்பன் கல்லூரி, தமிழ்த்துறையில் 2015–2018 வரை எனது ஆய்வு நிகழ்த்தப்பட்டது. இந்த ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை–600 008. **(ஏ. பிரேமா)**
நாள் : ஆய்வாளர்

# நன்றியுரை

**சங்க இலக்கியம் - கலித்தொகை காட்டும் ஐந்திணை** t hœÉ a š என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு இசைவு அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பச்சையப்பன் கல்லூரியில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர் (பிஎச்.டி.) படிப்பினை மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த கல்லூரி மேனாள் முதல்வர் முனைவர் **பி. கஜிவரதன்** அவர்களுக்கும், முதல்வர் முனைவர் **என். சேட்டு** அவர்களுக்கும், என் பணிவு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பச்சையப்பன் கல்லூரி தமிழ்த்துறையில் எனது ஆய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்த தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **ப. அனுராதா,** தமிழ்த்துறைத் துணைத்தலைவர் முனைவர் **எம்.எஸ். புனிதவதி** அவர்களுக்கும் உளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுத் தலைப்பின் கீழ் ஆய்வு நிகழ்த்தத் தேவையான ஆலோசனைகளை வழங்கி, என்னை நெறிப்படுத்தி ஆய்வினைச் செம்மையுற முடிப்பதற்கு நல்வழிகாட்டியாகச் செயல்பட்டு, சிறந்த முறையில் வழி நடத்திச் சென்ற நெறியாளர் முனைவர் **ந. பழனிசாமி** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்விற்கு உதவிய **தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் வளர்ச்சிக்குப் பெரும்பங்கை அளித்து, ஆய்வினை முடிப்பதற்கு ஊன்றுகோலாகவும், பக்கபலமாகவும் இருந்த என் பெற்றோர் திருமதி **ஏ. கல்யாணி**, திரு. **அ. ஏகாம்பரம்** அவர்களுக்கும், ஆய்வினை முடிக்க

உதவியதோடு என்னை ஊக்கப்படுத்திய என் உடன் பிறந்தவர்களான **ஏ. நர்மதா, ஏ. ரம்யா, ஏ. பிரியங்கா** ஆகியோருக்கும், என்னுடைய எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நான் வளர்ச்சியடைய முனைவர் பட்டப்படிப்பினை படிக்க வைத்த, என் கணவர் முனைவர் **இல. வெங்கடேசன்** அவர்களுக்கும், என் அன்பு மகன்கள் **வெ. நீதிச்செல்வன், வெ. ஈஸ்வரச்செல்வன்** அவர்களுக்கும் என் உள்ளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வுப் பணிக்குத் தேவையான நூல்களை எமக்கு வழங்கிய **பச்சையப்பன் கல்லூரி நூலகத்திற்கும், கன்னிமாரா நூலகத்திற்கும், உலகத் தமிழாராய்ச்சி நூலகத்திற்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகத்திற்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின் போது நட்புறவோடு நல்லமுறையில் கணினித் தட்டச்சு செய்து கொடுத்து உதவிய **டுடே கிராஃபிக்ஸ்** நிறுவனர் **திரு. ரெ. பாபு** அவர்களுக்கும் என் நன்றி. என் ஆய்வு சிறப்பாக அமைய உதவிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றி.

**ஏ. பிரேமா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பா.எண். | – | பாடல் எண் |
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| மு.கு.நூ. | – | முன்னர் குறிப்பிட்ட நூல் |
| மேலது. | – | மேலே குறிப்பிட்ட நூல் மற்றும் பக்கம் |

# பொருளடக்கம்

## முன்னுரை

சங்க இலக்கியங்கள் தமிழர்களின் காதலையும் வீரத்தையும் போற்றிய பனுவல்களாகும். இவற்றை அகம் என்றும் புறம் என்றும் பிரித்து வழங்கினர். தொல்காப்பியரின் அக, புறஇலக்கணத்திற்குச் சான்றாகச் சங்க இலக்கியம் திகழ்கிறது. அகம் என்பது களவு, கற்பு என்னும் இருவகைகை கோளில் நிழ்கின்றகாட்சிகளைக் காட்டுவதாகவும் புறம் என்பது அரசர்களின் வீரம், கொடை, புகழ் போன்றவற்றைச் சுட்டுவதாகவும் அமைந்துள்ளன. இதனை அக்காலப்புலவர்கள் தெளிவுறதம் பாடல்களில் காட்டிச் சென்றுள்ளனர். சங்கப்பாடல்களைத் தொகுத்தவர்கள் அடிஎண்ணிக் கைகொண்டுஅவற்றை பிரித்தும் தொகுத்தும் எட்டுத் தொகை என்றும் பத்துப்பாட்டும் என்றும் பெயரிட்டு வழங்கினர்.

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் கலித்தொகை ஒன்றாகும். இது ‘கற்றறிந்தார் ஏத்தும் கலி’ எனச் சான்றோர்களால் சிறப்பிக்கப்பட்ட நூல். பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என ஐந்து திணைகளையும் ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். கடவுள் வாழ்த்துப் பாடல், பாலைக்கு முப்பத்தைந்து பாடல்களும் குறிஞ்சிக்கு இருபத்தொன்பது பாடல்களும் மருதத்திற்கு முப்பத்தைந்து பாடல்களும் முல்லைக்குப் பதினேழு பாடல்களும் நெய்தலுக்கு முப்பத்து மூன்று பாடல்களும் என மொத்தம் 150 பாடல்களின் தொகுப்பாக இந்நூல் விளங்குகிறது. சேரமான் பெருங்கடுங்கோ பாலையையும், கபிலர் குறிஞ்சியையும், இளநாகனார் மருதத்தையும், சோழன்நல்லுருத்திரன் முல்லையையும், நல்லந்துவனார் நெய்தலையும் பாடியுள்ளனர். ஐம்பெரும் புலவர்களில் இருவர் அரசர்களாக விளங்கியுள்ளனர். நெய்தல் திணைக்கான பாடல்களைப் பாடியுள்ள நல்லந்து வனாரே இந்நூலைத் தொகுத்துள்ளார்.

கலித்தொகைப் பாடல்களில் பண்டைத் தமிழரின் செம்மாந்த வாழ்வும், அவர்களின் நாகரிகச் செம்மையும், சமுதாய ஒழுங்கும், பழக்க வழக்கங்களும் போற்றற்குரிய நிலையில் அமைந்துள்ளன. வாழ்க்கையும் குறிக்கோளும் இயற்கையைப் பொறுத்தே அமைகின்றன என்பதைக் கலித்தொகைப் பாடல்கள் தெளிவுற உணர்த்துகின்றன. களவு, கற்புகுறித்த ஒழுக்கங்களையும் சுவைபடப் புலப்படுத்துகின்றன.

**ஆய்வுத் தலைப்பு**

"சங்க இலக்கியம் கலித்தொகைக் காட்டும் ஐந்திணை வாழ்வியல்" என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வின் கருதுகோள்**

தமிழ் இலக்கியங்கள் அகம், புறம் என்ற இரு பெரும் பிரிவுகளைக் கொண்டதாகும். இவற்றுள் அகம் என்பது உள்ளம் நிறைந்த காதலையும் அந்தக் காதலால் அமைந்த வாழ்வின் சிறப்புக் கூறுகளையும் எடுத்தியம்புவனவாகும். ஐந்திணைகளையும் அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்ட கலித்தொகைப் பாடல்கள் அகத்திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் மூன்றையும் கொண்டிருக்கின்றன. முதற்பொருளாகிய நிலம், பொழுது குறித்தும் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தெய்வம், உணவு, விலங்கு, மரம் என்னும் கருப்பொருள் குறித்தும் புணர்தல், பிரிதல் முதலான உரிப்பொருள் குறித்தும் பாடப்பட்டுள்ளது. கலித்தொகை அக இலக்கியம் என்பதையும் தாண்டி இன்றைக்கும் மனித குலம் பின்பற்ற வேண்டிய அறநெறிச் சாரங்களையும் பண்பாட்டு விழுமியங்களையும் எடுத்துரைக்கும் நூல் என்பதைக் கருதுகோளாக முன்வைத்து இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு நோக்கம்**

கலித்தொகை பதிப்புகளும் கலித்தொகை பற்றிய ஆய்வு நூல்களும் என வரலாற்று நோக்கில், பண்பாட்டு நோக்கில் என்று ஆய்வு செய்தவர்கள் மிகப் பலராக அமைந்துள்ளனர். கலித் தொகைப் பற்றிய ஆய்வு நூல்களும் கருத்தரங்கக் கட்டுரைப் பொழிவுகளும் எனப் பலவாறு இன்றளவிலும் வெளிவந்த வண்ணம் உள்ளன. மனித குலம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை வாழ்வியல் தேவைகளுக்கான போராட்டங்கள் நடக்கின்றன. இந்தத் தேடல் போராட்டங்கள் அகவாழ்வு, புறவாழ்வு என்னும் இரு கூறுகளுக்குள் அடங்கிவிடுகின்றன.

ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது தனி மனிதனில் தொடங்கி குடும்பம், அரசியல், சமுதாயம் அனைத்தையும் உள்ளடக்கியதாக அமைகின்றன. அறிவியல்யுகம் என்று போற்றப்படுகின்ற இந்த நூற்றாண்டிலும்

வாழ்வியலுக்குத் தேவையான நற்கருத்துகளையும் காதல் கனிந்த வாழ்க்கையையும் மனிதம் போற்றும் அறச்சிந்தனைகளையும் பிறவாழ்வியல் உண்மைகளையும் தெளிவுபடுத்தி அவற்றின் மூலம் கலித்தொகையின் தனிச்சிறப்பை வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியங்கள் தமிழ் மொழிக்கும் இனத்திற்கும் பெருமை சேர்ப்பன ஆகும் . கற்பவர்க்குக் கலை உணர்ச்சியையும் வாழ்வியற் சிந்தனைகளையும் எடுத்துரைப்பனவாகும். என்றாலும் ஆய்வின் எல்லை கருதி ‘கற்றோர் ஏத்தும் கலி ’ எனப் புகழப்பட்ட கலித்தொகை மட்டும் ஆய்வின் எல்லையாக அமைகிறது.

**ஆய்வு மூலம்**

தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள ‘கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்’ நூல் ஆய்வு மூலமாகும்.

**முன்னாய்வுகள்**

இரா. மாயாண்டி 1980இல் எழுதிய ‘சங்க இலக்கியத்தில் கற்பனை ’ என்னும் நூலும், நா. ஆறுமுகம் 1985இல் எழுதிய ‘கலித்தொகை ஓர் ஆய்வாய்வு’ என்னும் நூலும் சு . மா. மாரியப்பன் 2008இல் எழுதிய ‘கலித்தொகை காட்டும் வாழ்வியல் மெய்மைகள்’ என்னும் நூலும் ராஜ்கௌதன் 2011இல் வெளியிட்ட‘ கலித்தொகை, பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு ’ என்னும் நூலும் இவ்வாய்வின் முன்னோடி ஆய்வுகளாகக் கொள்ளப்படுகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

கலித்தொகை பற்றிய ஆய்வு நூல்கள் , ஆய்வுக் கட்டுரைகள், திறனாய்வு, அறிஞர் தம் கருத்துகள் ஆகியன இவ்வாய்வுக்குத் துணைமை ஆதாரமாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

கலித்தொகையில் காணப்பெறும் வாழ்வியல் பற்றிய பல்வேறு நிலைகளையும் பேசுவதால் சமூகவியல் திறனாய்வு அணுகுமுறையும் விளக்க

ஆய்வு அணுகுமுறையும் ஒப்பீட்டு முறை ஆய்வு அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

முன்னுரை முடிவுரை நீங்கலாக இவ்வாய்வேடு ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. நூலமைப்பும் முதல் கரு உரிப்பொருளும்
2. காதல் வாழ்வு
3. சமுதாய வாழ்வு
4. அறச்சிந்தனைகள்
5. கற்பனை நலம்

ஆகியனவாகும்.

**இயல் :1 – நூலமைப்பும் முதல் கரு உரிப்பொருளும்**

தமிழ் இலக்கண இலக்கியங்களில் அமைந்துள்ள திணை வைப்பு முறையைக் கூறிக் கலித்தொகைப் பாடல்கள் பாலை , குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்று முறைப்படுத்தி வைக்கப்பட்டதற்கான காரணங்கள் குறித்து ஆராயப்பெறுகின்றன . மேலும் பாலைப்பாடல்கள் மற்ற திணைப் பாடல்களை விட பயனுள்ளவை , இனிய சுவை நிரம்பியவை . வாழ்வில் காணப்பெறும் உண்மைகளும் அறநெறிச் சிந்தனைகளும் கொண்டவை என்பது விளக்கப்பெறுகின்றன. முதற்பொருளாக நிலம், பொழுது கருப்பொருள்களின் வருணனைகள் இடம்பெற்றுள்ளன . ஒவ்வொரு திணையின் அகவாழ்வின் சிறப்புகள் விளக்கப்பெறும்போது மரம் , கிளை, தளிர், மலர் ஆகியவற்றின் இயல்புகளை எடுத்துரைப்பதும் விலங்குகள் பறவைகளின் வாழ்க்கை , அந்தந்தத் திணைகளின் உரிப்பொருள் சிறப்பும் சுட்டப்பட்டுள்ளது.

**இயல் :2 – காதல் வாழ்வு**

தலைவனும் தலைவியும் இயற்கை கூட்டுவிக்கச் சந்திப்பதும் அதன் பொருட்டு காதல் கொள்வதும் உள்ளத்தால் ஒன்றுபட்ட இருவரும் யாரும் அறியாது தனியிடங்களில் சந்தித்து களவொழுக்கம் பூண்டு காதலை வளர்க்கும்

பாங்கும் சுட்டப்பட்டுள்ளது . களவொழுக்கத்தின் பிறப்பிடமாகக் குறிஞ்சித் திணை திகழ்ந்தாலும் பாலை , குறிஞ்சி, முல்லை நெய்தல் ஆகிய திணைகளில் காணப்பெறும் களவுக்காதல் குறித்தும் ஆராயப்பட்டுள்ளது . தலைவனும் தலைவியும் தனியே சந்தித்தலின் இடர் கருதி விரைவில் மணமுடிக்கத் தோழி தலைவனைத் தூண்டுவதும் தலைவன் வரைவு வேண்டுவதும் தலைவியின் பெற்றோர் மறுக்க தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதும் செவிலி நற்றாய் முதலியோருக்கு அறத்தொடு நிற்பதும் விவரிக்கப்பட்டுள்ளது.

தலைவனும் தலைவியும் உள்ளத்தில் பெருக்கெடுக்கும் அன்பால் ஒருங்கிணைவதும் ஓருயிராய் வாழ்வதும் எவ்வகையாலும் பிரிவு ஏற்படின் இருவரும் செயலிழந்து போவதும் எனச் செறிந்த காதற் சிறப்பும் காதலின் மென்மையும் உண்மையும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன . பல்வேறு காரணம் பற்றிக் காதல் அரும்புவதும் தலைமகனும் தலைமகளும் உள்ளக் கலத்தலும் தினைப்புனத்தில் காதல் – வீட்டு முற்றத்தில் காதல் – ஆயமகளின் வீரக் காதல் – காதலில் உறுதி ஆகியனவும் , காதலில் ஏற்படும் ஊடலும் தலைமகளின் காதல் நெஞ்சமும் நாணுவதும் கலக்கமடைவதும் தலைமகன் மடலேறுதலும் எனத் தலைவி தன் காதல் வாழ்வு இவ்வியலில் விளக்கப்பெறுகிறது.

**இயல் : 3 – சமுதாய வாழ்வு**

கலித்தொகை நூலில் இடம் பெற்றுள்ள பண்டைத் தமிழர்களின் பழக்கவழக்கங்களையும் நாகரிகத்தின் செழுமையையும் வாழ்வியற் கூறுகளையும் ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது . மக்கள், மணம், விருந்தோம்பல், மன்னன், அரசு, ஆடை, அணிகலன்கள், நாடு, நகரம், விழா, விளையாட்டு, பொழுதுபோக்கு, நம்பிக்கைகள், கலைகள், கருவிகள் ஆகியன குறித்து இவ்வியலில் ஆராயப்படுகின்றன . மேலும் மழலைச் செல்வங்களும் அவர்களுக்கான அணிகலன்கள் குறித்தும் விளக்கப்பட்டுள்ளன . கலிப்பாடல்கள் குழந்தைகளைப் பற்றிப்பாடும் பொழுது புதல்வரைப்பற்றிப் பேசுகின்றனவே தவிர புதல்வியைப் பற்றிப் பேசவில்லை என்பதும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. ஆட்சி முறைமை , மக்கள் வாழ்க்கைமுறை , பெண்ணின் பெருமை , திருமணம் போன்றவை ஆராயப்படுகின்றன .

*ஆண்களைப் போலவே பெண்களும் விடுதலை வாழ்வு வாழ்ந்தனர் என்பது நிறுவப்பட்டுள்ளது.*

***இயல் : 4 அறச் சிந்தனைகள்***

*அறம் – வரையறை, அறம் குறித்த அறிஞர்கள் கருத்துகள் , அறத்தின் தன்மைகள், காலந்தோறும் அறம் எவ்வகையில் போற்றப்பட்டு வந்துள்ளது என்பது குறித்து இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.*

*கலித்தொகையில் மனிதகுலம் பின்பற்ற வேண்டிய அறச் சிந்தனைகளும் வாழ்வியல் உண்மைகளும் நிறைந்திருப்பது இவ்வியலின் வழியாக ஆராயப்பட்டுள்ளது. அறத்தின் இயல்பு , அது தமிழர் வாழ்வில் இடம் பெற்றுள்ள சிறப்பு ஆகியன கூறப்பட்டுள்ளன . இல்லற வாழ்வில் பின்பற்றப்பட்டுள்ள அறங்களையும் நிலையாமை அறம் குறித்தும் வாழ்நாள் , இளமை, அழகு, பொருள், காமம் ஆகிய ஐந்து பொருள்களும் நிலையாமை குறித்தும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. மேலும் பறவை, விலங்குகளின் மூலமாகவும் மனிதகுலத்திற்கு நல்லறம் போதிக்கும் பண்பு கலித்தொகை பாடல்களில் இருப்பது கண்டறிந்து உரைக்கப்பட்டுள்ளது.*

***இயல்: 5 – கற்பனை நலம்***

*கற்பனை – வரையறை குறித்தும் கற்பனை குறித்து அறிஞர்கள் வழங்கியுள்ள கருத்துகள் குறித்தும் இலக்கியங்களில் அது எவ்வாறு ஆட்சி பெற்றுள்ளது என்பது குறித்தும் அவற்றின் தன்மை குறித்தும் அதன் வகைகள் குறித்தும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.*

*கலித்தொகையில் கற்பனை நலம் குறித்து ஆராயப்பெறும் இவ்வியலில் ஐந்திணைகளைப் பாடிய புலவர்களின் கற்பனைத் திறத்தால் பாடல்கள் அனைத்தும் அழகுற வடிவமைக்கப்பட்ட எழில் நிறைந்த மண்டபமாகக் காட்சி தருவது விவரிக்கப்பட்டுள்ளது . கலித்தொகைப் பாடல்களில் காணப்படும் கற்பனைகளும் அவற்றின் தனித்தன்மைகளும் சுட்டப்படுகின்றன . அகத்திணைக்குரிய களவு , கற்பு ஆகிய இருவகை உறுதிப் பொருள்களையும் கற்பனை நயம் தோன்ற புலவர்களால் பாடப்பெற்ற நிலையினையும் இவ்வியலில் விவரிக்கப்பட்டுள்ளது.*

**முடிவுரை**

*கலித்தொகைப் பாடல்கள் இயற்கையின் எழிலைப் படம் பிடிப்பதோடு அறக்கருத்துகளையும் வாழ்வியல் உண்மைகளையும் எடுத்துரைக்கும் நீதி நூலாகவும் பண்பாட்டு விழுமியங்கள் உள்ள நூலாகவும் விளங்குகிறது என்பதை ஆய்வு நிறுவுகிறது . மேற்குறித்த ஐந்து இயல்களின் வழியாகக் கண்டறியப்பட்ட கருத்துகளின் தொகுப்பாக முடிவுரை அமைகிறது . எதிர்கால ஆய்வுக்களங்களும் ஆய்வு முடிவாகச் சுட்டப்பட்டுள்ளன.*

**துணைநூற்பட்டியல்**

*இந்த ஆய்வுக்குப் பயன்பட்ட முதன்மை ஆதாரங்களும் துணைமை ஆதாரங்களும் அகரவரிசையில் தரப்பட்டுள்ளன.*

## *இயல் - 1*

## நூலமைப்பும் முதல், கரு, உரிப்பொருளும்

*ஒரு நாட்டின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் உணர்ந்து கொள்ள உதவும் கருவிகளாகத் திகழ்வது இலக்கியங்கள் ஆகும். சங்கத் தொகை நூல்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இதற்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன. எட்டுத்தொகையில் ஒன்றாகிய கலித்தொகை சங்ககால அகமரபினை விளக்குவதாக உள்ளது. பாலைக் கலியைப் பெருங்கடுங்கோனும், குறிஞ்சிக் கலியைக் கபிலனும், மருதக் கலியை மருதனிளநாகனும், முல்லைக்கலியைச் சோழன் நல்லுருத்திரனும் நெய்தற் கலியை நல்லந்துவனாரும் இயற்றியதாகக் கூறுவர். இதனை வெளிப்படுத்துவதாகப் பழைய வெண்பா ஒன்றும் உண்டு.*

*பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி*

*மருதனிள நாகன் மருதம் – அருஞ்சோழன்*

*நல்லுருத்திரன் முல்லை நல்லந்துவன் நெய்தல்*

*கல்விவலார் கண்ட கலி*[1]

*என்பது அதுவாகும். ஆனால் இந்த வெண்பா பிற்காலத்தில் ஒருவரால் எழுதிச் சேர்க்கப்பட்டது என்ற கருத்தும் நிலவுகின்றது.*

*கலித்தொகையைக் 'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்றும் 'கல்விவலார் கண்ட கலி' என்றும் சான்றோர்கள் புகழ்ந்துரைப்பர். பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய திணைகளைப் பாடுவதில் வல்லவர்களைக் கொண்டு நல்லந்துவனார் இந்நூலை எழுதவைத்திருக்கிறார். இறுதியாகத் தாம் நெய்தல் திணையை எழுதி, நூலுக்குக் கடவுள் வாழ்த்தையும் சேர்த்து அமைத்துள்ளதாகக் கூறுவர். ஆனால் இதற்கெல்லாம் முற்றும் முரணாக நெய்தற் கலியைப் பாடிய நல்லந்துவனார் மட்டுமே இந்நூலை இயற்றியதாகச் சி.வை. தாமோதரம்பிள்ளை கூறியுள்ளதும் இங்குச் சுட்டத்தக்கது.*

## நில வரிசை முறை

தமிழில் நமக்குக் கிடைக்கும் முழுமுதல் இலக்கண நூல் தொல்காப்பியம் ஆகும். தொல்காப்பியரால் எழுதப்பட்ட இந்நூல் பிற்காலத்தில் பல நூல்களின் தோற்றுவாய்க்கு அடித்தளமாக அமைந்துள்ளது. இது எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. மூன்றாவதாக அமைந்த பொருளதிகாரத்தின் முதலாவது இயல் அகத்திணையியலாகும். இது அகப்பொருள் இலக்கணத்தைத் தெளிவாக வரையறுப்பதாக அமைந்துள்ளது.

இவ்வியலில் தொல்காப்பியர் நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்காக வகைப்படுத்துகின்றார். அவரது வகைப்பாட்டை,

மாயோன் மேய காடுறை உலகமும்

சேயோன் மேய மைவரை உலகமும்

வேந்தன்மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும்

முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்

சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே[2]

எனும் நூற்பா எடுத்துக் காட்டுகின்றது. காடுறை உலகத்தை முல்லை எனவும் மைவரை உலகத்தைக் குறிஞ்சியெனவும் தீம்புனல் உலகத்தை மருதமெனவும் பெருமணல் உலகத்தை நெய்தலெனவும் கொள்ளவேண்டும் என்பது அவரது கருத்தாகும். இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர்,

> இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது... புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன் பின் வைத்தார். புணர்ச்சிக்குப் பின் ஊடல் நிகழ்தலின் அதன்பின் மருதத்தை வைத்தார். பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின் கண் வைத்தார்" [3]

என்று உரையெழுதுகிறார். இவரது இவ்வுரை தொல்காப்பியரின் நில வரிசை முறைக்கான காரணத்தைச் சுட்டுகின்றது. ஆனால்இளம்பூரணர்,

> உம்மை எதிர்மறையாகலான் இம்முறையன்றிப் பிறவாய்ப்பாட்டாற் சொல்லவும்படும் என்றவாறு. காடு, நாடு, மலை, கடல் என்பதே பெருவழக்கு"[4]

என்று கருத்துரைத்துள்ளார். நிலப் பாகுபாட்டு முறையில் முல்லையை முதலில் கூறிய தொல்காப்பியர் உரிப்பொருள் பற்றிக் கூறும்பொழுது குறிஞ்சியை முதலில் கூறுகின்றார். அந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர்,

> அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறிப் புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும் அது தலைவன் கண்ணதாகிய சிறப்பானுந் தலைவி பிரிவிற்குப் புலனெறி வழக்கின்மையானும் பிரிவினை அதன்பின் கூறிப் பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது தலைவனேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் பெரும்பான்மை தலைமகளதேயாகலின் அவ்விரங்கற் பொருளை அதன்பிற் கூறி இந்நான்கு பொருள்கட்கும் பொதுவாதலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் ஊடலை அதன்பிற் கூறி இங்ஙனம் முறைப்படுத்தினார்.[5]

என்று கருத்துரைத்துள்ளார். நிலப் பாகுபாட்டு அடிப்படையிலிருந்து உரிப்பொருள் அடிப்படையிலும் நிலவரிசை முறை வேறுபட்டதற்கான காரணத்தை நச்சினார்க்கினியர் தெளிவுபடுத்தியுள்ளார்.

**அகப்பாடல்களின் நோக்கம்**

சங்க அகப்பாடல்கள் அக்காலத்தில் நிலவிய காதல் முறையையும் இல்வாழ்க்கையையும் இயற்கை பின்னணி, நில அமைப்பு ஆகியவற்றோடு இணைத்து பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களின் நோக்கம் குறித்து பகவதி கோவிந்தன்,

> நிலத்தையோ, பொழுதையோ அவற்றை நிலைக்களனாகக் கொண்ட கருவையோ விளக்குவது, அகப்பாடல் நோக்கம் அன்று. உரிப்பொருளை

விளக்குவதே அதன் நோக்கமாகும். உரிப்பொருளை விளக்க முதல் கரு உரி என்னும் இரு பொருள்களும் துணையாகின்றன.[6]

என்று கருத்துரைத்துள்ளார். தொல்காப்பிய உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் அகப்பாடல்களில் கருப்பொருளும் உரிப்பொருளுமே சிறந்தன. முதற்பொருள் அத்துணை சிறப்பில என்று கருதுகின்றார்.

**அகத்திணையியல் நெறி**

தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாடு குறித்து பெ. மாதையன் பின்வருமாறு,

> கைக்கிளை முதலான எழுதிணைக் கோட்பாடு, இவற்றில் நிலம் பெறுவன குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நான்கு, நடுவனது எனப்பட்ட பாலை குறிஞ்சி முதலான நான்கிலும் இயலும் இயல்பு உடையதாக இருப்பது, அந்த ஐந்து திணைகளும் காலம் என்ற முதற்பொருளை உடையனவாக வரும் நிலை, புணர்ந்த முதலான ஐந்து ஒழுக்கங்கள் ஐந்திணைகளுக்கும் உரியனவாக வரும் முறைமை, முதல், கரு, உரி எனப்பட்ட அகத்திணைக்கான முப்பொருள்களில் முதற்பொருட்களில் ஒன்றான நிலம் மயங்காமை, ஒழுக்கம் எனப்பட்ட உரிப்பொருளும் பூ, புள் முதலான கருப்பொருள்களும் மயங்கி வருதல், உரிப்பொருள் உடையன அல்லாதனவும் நிலமும் பொழுதும் வகுக்கப்படாதனவும் இணையான புறதிணைகள் மட்டுமே வரையறுத்து உரைக்கப்பட்டவுமான கைக்கிளையும் பெருந்திணையும் பிற திணைகளில் நிகழும் பொது இயல்பு என்பனவே தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாடுகளாக உள்ளன.[7]

என்று விளக்கியுள்ளார். இவரது இக்கருத்துரை தொல்காப்பியரின் அகத்திணை நெறியினைச் சுருங்க உரைப்பதாகவும் தெளிவுபடுத்துவதாகவும் அமைந்துள்ளது.

## கலித்தொகை முறை வைப்பு

தொல்காப்பியர் மேலது நூற்பாவின் இறுதியில் "சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[8] என்று கூறியிருக்கிறார். இந்த இறுதி அடியைக் கொண்டு நச்சினார்க்கினியர்,

> முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்புழிச் சொல்லாத முறையாற் சொல்லவும் படுமென்றலின் இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் என இம்முறையே கோத்தார் நல்லந்துவனார்.[9]

என்று கருத்துரைத்துள்ளார். கலித்தொகையைப் பதிப்பித்த பொ.வே. சோமசுந்தரனார் நச்சினார்க்கினியரின் இந்த விளக்கம் பொருத்தமான அமைதியாகத் தோன்றவில்லை என்று குறிப்பிட்டுள்ளார். நல்லந்துவனார் காரணமே இல்லாமல் இவ்வாறு தொகுத்திருக்க மாட்டார் என்றும் அதற்குப் பல காரணங்கள் உள்ளன என்றும் சோமசுந்தரனார் சுட்டுகின்றார்.

நல்லந்துவனார் பாலைக்கலியை முதலாவதாக அமைத்ததற்கான காரணமாக ஊகத்தின் அடிப்படையில்,

> பாலைக்கலியின்கண் செவ்வியும் தலைவியினது பண்பும் தேர்ந்துகொள்ளாமல் பிரிதற்கு முயல்கின்ற தலைவனுக்கு தோழியாதல் தலைவியாதல் ஆங்காங்கு கூறுகின்ற அறிவுரைகள் நம்மனோர்க்கும், யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை என்னும் இவற்றை நன்கு அறிவுறுத்தி மெய்யறிவு பிறப்பிக்கும் நீர்மையுடையனவாம். ஆதலால் இப்பாலைக் கலி ஒரு மெய்ஞ்ஞான நூலாகவே திகழ்கிறது. மெய்யறிவு பெறுதலே மக்கள் பிறப்பின் பயனாதலின் ஆசிரியர் நல்லந்துவனார் இப்பாலைக் கலியை முதன்மையுடையதாகக் கருதி இக்கலித்தொகையின் முன்னிருத்தினார் என்றறிகின்றோம்"[10]

என்று பொ.வே. சோமசுந்தரனார் கருத்துரைத்துள்ளார். இதுவும் இவரது சொந்த கருத்தாகவே உள்ளது. ஏனெனில் கலித்தொகையைத் தொகுத்ததாக கூறப்படுகின்ற நல்லந்துவனார் இது குறித்து எந்த கருத்தையும் கூறவில்லை

என்பது சுட்டத்தக்கது. ஆனால் கலித்தொகையைப் பதிப்பித்த இ.வை. அனந்தராமையர்,

> ஒன்றிலேனும் முதலிடம் பெறாத பாலைத் திணையை இவர் முதலில் நிறுவியதற்குக் காரணம் யாவரும் இத்திணையை முதலில் வைக்காமையால் இது முதலில் வருமோ வாராதோ என்று ஐயுற்று மயங்கி வாராதென்று திரியவுணர்வார்க்கு அத்திரிபுணர்ச்சியை நீக்கல் கருதிப்போலும்; அன்றி, பாலை நானிலப் பொதுவாதலின் பொதுவை முற்கூறிச் சிறப்பைப் பிற்கூறுவதும் மரபென்பது பற்றி எனினுமாம்" [11]

என்கிறார். இந்தக் கருத்துரை ஆய்வாளர் பலருக்கும் உடன்பாடு இல்லை என்பதை அறியமுடிகிறது. இவர் கூறுகின்ற காரணம் ஏற்றுக் கொள்கிற காரணமாக அமையவில்லை என்பது இங்குச் சுட்டத்தக்கது. ஆனால் கலித்தொகை சொற்பொழிவு நிகழ்த்திய கே. ஞானாம்பாள் அம்மையார்,

> பாலை என்பது முழுவதுந் துன்பமன்று. பிரிவானோ என்று அஞ்சுவது. பெரும்பாலும் அஞ்சும்பொழுது அன்பின் நொய்மை நன்கு புலப்படும்... எந்தப் புலவனும் துன்பத்தைப் பற்றிச் சொல்லும்பொழுதுதான், தான் மனித தத்துவத்தையறிந்துள்ள முறையை நன்குணர்த்த முடியும்.[12]

என்று கூறியுள்ளார். இது குறித்து ஆராய்ந்த நா. ஆறுமுகம்,

> பாலைக்கலிப்பாடல்கள் மற்ற கலிப்பாக்களைவிட சுவையும் பயனும் நிரம்பியவை. வாழ்வியல் உண்மைகளையும் அறநெறி விளக்கங்களையும் கொண்டவை. அதனாலும் அவை முதலில் இடம்பெற்றிருக்கலாம்.
>
> கைக்கிளை, பெருந்திணை ஆகிய ஒழுக்கங்களைக் கூறி உள்ளடக்கத்தில் புரட்சி செய்த கலித்தொகை, உருவத்திலும் அகநானூற்றைத் தவிர எந்த நூலும் முதலில் கொள்ளாத பாலையை முதலில் கொண்ட திணைவைப்பு முறையிலும் புரட்சிக் கோலத்தைக் கொண்டிலங்குகிறது எனலாம். [13]

என்று கருத்துரைத்துள்ளார். பாலைக்கலி தவிர ஏனைய கலிப்பாக்களில் இல்லாத சுவையும் பயனும் இதில் என்ன உள்ளது என்பது புலப்படவில்லை.

*ஆனால் இவர் குறிப்பிட்டது போல பாலைக்கலியில் வாழ்வியல் உண்மைகளும் அறங்களும் மிகுதியாக உணர்த்தப்பட்டுள்ளன. தொல்காப்பியர் குறிப்பிட்ட கைக்கிளை, பெருந்திணை இலக்கணத்திற்கு ஏற்ப தான் கலித்தொகை அமைந்துள்ளது. ஆக இதில் ஒன்றும் புரட்சி இருப்பதாகத் தோன்றவில்லை.இதைப்போல பாலையை முதலில் வைத்திருப்பது ஒரு மரபு மாற்றமே ஒழிய அதனைப் புரட்சியாகக் கொள்ள முடியாது.*

*ஆகவே பொ.வே. சோமசுந்தரனார், இ.வை. அனந்தராமையர், ஞானாம்பாள் அம்மையார், நா. ஆறுமுகம் ஆகியோர் பாலைக்கலி முதலில் வைக்கப்பட்டதற்கு காரணத்தைச் சுட்டியுள்ளனர். ஆனால் இக்காரணம் எல்லாம் அவரவரது தற்கருத்து என்னும் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. நூலைத் தொகுத்ததாகக் கூறுகின்றவர் எந்தக் கருத்தையும் இது குறித்து முன்வைக்கவில்லை என்பது இங்குச் சுட்டத்தக்கது.*

**பொருள் மூன்று**

*அகத்திணை இலக்கணத்தை விரிவாகக் கூறிய தொல்காப்பியர் பொருளை மூன்றாக வகைப்படுத்துகின்றார். அவை, 1. முதல், 2. கரு, 3. உரி என்பனவாகும். இதனை,*

*முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே*

*நுவலுங் காலை முறைசிறந் தனவே*

*பாடலுட் பயின்றவை நாடுங் காலை*[14]

*எனும் நூற்பா வெளிப்படுத்துகிறது.*

*தொல்காப்பிய உரையாசிரியர்களில் காலத்தால் முற்பட்டவராகிய இளம்பூரணர்இந்நூற்பாவிற்கு,*

> *சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற பொருளை ஆராயுங்கால், முதற்பொருள் எனவும் கருப்பொருள் எனவும் உரிப்பொருள் எனவும் சொல்லப்பட்ட மூன்று பொருண்மையுமே (காணப்படும்) அவை சொல்லுங்காலத்து முறைமையாற் சிறந்தன"* [15]

என்று உரையெழுதியுள்ளார். முறைமை சிறத்தல் என்பதற்கு, ஒரு செய்யுளில் முதற்பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் வந்தால் முதற்பொருளால் திணையாகும் என்பதும் முதற்பொருள் தவிர ஏனைய இரண்டும் வந்தால் கருப்பொருளால் திணையாகும் என்பதும் உரிப்பொருள் மட்டும் வந்தால் அதனால் திணையாகும் என்பதும் இளம்பூரணர் கருத்து.

பல்வேறுபட்ட தகவல்களையும் வழங்கும் வாழ்வியல் களஞ்சியம் முதற்பொருள், உரிப்பொருள் குறித்து,

> இன்ன நிலத்தில் இன்ன காலத்தின் துணையினால் இங்குள்ள மக்கள் இத்தகைய மனநிலையுடன் இணைந்த செயல்களை இயல்பாகவே செய்வார்கள் என நிலத்தையும் நிலத்தோடு வரையறை பெற்ற செயலையும் இணைத்து உரிப்பொருள் என்ற தலைப்பில் எடுத்து விளக்குகிறது. தொல்காப்பியம் உரிப்பொருள் என்பதை அவ்வந்நிலத்து மக்களின் ஒழுக்கத்தை வரையறை செய்து உரிமையாக்கப்பெற்ற பொருள் என்ற அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது” [16]

என்று கருத்துரைத்துள்ளது. இது தொல்காப்பியரின் கருத்தைச் சுருங்க உரைப்பதாக அமைந்துள்ளது.

பாடல்களில் பயின்று வரும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் குறித்து அறிஞர் பலரும் கருத்து தெரிவித்துள்ளனர். அந்த வகையில் தனிநாயகம் அடிகள்,

> அகவாழ்வின் சிறப்பை விளக்கும்போது பின்புலம் பற்றிய உணர்வு சிறப்பாக அமைதல் வேண்டும். முதல் கருப்பொருள் ஆகிய இரண்டும் பின்புல வருணனைக்காகவே கூறப்பெறுகின்றன.[17]

என்று முதற்பொருளும் கருப்பொருளும் பாடலில் கூறப்படுவதற்கான அவசியத்தை வெளிப்படுத்துகின்றார். நா. ஆறுமுகம்,

> மனித வாழ்க்கையாகிய நாடகத்துக்கு முதலும் கருவும் ஆகிய இயற்கை ஆடரங்காக அமைந்துள்ளது[18]

என்று கருத்துரைத்துள்ளார். இவரும் பாடலில் முதற்பொருளும் கருப்பொருளுமே சிறந்தது என்னும் கருத்தினைக் கொண்டிருந்தார் என்பது புலப்படுகின்றது. இராம பெரிய கருப்பன்,

> தமிழ் அகத்திணைப் பாடல்களில் கருத்துப் பின்னப்படும் முறையை முதல்கரு உரி எனப் பகுப்பது மிகச் சிறந்த நாடக உத்தியாகும்.[19]

என்று குறிப்பிட்டுள்ளார். நா. ஆறுமுகம் நாடகத்துக்கு முதலும் கருவும் இன்றியமையாதது எனக் குறிப்பிட இராம பெரிய கருப்பன் அவற்றோடு உரிப்பொருளையும் சேர்த்துக் கொண்டு முப்பொருளுமே நாடகத்துக்கு உரியன என்கிறார்.

தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் முப்பொருளில் எது சிறந்தது; எது முதன்மையானது என்பது குறித்து,

> உரிப்பொருள் விளங்கக் கருப்பொருள் துணை செய்யும். கருப்பொருளோடு உரிப்பொருளுக்குரிய தொடர்பை மேலும் விளக்க முதற்பொருள் உதவும் என்றாலும் உரிப்பொருள் தான் கதை. கதைக்குக் கால் உண்டு என்பார்கள். அந்தக் கால் போல் வருவனவே முதல் கருப்பொருள்களாம்"[20]

என்று கூறுகின்றார். இவரது கூற்று முப்பொருள்களிலும் ஒன்றுக்கொன்று உள்ள உறவினை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இவரது கருத்துப்படி உரிப்பொருளே சிறந்தது என்பது புலனாகின்றது.

பாடல்களில் அமைந்துள்ள முதல், கரு, உரிப்பொருள்களில் ஒன்றுக்கொன்று அமைந்துள்ள உறவுநிலை குறித்து கா. அப்பாத்துரை,

> ஐந்திணை நெறியை ஓர் அழகான தாமரை மலருக்கு ஒப்பிட்டால் அதன் மலர்ச்சியில் முதலில் விரியும் புறவிதழ்களாக முதற்பொருளையும் இடையிதழ்களாகக் கருப்பொருளையும் அகவிதழாக உரிப்பொருளையும் கொள்ளலாம்.

> ஐந்திணை நெறி ஓர் அழகான மாடமெனில் அதன் அடித்தளம் – ஐந்திணை நிலம் என்றும், மோடு – காலம் என்றும் உத்தரங்கள் விட்டங்கள் – பெரும்பொழுதுகள் என்றும் வாரிகள் வரிக்கைகள் – சிறுபொழுதுகள் என்றும் மதில்கள் சுவர்கள் தூண்கள் – கருப்பொருள்கள் என்றும் மாடத்தின் புறவாரங்கள் அல்லது தோட்டம் – நிலமில்லாத திணைகளாகிய கைக்கிளையும் பெருந்திணையும் என்றும் ஐந்திணை நிலத்தில் நடைபெறும் வாழ்க்கை – உரிப்பொருள் என்றும் கொள்ளலாம்.[21]

என்று உருவகித்துக் காட்டுகின்றார். இவரது இக்கருத்துரை அழகியல் நிலையில் அமைந்துள்ளது என்பதை உணரமுடிகிறது. மேலும் இவர்,

> இடமும் காலமும் ஆகியன முதற்பொருள் நாடக திரை சீலை எனில், திரையில் தீட்டப்பட்டுள்ள மரம், செடி, கொடி, விலங்கு முதலியவை கருப்பொருளாகும். சுருங்கச் சொன்னால் முதற்பொருளும் கருப்பொருளும் ஆகிய அரங்கில் உரிப்பொருளாகிய உணர்ச்சிச் செயற்பாடு நடைபெறுகின்றது.[22]

என்று கருத்துரைத்துள்ளார். மற்ற தொகை நூல்களைவிட கலித்தொகையின் கலிப்பாடல்களில் மேலே குறிப்பிட்ட கருத்து சிறப்புற அமைந்துள்ளது என்றும்இவர் குறிப்பிட்டுள்ளார்.

## முதற்பொருள்

> முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
>
> இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே[23]

என்று தொல்காப்பியர் முதற்பொருளுக்கு இலக்கணம் வகுத்துள்ளார். நிலம், பொழுது இரண்டின் இயற்கையைச் சுட்டுவது முதற்பொருள் என்று உலகின் இயல்பை உணர்ந்தவர்கள் கூறுவர் என்பது இளம்பூரணர் கருத்தாகும். மேலும் அவர்,

நிலம் எனவே, நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீயிற்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்"[24]

என்று நிலத்திற்கு வரையறை தருகின்றார். இதைப் போலவே காலத்திற்கும்,

காலமாவது மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு, உகம் எனப் பலவகைப்படும்.[25]

என்று கருத்துரைத்துள்ளார். ஆனால் நச்சினார்க்கினியர்,

முதல் என்று சிறப்பித்துக் கூறப்படுவது நிலனும் பொழுதும் என்னும் இரண்டினது இயற்கை நிலனும் இயற்கைப் பொழுதுமென்று கூறுப, இடமுங் காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.[26]

என்று கருத்துரைத்துள்ளார். மேலும் இவர், இயற்கை என்றதனால் செயற்கை என்பதற்கும் விளங்கம் வழங்கியுள்ளார். அது வருமாறு:

இயற்கையெனவே செயற்கை நிலனுஞ் செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் 'பாத்திய' நான்கு நிலனும் இயற்கை நிலனாம். ஐந்திணைக்கு வகுத்த பொழுதெல்லாம் இயற்கையாம்; செயற்கை நிலனும் பொழுதும் முன்னர் அறியப்ப்படும். முதல் இயற்கை வென்றதனாற் கருப்பொருளும் உரிப்பொருளும் இயற்கையும் செயற்கையுமாகிய சிறப்பும் சிறப்பின்மையும் உடையவாய்ச் சிறுவரவினவென மயக்கவகையாற் கூறுமாறு மேலே கொள்க. இனி நிலத்தோடு காலத்தினையும் முதலென்றவிற் காலம் பெற்று நிலம் பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக்காலத்து நிகழும் கருப்பொருளும் கொள்க. அது முன்னர்க் காட்டிய உதாரணத்துட் காண்க.[27]

என்று குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் குறிப்பிட்ட முதற்பொருள் இலக்கணத்திலிருந்து மாறுபடாத நம்பியகப் பொருள் ஆசிரியர் நிலமாகிய முதற்பொருளின் வகையை,

*வரையே சுரமே புறவே பழனந்*

*திரையே அவையவை சேர்தரும் இடனே*

*என ஈர் ஐவகைத்து அனையியல் நிலமே*[28]

*என்று பத்து வகையாகப் பாகுபடுத்துகின்றார். பொழுதினை பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டாகப் பிரிக்கும் இவர் பெரும்பொழுதின் வகையை,*

*காரே கூதிர் முன்பனி பின்பனி*

*சீரிள வேனில் வேனில் என்றாங்கு*

*இருமூன்று திறத்தது தெரிபெரும் பொழுதே*[29]

*என்று வகைப்படுத்துகின்றார். இதைப்போல சிறுபொழுதையும்,*

*மாலை யாமம் வைகறை எற்பாடு*

*காலை வெங்கதிர் காயும் நண் பகலெனக்*

*கைவகைச் சிறுபொழுது ஐவகைத் தாகும்*[30]

*என்று ஐந்துவகையாகப் பாகுபடுத்துகின்றார்.*

*தொல்காப்பியரும் நாற்கவிராச நம்பியும் ஐந்திணைக்கும் உரிய பொழுதுகளை வரையறுத்துள்ளனர். இந்தப் பொழுதுகள் குறித்து பிற்கால ஆய்வாளர்கள் பலரும் கருத்துரைத்துள்ளனர். இவர்களில் பகவதி கோவிந்தன்,*

> *மனித வாழ்வு விளக்கம் பெற இயற்கை எத்துணையளவிற்கு உறுதுணையாக நிற்கின்றது என்பதை முதற்பொருள்களாகும் நிலமும் பொழுதும் தெளிவாக்குகின்றன*[31]

*என்று குறிப்பிட்டுள்ளார். மு.வரதராசன்*

> *இயற்கை வழங்கும் சாட்சிகள் சில பருவங்களிலும், இடங்களிலும் எல்லையற்ற சிறப்பினையுடையனவாய் மனிதனுடைய நாடி நரம்புகளும் இச்செயல்களையும் கட்டுப்படுத்துகின்றன'*[32]

*என்று கருத்துரைத்துள்ளார்.*

*தொல்காப்பியர் பொழுதை பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டாகப் பாகுபடுத்துகின்றார்.*

**பெரும்பொழுது**

*ஓர் ஆண்டினை ஆறாகப் பிறிக்கும் முறையைப் பெரும்பொழுது என்பர். அவை, கார், கதிர், முன்பனி, பின்பனி, முதுவேனில், இளவேனில் என்பனவாகும். ஒவ்வொரு பெரும்பொழுதும் இரண்டு மாதங்களைக் கொண்டிருக்கின்றன.*

***சிறுபொழுது***

*ஒரு நாளினை ஆறாகப் பிரிப்பதைச் சிறுபொழுது என்பர். அவை, வைகறை, விடியல், நண்பகல், ஏற்பாடு, மாலை, யாமம் என்பனவாகும்.*

## ***கலித்தொகையில் முதற்பொருள்***

*பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணை அடிப்படையிலேயே கலித்தொகையில் அமைந்துள்ள நிலம் பொழுதுகள் பற்றி இங்கு ஆராயப்படுகின்றன.*

***பாலைக்குரிய நிலம்***

*மழைவளம் இல்லாமல் வரண்ட நிலத்தைப் பாலை என்று கூறுவர். இந்நிலம் வெம்மையுடையது, வழிச் செல்வோருக்கு வருத்தத்தைத் தரக்கூடியது, பரற்கற்கள் நிறைந்தது என்பனவற்றைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. முல்லையும் குறிஞ்சியும் தம்மியல்பிலிருந்து திரிந்து மாறுபட்டு வழங்குவதை பாலை என்பர்.*

*பாலைக்கலியில் முப்பத்தைந்து பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் உரிப்பொருள் மட்டும் நான்கு பாடல்களிலும் உரிப்பொருளும் முதற்பொருளும் ஒரு பாடலிலும் முதல், கரு, உரிப்பொருள்கள் இருபத்தொன்பது பாடல்களிலும் அமைந்துள்ளதாகப் பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார். ஆனால் நா. ஆறுமுகம்,*

> *முப்பத்தைந்து பாலைக் கலிப்பாடல்களில் பாலை நிலப் புனைவு இடம்பெற்றிருப்பன 16 பாடல்கள். அவற்றுள் குறிஞ்சி பாலையாதலைப்*

பற்றிப் பாடுவன 9 பாடல்கள். முல்லை பாலையாதலைப் பற்றிக் குறிப்பிடுவன 6 பாடல்கள். பாலைக்குரிய செய்தியாகப் பொதுவாகக் கூறுவது ஒரு பாடல்"[33]

என்று கருத்துரைத்துள்ளார். பகவதி கோவிந்தன் கருத்தும் நா. ஆறுமுகம் கருத்தும் ஒன்றுக்கொன்று முரண்படுவதை இக்கூற்றுகள் சுட்டிக் காட்டுகின்றன. முப்பத்தைந்து பாடல்களில் பாலை நிலப் புனைவு பதினாறு பாடல்களில் மட்டுமே அமைந்துள்ளன என்று ஆறுமுகம் குறிப்பிடுவது பொருந்துவனவாக இல்லை. ஏனெனில் பாலைக்கலிப் பாடல்கள் அனைத்துமே பொருளீட்டச் செல்ல்லும் தலைவனுக்கு காட்டின் கொடுமையையும் பாலை நிலத்தின் இயல்பையும் கூறிச் செலவு அழுங்குவிக்கும் துறையில்தான் அமைந்துள்ளன. ஆகவே பாலைக்கலிப் பாடல்கள் அனைத்திலுமே முதறபொருள் அமைந்துள்ளன என்பதை உணரமுடிகிறது.

**முல்லை பாலையாதல்**

முல்லை நிலம் தன்னியல்பில் இருந்து திரிந்து, மாறுபட்டு வழங்குவதைக் கலிப்பாடல்கள் பலவும் சுட்டிக் காட்டுகின்றன.

புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை[34]

களிறு வானீங்கு வைப்பின் வழங்காத்தேர்

நீர்க்கவாஅம் கானம்"[35]

அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்

கடியவே காடு"[36]

இலைதீந்த வுவவையாற் றுன்புறூஉத் தகையவே காடு[37]

மேற்குறித்த பாடலடிகளில் ஆரிடை, கானம், காடு போன்ற சொற்கள் வந்து நிலத்தின் தன்மையைச் சுட்டிக் காட்டுகின்றன. இப்பாடலடிகள் முல்லை நிலம் தன்னியல்பிலிருந்து திரிந்து பாலையாக மாறுபட்டு வழங்குவதைக் காட்டுகின்றன.

**குறிஞ்சி பாலையாதல்**

முல்லை நிலம் மட்டுமல்லாமல் குறிஞ்சி நிலமும் தன்னியல்பிலிருந்து திரிந்து பாலையாக வழங்குவதைப் பாலைக்கலிப் பாக்கள் எடுத்துக் காட்டுகின்றன.

வொண்கதிர் தெறுதலிற் சீறருங் கணிச்சியோன்
சினவலி னவ்வெயி லேறுபெற் றுதிர்வனபோல்
வரைபிளந் தியங்குந ராறுகெட விலங்கிய வழலவி
ராரிடை"[38]
மலையிறந்து செயல் சூழ்ந்த பொருள்[39]
வரையோங் கருஞ்சுரம்[40]
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்[41]
நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்முட்டிக் காய்சினந் தெறுதலி
னுறலூறு கமழ்கடாஅத் தொல்கிய எழில்வேழம்
வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்[42]
கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னரூஉத் தகையவே"[43]

மேற்குறித்த பாடலடிகளில் வரைபிளந்து இயங்குநர் ஆறுகெட, மலையிறந்து, வரையோங்கு, விறன்மலை, கன்மிசை வேய்வாட என்பன போன்ற சொற்றொடர் குறிஞ்சி பாலையாகத் திரிந்த முறையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

பாலைக்கலியில் முதற்பொருளும் உரிப்பொருளும் கலந்த பாடல் ஒன்று அமைந்துள்ளது.

அடர்பொன் அவிரேய்க்கும் அவ்வரிவாடச்

சுடர்காய் சுரம்போகு றும்மையா மெங்கட்

படகூற நின்றது முண்டோ தொடர்கூரத்

துவ்வாமை வந்தக்கடை[44]

என்னும் பாடலடிகளில் வந்துள்ள 'சுடர்காய் சுரம்' என்பதில் சுடர்காய் என்பது பொழுதையும் சுரம் என்பது காட்டையும் உணர்த்தி நிற்கின்றன. ஆகவே இப்பாடலில் நிலமும் பொழுதும் உணர்த்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**பாலைக்குரிய பொழுது**

பாலைக்குப் பெரும்பொழுதுகளாக இளவேனில் காலமும் முதுவேனில் காலமும் முன்பனிக் காலமும் சிறுபொழுதாக இவற்றின் நண்பகலும் தொல்காப்பியரால் சுட்டப்படுகின்றன. இதனை,

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[45]

பின்பனி தானும் உரித்தென மொழிப[46]

எனும் அவரது நூற்பாக்களால் அறியலாம்.

கலித்தொகையில் இரு இடங்களில் மட்டுமே பின்பனிக் காலம் பாலைக்குரியதாகச் சுட்டப் பெறுகின்றன. அவை வருமாறு:

பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி

நோய் சேர்ந்த வைகலான்"[47]

என்னும் பாடலில் பின்பனிக் காலம் சுட்டப்படுகின்றது. சிறுபொழுதாகிய நண்பகல் பின்வரும் பாடல்களில் வருணிக்கப்பட்டுள்ளது.

"ஒண்கதிர் தெறுதலின்"[48]

"ஞாயிறு கடுகுபு கதிர் முட்டிக் காய்சினந் தெறுதலின்"[49]

"விரிகதிர் தெறுதலின்"[50]

*"கனைகதிர் தெருதலின்"*[51]

*"செல்கதிர் ஞாயிரு செயிர்சினம் செரிதலின்"*[52]

*இப்பாடல்களில் ஒண்கதிர், ஞாயிறு கடுகுபு, விரிகதிர், கனைகதிர், செல்கதிர் என முதுவேனிற் பருவமும் நண்பகல் பொழுதும் சிறப்பிக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர் சுட்டிய பாலைக்குரிய பொழுதுகள் கலித்தொகையில் பொருத்தமாக அமைந்துள்ளதை இவற்றின் வழியாகக் காணமுடிகின்றது.*

**குறிஞ்சிக்குரிய நிலம்**

*பழந்தமிழ்ப் புலவர்கள் தம் செய்யுளில் குறிஞ்சிக்கு மலையும் மலை சார்ந்த பகுதியும் அங்குள்ள அருவிகளும் நிலம் என்பதைச் சுட்டியுள்ளனர். குறிஞ்சித் திணைப் பாடல்களை உரிப்பொருள் மட்டும் இடம்பெற்றுள்ள பாடல்கள், முதல், கரு, உரி மூன்றும் இடம்பெற்றுள்ள பாடல்கள், கைக்கிளைப் பாடல்கள் என மூன்று நிலைகளில் பாகுபடுத்தலாம் எனப் பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார்.*

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*

*உமை அமர்ந்து உயர்**மலை** இருந்தன*[53]

*……………தயங்கும் தன் உறார்*

*இடுக்கண் தவிர்ப்பான் **மலை***[54]

*அருவரை **அடுக்கம்** நாம் அழிந்து ஒன்று பாடுவோம்*[55]

*சுடர் உற உற நீண்ட சுரும்பு இமிர் **அடுக்க**த்த விடர்**வரை***[56]

*இப்பாடல்களில் உயர்மலை, இடுக்கண் தவிர்ப்பான் மலை, அடுவரை அடுக்கம், சுரும்பு மிர் அடுக்கம் போன்ற தொடர்கள் குறிஞ்சி நிலத்தைக் குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ள என்பதை அறியமுடிகிறது.*

*கலித்தொகையில் அமைந்துள்ள முதற்பொருள் குறித்து ஆராய்ந்த பகவதி கோவிந்தன்,*

*மலை, வரை,அடுக்கல், அடுக்கம், விடர்,விடரகம்,சாரல் என்னும் மலை சார்ந்த சொற்கள் அவற்றின் இயல்புகளோடு அகன்மலை, அணிமலை,*

நன்மலை, விறன்மலை எனவும் அடுவரை, மால்வரை, விடர்வரை எனவும் அருவரை, அடுக்கல், அகன்மலை அடுக்கம், படுமலை அடுக்கம், மால்வரை அடுக்கம் எனவும் நீடிரு விடரகம், வேய்நல் விடரகம் எனவும், கல்லுயர் நனஞ்சாரல் எனவும் கலிப்பாடல்களில் குறிக்கப்படுகின்றன.[57]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது இக்கருத்துரை கலித்தொகைப் பாடல்களில் பொருத்தமாகவே அமைந்துள்ளன என்பது இங்குச் சுட்டத்தக்கது.

**குறிஞ்சிக்குரிய பொழுது**

குறிஞ்சித் திணைக்குப் பெரும்பொழுதுகளாகக் கூதிரும் முன்பனிக்காலமும், சிறுபொழுதாக நடுநாள் யாமமும் தொல்காப்பியரால் குறிப்பிடப்படுகின்றன. இதனை,

குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்''[58]

பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப''[59]

என்னும் அவரது கருத்தால் அறியலாம். இந்நூற்பாக்களுக்கு இளம்பூரணர்,

கூதிராவது ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களும் யாமமாவது இராப்பொழுதின் நடுக்கூறு, முன்பனிக் காலமாவது மார்கழித் திங்களும் தைத் திங்களும்''[60]

என்று குறிப்பிட்டுள்ளார். குறிஞ்சிக் கலியில் அமைந்துள்ள பெரும்பொழுது, சிறுபொழுது குறித்து பகவதி கோவிந்தன்,

குறிஞ்சிக் கலியிலுள்ள இருபத்தொன்பது பாடல்களில் எட்டுப் பாடல்களில் மட்டுமே கூதிர்காலமும் யாமமும் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஆறு பாடல்களில் வெளிப்படையாகவும் இருபாடல்களில் குறிப்பாகவும் கூதிர், யாம வருணனைகள் காணப்பெறுகின்றன''[61] 44

என்று கருத்துரைத்துள்ளார்.

கலித்தொகையில் கூதிர் பருவத்து வருணனைகள் பின்வருமாறு பதிவிடப்பட்டுள்ளன.

பெருமலை மிளிர்ப்பன்ன சாற்றுடைக் கனைபெயல்''[62]

படுமழையடுக்கத்து"[63]

கனைபெயல்"[64]

இப்பாடலடிகளில் கூதிர்பருவம் விளக்கப்பட்டுள்ளது. சிறுபொழுதாகிய யாமம் குறித்து,

இருளிடை என்னாய் நீ"[65]

யாமத்தும் துயிலலள்"[66]

இனையிரு ளிதுவென"[67]

மன்பதையெல்லாம் மடிந்த இருங்கங்குல்"[68]

யாமத்து இருளானது, அதிலும் மழைபெய்யும் கூர்காலத்து யாமமானதுமையிருட்டாக விளங்குவதை இருளிடை என்னாய், யாமம், இனையிருள், இருங்கங்குல் என்ற இப்பாடற் பகுதிகள் உணர்த்துகின்றன.இவ்விருபொழுதுகளும் கலிப்பாடல்களில் குறிப்பாகவும் சுட்டப் பெறுகின்றன.

மின்னோருங் கண்ணாக இடியென்னாய் பெயலென்னாய்

இன்னதோ ராரிடை ஈங்குநீ வருவதை"[69]

கூர்காலமும், யாமமும் குறிப்பாகச் சுட்டப்பெற்றுள்ளன. குறிஞ்சிக்கலியில் வைகறைப்பொழுதும் இடம் பெற்றுள்ளது என்பதை அறியமுடிகிறது.

குறிஞ்சிக் கலியில் பொழுது அமைந்துள்ள முறையைப் பகவதி கோவிந்தன்,

> குறிஞ்சிக்கலிப்பாடல்களில் முன்பனிகாலத்தைக் குறிப்பிடும் பாடலொன்று இடம்பெறவில்லை என்பதும், கூதிர்க்காலமும் யாமமும் பாடல்களில் வெளிப்படையாகவு, குறிப்பாகவும் சுட்டப்பெறுகின்றன என்பது, இருபொழுதுகளும் ஒருசேர இடம்பெற்ற பாடல்களும் உண்டு என்பது இவற்றால் தெரியவருகின்றன.[70]

என்று குறிப்பிட்டுள்ளார். இவரது இக்கருத்துரையை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சிக் கலிப்பாடலைக் காணும்போது இவரது கருத்துரை பொருத்தமாகவே அமைந்துள்ளது என்பதை உணரமுடிகிறது.

**மருத்தத்துக்குரிய நிலம்**

வயலும் வயல் சர்ந்த நீர்நிலை மிக்க பகுதிகளையும் குறிக்கவரும் சொல் மருதம் ஆகும். இந்த மருதக் கலியில் பரத்தையர் பிரிந்த தலைவனோடு புலக்கும் தலைவி பற்றியும் பரத்தையின் செயற்பாடுகள் பற்றியும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. மருதத்துக்கே உரிய வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் கலிப்பாடல்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. கலித்தொகை மருதக் கலியில் நிலம் அமைந்துள்ள முறைமை குறித்துப் பின்வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

*வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் **வயற்க்**கொண்ட"*[71]

எனும் அடிகளில் 'வயல்'

*பன்மல ரிடைப்புகூஉம் **பழனஞ்**சே ரூரகேள்*[72]

என்பதில் 'பழனம்'

*பூம்**பொய்கை** மறந்துள்ளாப் புனலணி நல்லூர்"*[73]

*மாநிற மர்ப்**பொய்கை**"*[74]

*வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு **பொய்கையுட்**"*[75]

என்னும் அடிகளில் பொய்கையும்,

*நீரார் **செறு**வி னெய்தலோடு நீடிய'*[76]

என்பதில் செறுவும் மருத நிலத்தைக் குறிக்க வந்துள்ளன. மருதக்கலியில் நிலம் அமைந்துள்ள முறையைப் பகவதி கோவிந்தன்,

> மருதக்கலியில் வயல், பழனம், செறு, கழனி எனப் பலவாறு மருதநிலம் அழைக்கப்பட்டுள்ளது. மருதநிலத்தின் நீர்வளமும் நிலவளமும் தோன்றத் தகைமலர் பழனம்,தகை பெருகழனி, நீரார்செறு,பனிமலர்

*பழனம்,புள்ளிமிழ் அகல்வயல் என்றெல்லாம் அடைகொடுத்து மருதக்கலி ஆசிரியர் பாடியுள்ளார்.* [77]

*என்று குறிப்பிட்டுள்ளார். இவர் குறிப்பிட்ட அனைத்து சொல்லாட்சிகளும் கலித்தொகையில் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மேலும் அவர் மருதக் கலிப்பாடல்களில் பொழுதும் உரிப்பொருளும் சேர்ந்து நிலத்தியல்பு கூறப்பட்டுள்ளது என்றும் கூறுகின்றார்.*

*“அகன்றுறை அணிபெறப் புதலோடு தாழ்ந்த*

*பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை*

*கண்டொர ஒளிவிட்ட வெள்ளிய வள்ளத்தால்*

*தண்கமழ் நறுந்தேறல் உண்பவன்முகம் போல*

*வண்பினி தளைவிடூஉம் வயலணி நல்லூர்”*[78]

*இவ்வடிகளின் வழி மருத நிலக் கருப்பொருளாகிய பகன்றைப்பூ, தாமரை ஆகியவை நிலவர்ணனையோடு சேர்த்து கூறப்பட்டுள்ளன.*

**மருதத்திற்குரிய பொழுது**

*வைகறையும் விடியலும் மருதத்திணைக்குத் தொல்காப்பியர் குறிப்பிடும் சிறுபொழுதுகளாகும். இதனை, “வைகறை விடியல் மருதம்” (நூ.9) அவரது நூற்பா வெளிப்படுத்துகின்றது. இத்திணைக்குப் பெரும்பொழுது கூறப்பாடமையால், அறுவகைப் பருவமும் பெரும்பொழுதுகளாகக் கொள்ளப்பெறுகின்றன. மருதக் கலியில் பின்பனிக் காலம்,*

*பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்*

*தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர்”*[79]

*சுட்டப்பெறுவதை அறியமுடிகிறது.*

*பின்பனிக் காலம் மட்டுமன்று இளவேனிற் காலமும் மருதக் கலியில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.*

*நறுநுதால் பன்மாணுங்*

*கூடிப் புணர்ந்தீர் பிரியன்மின் நீடிப்*

*பிரிந்தீர் புணர்தம்மின் என்பன போல*

*அரும்பவிழ் பூஞ்சினை தோறும் இருங்குயில்*

*ஆனா தகவும் பொழுதினான் மேவர*

*நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தருந்*

*தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமார்*

*ஆனா விருப்போ டணியயர்ப காமற்கு*

*வேனில் விருந்தெதிர் கொண்டு"*[80]

*இப்பாடலில் இளவேனிற்காலச் சிறப்பு தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.*

*மருதத்தின் சிறுப்பொழுதாகிய வைகறையும் விடியலும் பலவிடங்களில் மருதக்கலியில் காணப்படுகின்றன.*

*"வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப்பெற்றதை"*[81]

*சிறுகாலை யிற்கடை வத்து"*[82]

*இப்பாடற்பகுதியில் மருத ஒழுக்கத்திற்குரிய சிறுபொழுதாகிய வைகறைப் பொழுது சுட்டப்பெற்றிருக்கின்றது.*

***முல்லைக்குரிய நிலம்***

*முல்லைக் கலிப்பாடல்களில் முதற்பொருளாகிய நிலம் பற்றிய செய்திகள் குறைவாகவே காணப்படுகின்றன. முல்லை நிலத்தின் மேடான பகுதியைக் குறும்பு என்று அழைப்பர் இது பற்றிக் கலித்தொகை,*

*எல்லா விஃதொன்று* ***கூறு குறும்பு*** *சிவர்"*[83]

*எனும் பாடலடியில் குறும்பு இடம்பெற்றுள்ளது.*

*குறும்பை ஒட்டியுள்ள பகுதியை 'காடு' 'கானம்' என்பர். இதுகுறித்து கலித்தொகை,*

*சுரும்பிமிர் **கான**நாம் பாலினம்*[84]

*என்று சுட்டுகிறது. மற்றொரு பாடலில்*

*காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை*[85]

*என முதற்பொருளாகிய நிலம் சுட்டப்படுகின்றது.*

*முல்லைக் கலியில் நிலம் பற்றி பேசப்பட்டுள்ள நிலை குறித்து பகவதி கோவிந்தன்,*

*முல்லைக் கலியில் முதற்பொருளாகிய நிலம் பெறும் இடம் சிறிதளவே என்பது தெளிவாகின்றது. மேலும்முல்லை நிலம் குறும்பு,காடு புலம்,வியன் புலம், புனம்,பாட்டங்கால், தினைக்கால் எனப் பல பெயர்களால் அழைக்கப்பெறுகின்றது என்பது தெளிவாகிறது''*[86]

*என்று குறிப்பிட்டுள்ளார். இவரது இக்கருத்துரை பொருத்தமாகவே அமைந்துள்ளது என்பதைப் பாடல்களை நோக்கும்பொழுது புலப்படுகின்றது.*

***முல்லைக்குரிய பொழுது***

*தொல்காப்பியர் முல்லைக்குரிய பெரும்பொழுதாகக் கார்காலத்தையும், சிறுபொழுதாக மாலைக் காலத்தையும் குறிப்பிட்டுள்ளார்.*

*'காரும் மாலையும் முல்லை''*[87]*(நூ.6)*

*என்பது அவரது நூற்பா. முல்லைக் கலிப்பாடல்களில் பதினேழில் கார்காலம் பற்றிய செய்திகள் மூன்று பாடல்களில் வந்துள்ளன என்று பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்து பொருந்துவதாகவே உள்ளது.*

*முல்லைக் கலிப்பாடல்களில் சிறுபொழுதாகிய மாலைக்காலம் மட்டும் கூறப்படவில்லை, நண்பகல் பொழுதும், இரவும், நாட்காலையும் விடியலும், அந்திகாலமும் கூறப்பட்டுள்ளன என்பது இங்குச் சுட்டத்தக்கது.*

*கலித்தொகை அல்லாத ஏனைய சங்க அக இலக்கிய நூல்களில் முல்லைத்திணை பாடல்களில் பொழுதுக்குக் கொடுக்கப்படுகின்ற முக்கியத்துவம் கலித்தொகை முல்லைக் கலிப் பாடல்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்பதும் அறிய முடிகின்றது.*

***நெய்தலுக்குரிய நிலம்***

*கடலும் கடல் சார்ந்த நிலப்பகுதியும் நெய்தல் என்று கூறுவர். இது குறித்து பகவதி கோவிந்தன்,*

> *நீரும் நிலமும் சேர்ந்த நிலம் என்னும் பொருளில் நெய்தல் நிலமானது 'பாப்பு நீர்ந்தான் சேர்ப்பு' 'வயங்கு நீர்த்தான் சேர்ப்பு' 'இலங்கு நீர்ந்தன் சேர்ப்பு' 'வயங்கு நீர்ந்தன் சேர்ப்பு' 'உரவு நீர்த்தண் சேர்ப்பு' என்றெல்லாம் நெய்தல் கலியில் வழங்கப்பெறுகின்றன.*[88]

*என்று குறிப்பிடுகின்றார். இவரது கருத்துரையை அடிப்படையாகக் கொண்டு கலிப்பாடல்களை நோக்கும்போது,*

> *வெயிலிடு களிறேபோ **லிடுமண** னெழுங்கோட்டைப்*
>
> *பயிறிரை நடுநன்னாட் பாய்ந்துறூஉந் துறைவகேள்''*[89]

*என்னும் அடிகளில் இடுமணன் எனும் சொல்லாட்சியும்,*

> *இவர்திமி லெறிதிரை யீண்டிவந் தலைத்தக்கா*
>
> *லுவறுநீ ருய**ரெக்க** ரலவனா டளைவரித்*
>
> *தவலிறண் கழகத்துத் தவிராது வட்டிப்பக்*
>
> *கவலுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப*
>
> *முத்துறழ் **மனலெக்க** ரளித்தக்கான்''*[90]
>
> *உரவுநீர்த் திரைபொர வோங்கிய **வெக்கர்**மேல்*[91]
>
> *அடும்பிவ ரணியெக்க ராடிநீ தணந்தக்காற்*[92]

*என்னும் அடிகளில் எக்கர் என்னும் சொல்லாட்சிகளும் வந்துள்ளன.*

> ***வரிமணல்** வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப''*[93]

*என்னும் அடியில் வரிமணல் என்னும் சொல்லாட்சியும்,*

*மேற்கண்ட அடிகளை நோக்கும்பொழுது கடலை ஒட்டிய நெய்தல் நிலப்பகுதி கால் எனவும் கடற்கரை கானலில் காணப்படும் வெம்மணல்*

பரப்பும் மணல்மேடும் எக்கர் என்றும் இவ்வெக்கர் கடல் தோற்றுவித்த மேடாதலின் ‘இடுமணல் நெடுங்கோடு’ எனவும் நீறூற்றுடைய மணல் மேடாதலின் ‘உவறுநீர் உயர் எக்கர்’ என்றும் வரிகளைக் கொண்டதால் வரிமணல் என்றும் வெம்மணல் மேடாதலின் முத்துறழ் மணலெக்கர் என்றும் கடலலை பொருதுகின்ற மணல் மேடாதலின் ‘உரவுநீர்த்திரை பொருது ஓங்கிய எக்கர்’ என்று அழைக்கப்பெறுகிறது என்பது கலித்தொகையால் அறியக் கிடக்கின்றது.

**நெய்தலுக்குரிய பொழுது**

கடலும் கடல்சார்ந்த இடமுமாகிய நெய்தலுக்குச் சிறுபொழுதாக எற்பாட்டினைத் தொல்காப்பியர் கூறுகின்றார். இதனை,

எற்பாடு

நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்[94]

என்னும் அவரது நூற்பாவால் அறியலாம்.

நெய்தல் கலிப்பாடல்களில் முதுவேனில், முன்பனி ஆகிய இரு பெரும் பொழுதுகளும் பயின்று வந்துள்ளன. அவற்றில் முதுவேனில் கால வருணனை வருமாறு:

தோள்துறந் தருளா தவர்போல் நின்று

வாடை தூக்க வணங்கிய தாழை”

இயங்கெயி லெயப்பிறந்த எரிபோல எவ்வாயுங்

கனைகதிர் தெறுதலின் கடுந்தெழுந்த காம்புத்தீ

மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கன்

மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென

விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்”[95]

இப்பாடலடிகளில் கனைகதிர் தெறுதலின், விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம் என்னும் தொடர்கள் முதுவேனிற் காலத்தைப் பிரதிபலித்துக் காட்டுகின்றன.

நெய்தல்கலியில் ஏற்பாட்டு வருணனையைத் தொடர்ந்து மாலை வருணனையும் இடம்பெற்றுள்ளது. அது வருமாறு:

பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர

ஆனது கலுழ்கொண்ட உலகத்து மற்றவன்

ஏனையான் அளிப்பான்போல் இகலிருள் மதிசீப்பக்

குடைநிழ லாண்டாற்கும் ஆளிய வருவாற்கும்

இடைநின்ற காலம்போல் இறுத்தந்த மருண்மாலை"[96]

இப்பாடலில் பல்கதிர் ஞாயிறு, பகலாற்றி, இகலிருள் மதி சீப்ப, குடை நிழல் ஆண்டாற்கும், இறுத்தந்த மருள் மாலை என்பன மாலை வருணனை ஆகும். இத்தகைய வருணனைகள் கலித்தொகையில் ஒன்பது பாடல்களில் இடம்பெற்றுள்ளன என்பதையும் அப்பாடல்களின் தொடக்கத்தில் எற்பாட்டு வருணனையும் முடிவில் மாலை வருணனையும் இடம்பெற்றுள்ளன என்பதையும் அறிய முடிகின்றது.

**கைக்கிளை, பெருந்திணை**

கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நிலமும் பொழுதும் கருப்பொருளும் கிடையாது. உரிப்பொருள் மட்டுமே உண்டு. பிற திணைகளின் நிலத்தை நிலமாகவும் பொழுதைப் பொழுதாகவும் கொண்டு விளங்கும்.

## கருப்பொருள்

முதற்பொருளுக்கும் உரிப்பொருளுக்கும் உரிய இலக்கணத்தை வரையறுத்த தொல்காப்பியர் கருப்பொருளுக்கு,

*தெய்வம் உணாவே மாமரம் புட்பறை*

*செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ*

*அவ்வகை பிறவும் கருவென மொழிப"*[97]

*என்று இலக்கணத்தை வரையறுத்துள்ளார். தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில், யாழ் ஆகிய எட்டும் கருப்பொருள் என்று கூறிய தொல்காப்பியர் இவற்றோடு பிறவும் உண்டு என்று குறிப்பிடுகின்றார்.*

*தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர் இந்நூற்பாவில் உள்ள பிறவும் எனும் குறிப்பைக் கொண்டு பூ, நீர் என்னும் இரு கருட்பொருட்களைப் புதிதாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் நச்சினார்க்கினியர், இருவகை மக்களையும் கருப்பொருளாகக் கொண்டுள்ளார். தொல்காப்பியரும் உரையாசிரியர்களும் இவ்வாறு விளக்கம் கூற அகப்பொருள் விளக்க நூலாசிரியர் இவற்றோடு ஊர், பறை, பண் ஆகியவற்றைப் புதிதாகச் சேர்த்துக் கொண்டு கருப்பொருள் மொத்தம் பதினான்கு என மொழிந்துள்ளார்.*

*செய்யுளில் வரும் கருப்பொருள் விதிக்குப் புறநடையாகத் தொல்காப்பியர்,*

*எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்*

*அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்*

*வந்த நிலத்தின் பயந்த ஆகும்*[98]

*எனும் நூற்பாவையும் இயற்றியுள்ளார். அவரது கருத்துப் படி ஒரு நிலத்திற்குரிய கருப்பொருள் ஏனைய நிலத்திலும் பயின்று வரும். அவ்வாறு வருவது திணை மயக்கம் ஆகாது என்று குறிப்பிட்டிருக்கிறார்.*

*கலித்தொகையில் அமைந்துள்ள கருப்பொருள் குறித்து விரிவாக ஆராய்ந்த பகவதி கோவிந்தன், அதற்கு,*

*"முதற்பொருளாகிய நிலத்திலும் பொழுதிலும் கருக்கொள்கிற பொருட்கள் கருப்பொருட்கள் ஆகும்"*[99]

*என்று விளக்கத்தை வழங்கியுள்ளார்.*

பின்வரும் பகுதிகளில் கலித்தொகையில் அமைந்துள்ள கருப்பொருள்கள் குறித்து விரிவாக ஆராயப்பெறுகின்றன.

**பாலை**

தெய்வம் - கொற்றவை, உணவு - ஆறலைத்தலால் வரும் பொருள், மா - வலிமை அழிந்த யானையும் புலியும் செந்நாயும், மரம் - பாலை, இருப்பை, புள் - எருவையும் பருந்தும், பறை - ஆறலைப்பறை, சூறைகொண்ட பறை, செய்தி - ஆறலைத்தல், பண் - பாலை, பிறவும் என்றதால், பூ - மராம்பூ, நீர் - அறுநீர்க் கூவலும், அறுநீர்ச் சுனையும் பாலைக்குரிய கருப்பொருள்களாகச் சுட்டப்பெறுகின்றன.

வலி முன்பின் வல்லென்ற யாக்கை **புலி**நோக்கின்

சுற்றமை வில்லர் கரிவளர் பித்தையர்

அற்றம் பார்த்து அல்கும் **கடுங்கண் மறவர்**தாம்

கொள்ளும் பொருள் இலராயினும் வம்பலர்

துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயிர் வௌவலின்[100]

வேனில் உழந்த வறிதுயங்கு ஓய்**களிறு** (6:1)

உறல் உறு கமழ் கடாத்து ஒல்கிய எழில்**வேழம்**[101]

மேற்குறித்த பாடலடிகளில் பாலை நிலத்திற்கே உரிய களிறு, வேழம், புலி முதலிய விலங்குகளின் தன்மையும் அந்நிலத்தில் வாழும் கடுங்கண் மறவர்களின் தன்மையும் சுட்டப்பெறுகின்றன.

**இடைநின்ற நரம்பு** அறூஉம்

யாழினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ?[102]

என்னும் அடிகளில் யாழ் பற்றிய குறிப்பு வந்துள்ளது. இது பாலைக்குரியது அல்ல எனினும் தொல்காப்பியர் கருத்துப்படி ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது.

*பாலைக்கலியில் பறவைகள் பற்றிய குறிப்புகளும் மிகுதியாக வந்துள்ளன. அவற்றில் சில மட்டும் இங்குச் சுட்டப்படுகின்றன.*

*இலங்குமா ணவிர்தூவி **யன்னமென்** சேக்கையுட்"*[103]

*நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் **குயிலெள்ள**"*[104]

*கன்மிசை **மயிலாலக்** கறங்கியூர் அலர்தூற்ற"*[105]

*மேற்குறித்த பாடலடிகளில் அன்னம், மயில், குயில் ஆகிய பறவைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. இதுமட்டுமின்றி புறா, கிளி முதலான பறவைகளும் பாலைக்கலியில் கூறப்பட்டுள்ளன.*

*பல்வகையான மரங்கள் பற்றிய பதிவுகளும் பாலைக்கலிப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. உதாரத்திற்குச் சில மரங்களைப் பற்றி மட்டும் இங்குச்சுட்டப்படுகின்றது.*

*ஆனேற்றுக் கொடியோன்போல் எதிரிய **இலவமுமா**ங்க"*[106]

*புதுமலர்க் **கோங்கம்** பொன்னெனத் தாதூழ்ப்பத்*[107]

*மேற்குறித்த அடிகளில் இலவம், கோங்கம் ஆகிய மரங்கள் குறித்த பதிவு இடம்பெற்றுள்ளன. இதுமட்டுமின்றி புன்கு, மரா, அசோகு, செருந்தி, ஞாழல், காஞ்சி, மூங்கில், மருது, நாணல் முதலான மரங்கள் பற்றிய பதிவுகளும் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.*

*மலர், வண்டுகள் குறித்த பதிவுகளும் கலித்தொகையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இவற்றில் மலர் குறித்து,*

*விரி**காஞ்சித்** தாதாடி இருங்குயில் விளிப்பவும்*[108]

*கொலையுழுவைத் தோலசைஇக் **கொன்றை**த்தார் சுவற்புரள*[109]

*ஓரிரா வைகலுள் **தாமரைப்** பொய்கையுள்*[110]

*பிணிநெகி ழவர்**வேங்கை** விரிந்தபூ நெறிகொள*[111]

*என்னும் பாடலடிகளில் குறிப்புகள் உள்ளன. காஞ்சி, கொன்றை, தாமரை, வேங்கை ஆகிய மலர்கள் இப்பாடலடிகளில் கூறப்பட்டுள்ளன.*

*தோயின அறலாயின் **சுரும்பா**ர்க்குஞ் சினையாயின்*[112]

*இருந்**தும்பி** இறைகொள எதிரிய வேனிலான்*[113]

*என்னும் அடிகளில் சுரும்பு, வண்டு ஆகியன வந்துள்ளன.*

***தண்ணருவி** நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ*[114]

*ஊறுநீ ரடங்கலி லுண்**கயங்** காணாது*[115]

*என்னும் அடிகளில் அருவி, கயம் ஆகிய சொல்லாட்சிகள் இடம்பெற்றுள்ளன.*

*பாலைக்கலிப் பாக்கள் முழுமையும் நோக்குகையில் பாலைக்குரிய கருப்பொருள்கள் மட்டுமன்றிப் பிற நிலத்துக்குரிய கருப்பொருளும் இடம்பெற்றுள்ளதை உணரமுடிகிறது.*

*சிங்கம், களிறு, களிற்றினம், மந்தி, வேட்டை நாய், குதிரை, கலைமான், ஒருத்தல் முதலான விலங்குகளும், கிளி, புறா, அன்னம், குயில், மயில் முதலான பறவைகளும், மரா, புன்கு, கோங்கம், இலவங்கம், அசோகு, மா, செருந்தி, நாணல், மருது, மூங்கில், காஞ்சி, ஞாழல், கொம்பு முதலான மரவகைகளும், மலர்களைக் குறிக்க பூ, பூக்கள், பன்மலர் முதலான சொற்களும், வேங்கை, மல்லிகை, முல்லை, பீர்க்கம்பூ, புன்கு பூ, நீலம், தாமரை, கோடல், கொன்றை, காஞ்சி, ஈங்கைப்பூ முதலான பூக்களும், மா, சிதர், தேன், ஞிமிறு, மிஞிறு, வண்டு, சுரும்பு, தும்பி ஆகிய வண்டுகளின் பெயர்களும், அருவி, புனல், கயம், ஆற்றங்கரை, நீர்த்துறை, குளம், சுனை, பொய்கை, ஊற்று நீர் ஆகிய நீர்நிலைகளும் பாலைக் கலியில் பயின்று வந்துள்ளன என்பதை இவ்வாய்வின் வழி அறிய முடிகிறது.*

## ***குறிஞ்சி***

*தெய்வம் - முருகவேள், உணவு - தினையும் ஐவனமும் வெதிர் நெல்லும், மா - யானையும் புலியும், பன்றியும், கரடியும், மரம் - வேங்கையும் கோங்கும், புள் - மயிலும், கிளியும், பறை - வெறியாட்டுப் பறையும் தொண்டகப் பறையும், செய்தி - தேன் அழித்தல், பண் – குறிஞ்சிப்பண், பிறவும் என்றதனால், பூ - வேங்கைப்பூ, காந்தட்பூவும், குறிஞ்சிப் பூவும், நீர் - சுனை நீரும் அருவி நீரும் குறிஞ்சிக்குரிய உரிப்பொருளாகச் சுட்டப்படுகின்றன.*

கலித்தொகை குறிஞ்சிக் கலியில் அமைந்துள்ள உரிப்பொருள்கள் குறித்துப் பின்வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

**உறுபுலி** உருஏய்ப்பப் பூத்த **வேங்கை**யைக்

கறுவுகொண்டு அதன்முதல் குத்திய **மதயானை**

நீடுஇரு விடரகம் சிலம்பக் கூய்தன்

கோடு புய்க்கல்லாது உழக்கும் நாடகேள்[116]

இப்பாடலடிகளில் குறிஞ்சிக்குரிய கருப்பொருளாகிய உறுபுலி, வேங்கை, மதயானை ஆகியன அந்நிலத்திற்குரிய தன்மையோடு குறிப்பிடப்பட்டுள்ளன.

**அகவினம்** பாடுவாம் நாட[117]

இப்பாடலடியில் குறிஞ்சிக்குரிய மயில் கூறப்பட்டுள்ளது.

எடுத்த நறவின் குலை அலங்**காந்தள்**

தொடுத்த **தேன்** சோர[118]

என்னும் பாடலடிகள் குறிஞ்சிக்குரிய தேனழித்தல் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது.

சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்

**ஐவன வெண்ணெல்** அறை உரலுள் பெய்து[119]

இப்பாடலடிகளில் குறிஞ்சி நிலத்தில் நெல் குற்றும்போது பாடுகிற வள்ளைப்பாட்டு பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது.

குறிஞ்சிக் கலியில் விலங்குகள் பற்றிய பதிவுகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன.

நுண்பொறி **மான்**செவி போல வெதிர்முளை[120]

கல்லாக் **கடுவன்** கணமலி சுற்றத்து[121]

என்னும் அடிகளில் மான், கடுவன் ஆகியன பற்றிக் கூறப்பட்டுள்ளன.

*பல வகையான மரங்கள் பற்றிய பதிவுகளும் குறிஞ்சிக் கலியில் மிகுதியாக உள்ளன.*

*பொழிபெயல் வண்மையான் **அசோகந்தண்** காவினுள்*[122]

*பல்கோட் **பலவின்** பயிர்ப்புறு தீங்கனி*[123]

*முதிரிணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரி**வேங்கை***[124]

*என்னும் அடிகளில் அசோகம், பலா, வேங்கை ஆகிய மரங்கள் சுட்டப்பட்டுள்ளன.*

*மலர்கள் பற்றிய பதிவுகளும் குறிஞ்சிக் கலியில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. அவற்றில்,*

*கடிசுனைக் கவினிய **காந்தளங்** குலையினை*[125]

*நீருட் **குவளை**வெந் தற்று*[126]

*தண்ணறுங் **கோங்க** மலர்ந்த வரையெல்லாம்*[127]

*காந்தள், குவளை, கோங்கம் ஆகிய மலர்கள் பற்றிய செய்திகள் இப்பாடலடிகளில் வந்துள்ளன.*

*குறிஞ்சிக் கலிப்பாக்களிலும் குறிஞ்சிக்குரிய கருப்பொருள் மட்டும் இடம்பெறவில்லை. ஏனைய திணைக்குரிய கருப்பொருள்களும் இடம்பெற்றுள்ளன என்பது இவ்வாய்வால் புலப்படுகின்றது.*

*கருங்குரங்கு, ஊகம், மந்தி, கடுவன், மான், எருது, நரி, குதிரை, புலி, யானை, பிடி, களிறு ஆகிய விலங்குகளும், கிளி, மயில், அன்னம், புறவு, தும்பி, சுரும்பு, வண்டு ஆகியனவும், மாந்தளிர், தளிர், தினைக்கதிர், தினை, வாழை, கரும்பு, மூங்கில் முளை, அசோகம், பலா, வேங்கை, சந்தனம் முதலிய மரங்களும், முல்லை முகை, கோங்கின் முகை, காந்தள் முகை, இணர், பூ, வேங்கை மலர், நெய்தல் மலர், நீலமலர், நறவம்பூ, தாமரை, சுரபுன்னை, கோடல்மலர், காந்தள், குவளை, கோங்கு, நரந்தம்பூ ஆகிய பூக்களும் குறிஞ்சிக் கலியில் கூறப்பட்டுள்ளன.*

**மருதம்**

தெய்வம் - இந்திரன், உணவு - நெல், மா - எருமையும் நீர்நாயும், மரம் - மருதும், காஞ்சியும், புள் - அன்னமும் அன்றிலும், பறை - நெல்லறி பறை, செய்தி - உழவு, பண் - மருதம், பிறவும் என்றதால், பூ - தாமரைப் பூவும், கழுநீரும், நீர் - ஆற்று நீரும் பொய்கை நீரும் என்பனவற்றை மருதத்துக்குரிய கருப்பொருளாகக் கூறுவர்.

கலித்தொகை மருதக் கலியில் அமைந்துள்ள கருப்பொருள்கள் குறித்து பின்வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

தொல்காப்பியர் குறிப்பிட்ட கருப்பொருள்களில் முதலாவதாக அமைவது தெய்வம் ஆகும். தெய்வம் குறித்த பதிவுகள் கலித்தொகையில்,

**ஆலமர் செல்வன்** அணிசால் பெருவிறல்[128]

பெருங்காட்டுக் **கொற்றிக்குப்** பேய்நொடித் தாங்கு[129]

**காமர்** நடக்கு நடைகாண் கவர்கணைச்

சாமனார் தம்முன் செலவும்காண்க.[130]

என்னும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளன. ஆலமர் செல்வன், கொற்றவை, காமன் ஆகிய கடவுளர் பற்றிய செய்திகள் இங்குக் கூறப்பட்டுள்ளன. இவையே அன்றி இன்னும் பல கடவுளர்கள் பற்றிய குறிப்புகளும் கலித்தொகையில் சுட்டப்படுகின்றன.

கலித்தொகையில் பல்வகையான மலர்கள் குறித்த பதிவுகளும் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

பனியொரு திறம்வாராப் பாசடைத் **தாமரைத்**

தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர”[131]

வயல்பூத்த **தாமரை**

மைதபு கிளர்கொட்டை மாண்பதிப் படர்தரூஉங்

கொய்குழை யதை**காஞ்சி**த் துறையணி நல்லூர”[132]

என்னும் அடிகளில் மருதத்துக்குரிய பூவாகிய தாமரை, காஞ்சி பற்றிய குறிப்புகள் வந்துள்ளன.

இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்

டுணைபுண **ரன்னத்தின்** றூவிமெல் லணையசைஇச்[133]

என்னும் அடிகளில் மருதத்திற்குரிய பறை பற்றிக் கூறப்பட்டுள்ளது.

ஓங்குய ரெழில்**யானைக்** கனைகடாங் கமழ்நாற்றம்[134]

மாதர்கொள் **மானோக்கின்** மடந்தைதன் துணையாக[135]

என்னும் அடிகளில் யானை, மான் ஆகிய விலங்குகள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

ஊடுமென் சிறு**கிளி** உணாப்பவள் முகம்போலப்[136]

அரும்பவிழ் பூஞ்சினை தோறும் இருங்**குயில்**[137]

இப்பாடலடிகளில் கிளி, குயில் ஆகிய பறவைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

உறுவளி தூக்கும் உயர்சினை **மா**வின்

கொய்குழை அகை**காஞ்சி**த் துறையணி நல்லூர[138]

என்னும் அடிகளில் மா, காஞ்சி மரங்கள் கூறப்பட்டுள்ளன.

நீரார் செறுவில் **நெய்தலோடு** நீடிய

நேரித **ழாம்பல்** நிரையிதழ் கொண்மார்[139]

அரிநீ ரவிழ்நீலம் **அல்லி அனிச்சம்**[140]

என்னும் அடிகளில் நெய்தல், ஆம்பல், நீலம், அல்லி, அனிச்சம் ஆகிய மலர்கள் கூறப்பட்டுள்ளன.

ஆலமலர் செல்வன், முருகன், கொற்றவை, காமன், சாமன், கூற்றுவன் ஆகியோரும், சிங்கம், குதிரை, யானை, மான், ஆனேறு முதலிய விலங்குகளும், ஆமை, சுறா, நண்டு, ஆரல்மீன், கயல், தேரை ஆகிய நீர்வாழ் உயிரினங்களும் சுரும்பு, தும்பி, வண்டு, இந்திரகோபப்பூச்சி, பெடையன்னம், கொக்கு,

குறும்பூழ், குயில், கிளி, பருந்து, ஆண்டலைப்புள் முதலான பறவையினங்களும், ஆல், மா, காஞ்சி, பனை, வேய் முதலிய மரங்களும், பூஞ்சினை, தளிர், கொடி, பூங்கொடி முதலானவையும், ஆம்பல், அல்லி, நெய்தல், நீலம், அனிச்சம், நறாமலர், பகன்றை, முல்லை முதலிய மலர்களும், கயமலர், தாமரை, முகை, மலர் ஆகியனவும், யாழ், முழவு, பறை முதலியனவும் மருதக்கலியில் கருப்பொருள்களாகக் கூறப்பட்டுள்ளன.

**முல்லை**

தெய்வம் - கண்ணன், உணவு - வரகும் முதிரையும், மா - மானும் முயலும், மரம் - கொன்றையும் குருத்தும், புதலும், புள் - கானாங்கோழி, பறை - ஏறுகோட்பறை, செய்தி - நிரைமேய்த்தல், யாழின் பகுதி – சாதாரிப்பண், பிறவும் என்றதால் பூ - முல்லையும் பிடவும் தளவும், நீர் - சுனை நீரும் அருவி நீரும் என முல்லைக்குரிய கருப்பொருளாகச் சுட்டப்படுகின்றன.

கலித்தொகை முல்லைக்கலிப் பாடல்களில் அமைந்துள்ள கருப்பொருள்கள் குறித்து விரிவாக இப்பகுதியில் காணலாம். முல்லை நிலத்தில் அந்நிலத்திற்குரிய மரங்கள் பற்றிய பதிவுகள் விரிவாகக் காணப்படுகின்றன.

மெல்லிணர்க் **கொன்றையு** மென்மலர்க் **காயா**வும்

புல்லிலை **வெட்சியும் பிடவுந் தளவுங்**

**குல்லையுங் குருத்துங் கோடலும்** பாங்கருங்

கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்[141]

**காயாம்பூங்** கண்ணிப் பொதுவன் றகைகண்டை[142]

இப்பாடலடிகளில் முல்லைக்குரிய கொன்றையும் குருத்தும் இடம்பெற்றுள்ளதோடு பிற நிலத்துக்குரிய காயா, வெட்சி, பிடவம், குல்லை, குருத்து, கோடல் காயாம்பூ முதலான கருப்பொருள்களும் இடம்பெற்றுள்ளன என்பது தெரிய வருகின்றது.

***தண்ணுமைப் பாணி*** *தளரா தெழூஉக்*

*பண்ணமை யின்சீர்க்* ***குரவை****யுட்*[143]

*இப்பாடலடிகளில் குரவைக் கூத்து இடம்பெற்றுள்ளன.*

***தரிமாவும் பரிமாவும் களிறும் கராகமும்***[144]

*மேவார் விடுத்த கூந்தற்* ***குதிரை***[145]

***புலி****யொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்****கெண்டை***

*வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"*[146]

*என்னும் அடிகளில் பரி, களிறு, கராகம், குதிரை முதலான விலங்குகள் கூறப்பட்டுள்ளன. சோழனுக்குரிய புலி, பாண்டியனுக்குரிய மீன் ஆகியன பற்றியும் இப்பாடலடிகளில் கூறப்பட்டுள்ளன.*

*அன்றாட உணவுப் பொருட்கள் பற்றிய செய்திகளும் கலித்தொகையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.*

***பாலொடு*** *கோட்டம் புகின்*[147]

*பிடிதுஞ்சு அன்ன அறைமேல* ***நுங்கின்***[148]

***மாங்காய்*** *நறுங்காடி கூட்டுவேம் யாங்கும்*[149]

*என்னும் அடிகளில் பால், நுங்கு, மாங்காய் ஆகிய உணவுப் பொருட்கள் பற்றிய பதிவு இடம்பெற்றுள்ளன.*

***மா****மருண் டன்ன மழைக்கண்சிற் றாய்த்தியர்*[150]

*வெரூஉப்****பிணை*** *மானோக்கின் நல்லாட் பெறூஉமிக்*[151]

*மேவார் விடுத்தந்த கூந்தற்* ***குதிரை****யை*[152]

*என்னும் அடிகளில் மான், பிணை, குதிரை ஆகிய விலங்குகளின் பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன.*

*ஞாலங்கொண் டெழூஉம்* ***பருந்தின்*** *வாய்வழீஇக்*[153]

***மயி****லெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்*[154]

முகைசூழுந் **தும்பி**யும் போன்ம்[155]

என்னும் அடிகளில் பருந்து, மயில், தும்பி ஆகிய பறவைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

**ஆலும் கடம்பும்** அணிமார் விலங்கிட்ட[156]

என்னும் அடியில் ஆல், கடம்பு பற்றிக் கூறப்பட்டுள்ளன.

மேற்குறித்த முல்லைக்கலிப் பாக்களைக் கொண்டு நோக்கும்பொழுது முல்லை நிலத்துக்குரிய கருப்பொருள்களை விட ஏனைய நிலத்துக்குரிய கருப்பொருள்கள் தான் மிகுதியாக இடம்பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது.

சிவபெருமான், உருத்திரன், நான்முகன், முருகன், பலராமன், இந்திரன், கூற்றுவன், காலன், உமை, திருமகள், ஞாயிற்று புத்தேள், அமரர் முதலிய கடவுளர்களும், மாவடு, மாங்காய் நறுங்காடி, நெல், கூழ், தேன், நுங்கு, நெய், வெண்ணெய், பால் முதலிய உணவுப் பொருட்களும், ஏறு, குதிரை, பிணை, மான், புலித்தொழுதி, பிடி, களிற்றுத்திரள், களிறு, சிங்கம், ஏற்றெருமை, பசு, பசுத்திரள், கன்று ஆகிய விலங்குகளும், ஏறுகளின் வகைகளாகிய, வெள்ளை, காரி, குரால், சேய், சுரி நெற்றிக் காரி, செம்மறு வெள்ளை, ஏந்திமிற் குரால், பல்பொறிப் புகர் ஆகியனவும், பருந்து, மயில், தும்பி, சுரும்பு ஆகிய பறவையினங்களும், மூங்கில், பனை, மரா, மா, காஞ்சி, கடம்பு, ஆல் முதலிய மரங்களும், முல்லை, கோடல், பாங்கர் ஆகிய கொடிகளும் கோங்கு, நறா, முல்லை, கோடல் ஆகிய பூக்களும் அவற்றின் அரும்புகளும், தளவம், பாங்கர், குருந்தம், குல்லை, பிடவம், வெட்சி, கொன்றை, காயா, காஞ்சி ஆகிய பூக்களும், ஆநிரை மேய்த்தல், மோர் விற்றல், வெண்ணெய் விற்றல், கலத்தொடு செல்லுதல், கன்று மேய்த்தல் ஆகிய தொழில்களும், பண், ஆம்பற்பண், தாளம், சீர், குழல், கொன்றைத் தீங்குழல், ஆம்பற் குழல், இயம், தண்ணுமை, பறை ஆகியவை பற்றிய குறிப்புகளும், நீர்த்துறை, சிற்றாறு, கான்யாறு, அருவி, சுனை ஆகிய நீர்நிலைகளும், ஊர், பேரூர், சிற்றூர், சிறுங்குடி ஆகிய முல்லை நில ஊர்களும் கலித்தொகையில் முல்லைக்கலியின் கருப்பொருளாகக் கூறப்பட்டுள்ளன.

*தொல்காப்பியரின் இலக்கணத்தைக் கொண்டு கலித்தொகையை நோக்கும்பொழுது முல்லைக்குரிய கருப்பொருள் மட்டும் முல்லைக்கலியில் பயின்று வரவில்லை. ஏனைய நிலத்திற்குரிய கருப்பொருள்களும் இதனுள் வந்துள்ளமையை அறியமுடிகின்றது.*

**நெய்தல்**

*தெய்வம் - வருணன், உணவு - உப்பு விலையும் மீன் விலையும், மா - கராவும், சுறவும், மரம் - புன்னையும், கைதையும், புள் - கடற்காக்கை, பறை - நாவாய்ப்பறை, செய்தி - மீன்படுத்தலும், உப்பு விளைத்தலும், பண் - செவ்வழி, பிறவும் என்றதால், பூ - நெய்தல், நீர் - கேணி நீரும், கடல் நீரும் என நெய்தலுக்குரிய கருப்பொருளைச் சுட்டுவர்.*

*நெய்தல் நிலத்துக்குரிய கடவுளாகத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் வருணனைக் குறிப்பிடுகின்றனர். ஆனால் கலித்தொகையில் வருணன் என்ற பெயருக்குப் பதிலாகப் பிற தெய்வப் பெயர்களே இடம்பெற்றுள்ளன.*

*தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்*

*பையென்ற நெஞ்சத்தேம்”*[157]

*காணான் திரிதருங் கொல்லோ மணிமிடற்று*

*மாண்மலர்க்* ***கொன்றை யவன்****”*[158]

*சீர்மிகு* ***சிறப்பினோன்*** *மரமுதல் கைசேர்த்த*[159]

*செருமிகு* ***நேமியான்*** *தார்போலப் பெருங்கடல்*[160]

*என்னும் அடிகளில் முறையே சிவபெருமான், தக்கணாமூர்த்தி, திருமால் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.*

*முல்லை நிலத்துக்குரிய விலங்குகளாக கராவும் சுறவும் கூறப்பட்டுள்ளன. ஆனால், கலித்தொகையில்,*

*பாய்****பரி****க் கடுந்திண்டேர் களையினோ விடனே*[161]

*வெள்ள****மான்*** *நிறம்நோக்கிக் கணைதொடுக்குங் நெடியோன்போல் (120:11)*

*கறாஅ **எருமைய** காடிறந்தான் கொல்லோ*[162]

*என்னும் அடிகளில் முறையே பரி, மான், எருமை ஆகியன கூறப்பட்டுள்ளன. இவையே அன்றி இன்னும் பல விலங்குகள் பற்றியும் கூறப்பட்டுள்ளன.*

*கருங்கோட்டு நறும்**புன்னை** மலர்சினை மிசைந்தொறுஞ்*[163]

*சிறு**வெதிர்**ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் திம்மெனப்*[164]

*என்னும் அடிகளில் முறையே புன்னை, மூங்கில் ஆகியன கூறப்பட்டுள்ளன.*

*அடர்பொன் அவிரேய்க்கும் **ஆவிரங்** கண்ணி*[165]

*பூவல்ல பூளை **யுழிஞை**யோ டியாத்த*[166]

*என்னும் அடிகளில் ஆவிரம், உழிஞை ஆகிய பூக்கள் சுட்டப்பட்டுள்ளன.*

*நெய்தலுக்குரிய கருப்பொருள்களோடு பிற நிலக் கருப்பொருள்களும் நெய்தற் கலியில் இடம்பெற்றுள்ளதை இப்பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன.*

*சிவபெருமான், தட்சிணாமூர்த்தி, திருமால், கண்ணன், பலராமன், காமன், கூற்றுவன், காலன் ஆகியோரைப் பற்றிய குறிப்புகளும், அசுநம், நாய், கன்று, பசு, ஏறு, எருமை, பிணை, மான், பரி, களிறு, யானை ஆகிய விலங்குகளும், அரவு, குறுமுயல், மீன், கயல், சுறா, அலவன், தேரை முதலிய உயிரினங்களும், அன்னப்பெடை, அன்னச் சேவல், அன்றில், வானம்பாடி, குருகு, நாரை, மயில், பார்ப்பு, ஞிமிறு, சுரும்பு, தும்பி, தேன், வண்டு ஆகிய பறவையினங்களும், மூங்கில், மா, புன்னை, பனை, தேற்றா, தில்லை, தாழை, ஆல், ஆச்சா ஆகிய மரங்களும், தளிர், மாந்தளிர், சுரும்பு, முண்டகம், அடும்பு, முல்லை, புதல், சாய் ஆகிய செடி, கொடி, புதல் வகைகளும், அடும்பு, ஆவிரம், உழிஞை, எருக்கு, கயமலர், கழிமலர், காவிமலர், கொன்றை, கோடல், சினைப்பூ, சண்பகம், செருந்தி, ஞாழல், தாமரை, தாழை, நீலம், நெய்தல், புன்னை, பூளை, பீர்க்கன் ஆகியனவும், வேட்டையாடுதல், ஆநிரை மேய்த்தல் முதலிய தொழில்களும், செவ்வழிப்பண், குழல், யாழ், நரம்பு, பறை ஆகியனவும் நெய்தற் கலியின் கருப்பொருளாக அமைந்துள்ளன.*

கலித்தொகையில் முதல், கரு, உரி அமைக்கப்பட்டுள்ள பின்புலம் குறித்து நா. ஆறுமுகம்,

> முதலும் கருவும் தொடர்புடைய உரிப்பொருளுக்கு ஏற்பச் சிறந்த பின்புலமாக அமைக்கப்பட்டுள்ளன. இயற்கையின் அழகை அதன் சுவைக்காகவே படைத்துக் காணும் பாங்கு கலித்தொகையில் காணப்படவில்லை. சிலவிடங்களில் அறக் கருத்துகளையும் வாழ்வியல் உண்மைகளையும் முதலும் கருவும் வெளிப்படுத்துகின்றன. மேலும் சிலவிடங்களில் சமூக இயல்புகளையும் வாழ்க்கை நெறிகளையும் எடுத்துக்காட்ட அவை பயன்படுத்தப்பட்டுள்ளன எனலாம்.[167]

என்று கருத்துரைத்துள்ளார்.

## உரிப்பொருள்

> புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
>
> ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
>
> தேருங்காலைத் திணைக்கு உரிப்பொருளே"[168]

என்று தொல்காப்பியர் உரிப்பொருளுக்குரிய இலக்கணத்தை வரையறுத்துள்ளார். இந்நூற்பாவிற்கு உரையெழுதிய இளம்பூரணர்,

> பிரிவு பாலைக்கு உரித்தமாறு மேற்சொல்லப்பட்டது. ஏனைய 'மொழிந்த பொருளோ டொன்றவைத்தல்' (மரபு. 112) என்னும் தந்திர உத்தியால், புணர்ந்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும் இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரித்தாகவும் சிறுபான்மை எல்லாப் பொருளும், எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும். இருத்தலாவது, தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல், இரங்கலாவது ஆற்றாமை"[169]

என்று கருத்துரைத்துள்ளார்.

முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து நிலங்களிலும் வரும். ஆனால்

பாலைக்கு முதற்பொருளில் ஒன்றாகிய நிலம் தனியாகக் கிடையாது. எழுதிணைகளில் கைக்கிளை, பெருந்திணைக்கு முதற்பொருளும் கருப்பொருளும் இல்லை. ஆனால் உரிப்பொருள் உண்டு.

> முதலோ கருவோ இல்லாவிடில் கவலை இல்லை. உரிப்பொருள் கட்டாயம் வேண்டும். முதலும் கருவும் வந்தாலும், வாராவிட்டாலும் ஒழுகலாறான உரிப்பொருளுக்கே தலைமையும் சிறப்பும் தரப்படும்"[170]

என்று ம.ரா.போ. குருசாமி கருத்துரைத்துள்ளார். இலக்கியங்களில் உரிப்பொருள் எந்த அளவிற்கு முதன்மை வாய்ந்ததாக அமைகின்றது என்பதை இவரது கருத்து சுட்டிக் காட்டுகின்றது.

கலித்தொகையில் உரிப்பொருள் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**பாலை உரிப்பொருள்**

பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலைக்கு உரிப்பொருள் என்பர். முப்பத்தாறு பாடல்களில் பாலைக்குரிய பிரிதல் உரிப்பொருள் இடம்பெற்றுள்ளன என்றும் தொல்காப்பியரின் கோட்பாட்டின்படி பாலைக்கலிப் பாடல்கள் அமைந்துள்ளன என்றும் பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார்.

தலைவனின் பிரிவை எண்ணி வருந்தும் தலைவியின் நிலையை விளக்குவதாகப் பாலைக்கலிப் பாடல்கள் பெரும்பான்மையும் அமைந்துள்ளன. அந்த வகையில்,

> புறந்தரல் கைவிட்
>
> டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ
>
> தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே[171]

என்னும் அடிகள் தோழி தலைவியின் நிலையைத் தலைவனுக்கு அறிவுறுத்துவதாக அமைந்துள்ளன.

> சொன்னவை யரவத்து மினையவ ணீநீப்பின்

*தன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவள்*

*இன்னுயிர் தருதலு மாற்றுமோ*

*முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே*[172]

இவ்வடிகளும் தலைவியின் நிலையைத் தோழி தலைவனுக்கு எடுத்துரைத்து பொருளீட்டச் செல்வதைத் தடுப்பதாக அமைந்துள்ளன.

**குறிஞ்சி உரிப்பொருள்**

புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் என்பர். குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் கலித்தொகையின் ஐம்பத்தெட்டுப் பாடல்களில் அமைந்துள்ளதாகப் பகவதி கோவிந்தன் குறிப்பிடுகின்றார். குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் குறிஞ்சிக் கலிப்பாக்களில் மட்டும் அமைந்திராமல் ஏனைய முல்லைக்கலிப் பாடல்களிலும் அமைந்திருக்கின்றன என்பது இவ்வாய்வால் புலப்படுகின்றது.

**மருத உரிப்பொருள்**

ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதத்துக்குரிய உரிப்பொருளாகும். இது முப்பத்து நான்கு பாடல்களில் பயின்று வந்துள்ளதாகப் பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார்.

*தீரா முயக்கம் பெறுநரப் புலப்பவர்*

*யாநீ வருநாட்போல் அமைகுவம் யாம் புக்கீமோ*

*மாரிக் கவாவுற்றுப் பீள்வாடு நெல்லிற்காங்*

*காராத் துவலை அளித்தது போலுந்*

*ஓர்யாட் டொருகால் வரவு*[173]

என்னும் பாடலடிகள் பரத்தையர் பிரிந்து வந்த தலைவனைக் கண்டு காமக் கிழத்தியர் ஊடியதையும் பின் இருவர்க்கும் புணர்ச்சி உவகை பிறந்ததையும் இப்பாடல் தெளிவுபடுத்துகின்றது.

மான்நோக்கி நீயழ நீத்தவன் ஆனாது

நாணில னாயின் நலிதந் தவன்வயின்

ஊடுத லென்னோ இனி

இனி யாதுமீக் கூற்றம் யாமில மென்னுந்

தகையது காண்டைப்பாய் நெஞ்சே பனியானாப்

பாடில்கண் பாயல் கொள்[174]

என்னும் பாடலடிகள் தலைவி தலைவனுடன் ஊடல் கொள்வதைத் தோழி தீர்த்துவைப்பதாக அமைந்துள்ளது.

**முல்லைக்குரிய உரிப்பொருள்**

இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லை என்று கூறுவர். கலித்தொகையில் முல்லைக்கலியில் அமைந்துள்ள உரிப்பொருள் பற்றிப் பகவதி கோவிந்தன்,

> முல்லைக்குரிய உரிப்பொருள் ஆற்றியிருத்தலும் இருத்தல் நிமித்தமுமாகும். ஆனால் இவ்வுரிப் பொருளைக் கொண்டமைந்த ஒரு பாடலும் கலித்தொகையில் முல்லைக் கலியில் இடம்பெறவில்லை என்பது அறிதற்குரியதாகும். முல்லைக் கலிப்பாக்களிலோ, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளில் அமைந்த கலிப்பாக்களிலோ முல்லைக்குரிய ஒழுக்கம் சிறிதும் காணப்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகின்றது”[175]

என்று கருத்துரைத்துள்ளார். மேலும் அவர்,

> முல்லைக் கலியில் முதலாறு பாடல்களும் புணர்தற் பொருளிலேயே அமைந்திருப்பதை அறியமுடிகிறது. எஞ்சிய முல்லைக் கலிப்பாடல்கள் இழிந்தோர் மாட்டு நிகழும் கைக்கிளை என்று கூறுவர் நச்சினார்க்கினியர். ஆனால் அப்பாடல்களில் அறத்தொடு நிற்றலும், குறிநேர்தலும், தலைமகனும் தலைமகளும் உரையாடிக் கூட்டத்திற்கு உடம்பட்டதும் தலைவன் பாங்கற்கு கழறலும் அறத்தொடு நிற்கும்படி

*தலைவி கூறலும் நலம்பாராட்டலும் வரைவு கடாவுமாறு தோழிக்குக் கூறலும் களவு வெளிப்பாட்டின்கண் அஞ்சிய தலைமகட்குத் தோழி தமர் வரைவுடம்பட்டமை கூறலும் ஆகியவையே பாடுபொருள்களாக இடம்பெற்றிருக்கின்றன என்பது குறிப்பிடத் தக்கவையாகும்”*[176]

*என்றும் குறிப்பிட்டுள்ளார். கலித்தொகையில் முல்லைக் கலிப்பாடல்கள் பெரும்பான்மையும் குறிஞ்சிக்குரிய உரிப்பொருளாகிய புணர்தலும் புணர்தல் நிமித்தமும் என்பதையே கொண்டுள்ளது என்பது தெரியவருகின்றது.*

**நெய்தல் உரிப்பொருள்**

*இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல் உரிப்பொருளாகும். கலிப்பாடல்களில் ஆறு பாடல்களில் மட்டும் நெய்தலுக்குரிய உரிப்பொருள் வந்துள்ளதாகப் பகவதி கோவிந்தன் குறிப்பிட்டுள்ளார்.*

*வாலிழை மகளி ருயிர்பொதி யவிழ்க்குங் காலை யாவ தறியார்*

*மாலை யென்மனார் மயங்கி யோரே*[177]

*என்னும் பாடலடிகள் மாலைப்பொழுதைக் கண்டு வருந்தும் தலைவியைத் தலைவி தேற்றுவதாக இப்பாடலடிகள் அமைந்துள்ளன.*

*கரைகாணாப் பௌவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்*

*திரைதரப் புணைபெற்றுத் தீதின்றி யுய்ந்தாங்கு*

*விரைவனர் காதலர் புகுதர*

*நிரைதொடி துயரம் நீங்கின்றால் விரைந்தே*[178]

*என்னும் பாடலடிகள் தலைவனை எண்ணி இரங்கும் தலைவி, தலைவனைக் கண்டதும் மகிழ்வதை எடுத்துக் காட்டுகின்றன.*

**கைக்கிளை உரிப்பொருள்**

*கைக்கிளைப் பொருளில் குறிஞ்சிக் கலியில் சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன. கைக்கிளை உரிப்பொருளை வெளிப்படுத்துவதாக,*

நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்

போதர விட்ட நுமருந் தவறிலர்

நிறையாழி கொல்யானை நீர்க்குவிட் டாங்கு

பறையறைந் தல்லது செல்லற்க வென்னா

இறையே தவறுடை யான்"[179]

என்னும் பாடல் அமைந்துள்ளது. கைக்கிளைக்குத் தொல்காப்பியர் வகுத்த இலக்கணம் இப்பாடலில் பொருந்தி வருவதை அறியமுடிகின்றது.

**பெருந்திணை உரிப்பொருள்**

பெருந்திணைப் பொருளில் நெய்தற் கலியில் இருந்து பத்து பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

வருந்தமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்

திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே

பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருத்திறை

போலக் கொடுத்தார் தமர்[180]

என்னும் பாடலடிகள் மடலேறிய தலைவனின் நிலையைக் கண்ட தலைவியின் பெற்றோர் அவர்களுக்கு மணமுடித்து வைத்ததைச் சுட்டுகின்றன. தொல்காப்பியர் வகுத்த பெருந்திணை இலக்கணத்தின் அடிப்படையில் கலிப்பாடல்கள் இடம்பெற்றுள்ளதையும் அறிய முடிகிறது.

**உரிப்பொருள் மயக்கம்**

கலித்தொகையில் ஒருதிணைக்குரிய உரிப்பொருள் அந்தத் திணையில் மட்டும் வரவில்லை. பிற திணைகளிலும் ஒரு திணைக்குரிய உரிப்பொருள் இடம்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

நெய்தல், மருதம், முல்லைத் திணைப்பாடல்களில் குறிஞ்சிக்குரிய உரிப்பொருளாகிய புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகிய உரிப்பொருள்

இடம்பெற்றுள்ளது. இவற்றைப் போல நெய்தற் திணைப் பாடல்களில் பாலை ஒழுக்கமும் மருத ஒழுக்கமும் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

**தொகுப்புரை**

பாலைக்கலிப் பாடல்களில் முல்லை திரிந்த பாலையும் குறிஞ்சி திரிந்த பாலையும் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றில் குறிஞ்சி திரிந்த பாலை நிலமே மிகுதியாக ஆட்சி பெற்றுள்ளன. தொல்காப்பியர் சுட்டிய பாலைக்குரிய நண்பகல் சிறப்பாகப் பாலைக்கலியில் சுட்டப்பட்டுள்ளன.

குறிஞ்சிக் கலியில் நிலம் பல்வேறு பெயர்களோடு அழைக்கப்படுகிறது. அவற்றோடு தொல்காப்பியர் குறிப்பிட்ட நிலத்தியல்புகளோடும் அமைந்துள்ளது. ஆனால் பொழுதுக்குரிய முன்பனிக்காலம் பற்றிய குறிப்பு ஒரு பாடலிலும் இடம்பெறவில்லை.

மருதக் கலியில் தொல்காப்பியர் குறிப்பிட்ட தீம்புனல் உலகம் கூறப்பட்டிருக்கிறது. கார், கூதிர், பின்பனி, இளவேனில் ஆகிய பெரும்பொழுதுகளும் வைகறை, விடியல் ஆகிய சிறுபொழுதுகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

முல்லைக் கலியில் நிலத்திற்கும் பொழுதிற்கும் மிகுதியாக முதன்மை அளிக்கப்படவில்லை என்பதை உணர முடிகிறது.

நெய்தற் கலியில் மணலும் அது சார்ந்த நிலமும் சிறப்பாக வருணிக்கப்பட்டுள்ளன. சிறுபொழுதாகிய எற்பாடும் அழகாகச் சுட்டப்பட்டுள்ளன.

பாலை நில மக்கள் ஞாயிற்றையும் மழையையும் காற்றையும் வணங்கியுள்ளனர். அவர்களுக்குரிய தொழிலைச் செய்துள்ளதையும் வெப்பத்தின் கொடுமையால் வாடிய விலங்குகள் பற்றியும் பதிவுகள் காணப்பட்டுள்ளன.

குறிஞ்சி நிலத்துக்குரிய கடவுளாக முருகனைக் குறிப்பிடுவர். முருகன் வழிபாடு பற்றி வெளிப்படையாகக் குறிப்பு காணப்படவில்லை. குறிஞ்சிக் கலிப்பாக்கள் குறிப்பாகத்தான் உணர்த்துகின்றன.

மருதக் கலியில் இந்திரன் வழிபடு கடவுள் என்று குறிப்பாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளது. வெளிப்படையான பதிவுகள் இல்லை. காமன், சாமன் முதலானவர்களையும் அவர்கள் வழிபட்டுள்ளதாகக் குறிப்பு காணப்படுகின்றது.

முல்லைக் கலியில் திருமால் வழிபாடு வெளிப்படையாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

பாலைக்கலிப் பாடல்கள் அதன் உரிப்பொருளாகிய பிரிதல் பற்றிய செய்திகள் சிறப்பாக இடம்பெற்றுள்ளன. இவ்வொழுக்கம் தொல்காப்பியரின் கருத்துகளோடு அப்படியே பொருந்துவதாக உள்ளன.

குறிஞ்சிக் கலிப்பாக்களில் அதன் உரிப்பொருளாகிய புணர்தல் பற்றிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன.

மருதக்கலி பாடல்களில் அதன் உரிப்பொருளாகிய ஊடல் பற்றிய செய்திகள் விரிவாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

முல்லைக் கலிப்பாக்களில் அதற்குரிய ஒழுக்கமாகிய இருத்தல் பற்றிய ஒழுக்கம் காணப்பெறவில்லை. ஆனால் குறிஞ்சிக்குரிய புணர்தல் ஒழுக்கம் சிறப்பாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

நெய்தல் கலிப்பாக்களில் அதன் உரிப்பொருளாகிய இரங்கல் பற்றிய குறிப்பு மிகக் குறைவாகவே இடம்பெற்றுள்ளன.

பாலைக்கலியில் பிரிதல் பற்றிய செய்திகள் விரிவாக பேசப்பட்டுள்ளன.

குறிஞ்சிக் கலியில் கைக்கிளைக்குரிய ஒருதலைக் காமம் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

மருதக்கலியில் குறிஞ்சி, பெருந்திணைக்குரிய ஒழுக்கமாகிய புணர்தலும் பொருந்தாக் கூட்டமும் இடம்பெற்றுள்ளன.

முல்லைக் கலியில் குறிஞ்சியின் உரிப்பொருளாகிய புணர்தல் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

*நெய்தற் கலியில் பாலை, குறிஞ்சி, மருதம் ஆகிய திணைகளின் ஒழுக்கமாகிய பிரிதல், புணர்தல், ஊடல் ஆகிய உரிப்பொருள்கள் கூறப்பட்டுள்ளன.*

*கைக்கிளை, பெருந்திணைக்கு தொல்காப்பியர் கூறிய கருத்துகள் அப்படியே கலித்தொகையில் பொருந்துவதாக அமைந்துள்ளன.*

**சான்றெண் விளக்கம்**

1. *கலித்தொகை, அணிந்துரை, ப. 7*
2. *தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 5*
3. *தொல்காப்பியர், தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை, அகத், நூ. 5*
4. *தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, அகத், நூ. 5*
5. *தொல்காப்பியர், தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை, அகத், நூ. 16*
6. *ச. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 17*
7. *பெ. மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப. 101*
8. *தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 5*
9. *கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 6*
10. *மேலது, ப. 22*
11. *கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 10*
12. *கே. ஞானாம்பாள் அம்மையார், கலித்தொகை சொற்பொழிவு, ப. 74*
13. *நா. ஆறுமுகம், கலித்தொகை ஆழ்வாய்வு, ப. 21*
14. *தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 3*
15. *தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, அகத், நூ. 3*
16. *நா. ஆறுமுகம், கலித்தொகை ஆழ்வாய்வு, ப. 48*
17. *மேலது, ப. 26*
18. *மேலது, ப. 19*
19. *மேலது, ப. 24*
20. *மேலது, ப. 19*
21. *மேலது, ப. 24*
22. *மேலது, ப. 25*
23. *தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 4*
24. *தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, அகத், நூ. 4*
25. *மேலது, நூ. 4*
26. *தொல்காப்பியர், தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை, அகத், நூ. 4*
27. *மேலது, நூ. 4*

28. *நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூ. 9*

29. *மேலது, நூ. 11*

30. *மேலது, நூ. 12*

31. *ச. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 39*

32. *மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 18*

33. *நா. ஆறுமுகம், கலித்தொகை ஆழ்வாய்வு, ப. 35*

34. *கலித்தொகை, பா. 4:6*

35. *மேலது, பா. 6:1-3*

36. *மேலது, பா.11: 6-7*

37. *மேலது, பா. 10:11-12*

38. *மேலது, பா. 1:5-8*

39. *மேலது, பா. 1:12*

40. *மேலது, பா. 5:2*

41. *மேலது, பா. 7:6*

42. *மேலது, பா. 8:1-6*

43. *மேலது, பா. 10:14-15*

44. *மேலது, பா. 46*

45. *தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 11*

46. *மேலது, நூ. 12.*

47. *கலித்தொகை, பா. 28:12-13*

48. *மேலது, பா. 1:5*

49. *மேலது, பா. 7:2-3*

50. *மேலது, பா. 9:4*

51. *மேலது, பா. 10:4*

52. *மேலது, பா. 19:2*

53. *மேலது, பா. 2-1-2*

54. *மேலது, பா. 4-13-14*

55. *மேலது, பா. 4;20*

56. *மேலது, பா. 50*

*57. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 32*

*58. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 7*

*59. மேலது, நூ. 8*

*60. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், இளம்பூரணர் உரை, நூ. 7-8*

*61. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 44*

*62. கலித்தொகை, பா. 9:4*

*63. மேலது, பா. 12:4*

*64. மேலது, பா. 12:15*

*65. மேலது, பா. 2:14*

*66. மேலது, பா. 9:18*

*67. மேலது, பா. 12:12*

*68. மேலது, பா. 29:3*

*69. மேலது, பா. 13:12-13*

*70. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 56*

*71. கலித்தொகை, பா. 1:1*

*72. மேலது, பா. 5:6*

*73. மேலது, பா. 1;9*

*74. மேலது, பா. 5;1*

*75. மேலது, பா. 6;3*

*76. மேலது, பா. 10;1*

*77. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 34*

*78. கலித்தொகை, பா. 8;1-5*

*79. மேலது, பா. 6:7-8*

*80. மேலது, பா. 27:60-68*

*81. மேலது, பா. 1:12*

*82. மேலது, பா. 32:3*

*83. மேலது, பா. 7-1*

*84. மேலது, பா. 6-48*

*85. மேலது, பா. 17-11*

*86. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 32*

*87. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. 6*

*88. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 35*

*89. கலித்தொகை, பா. 18: 4-5*

*90. மேலது, பா. 19:1-5*

*91. மேலது, பா. 15:1*

*92. மேலது, பா. 15:16*

*93. மேலது, பா. 10:5*

*94. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூ. 10*

*95. கலித்தொகை, பா. 27*

*96. மேலது, பா. 45*

*97. தொல்காப்பியம், நூ. 65*

*98. மேலது, நூ. 21*

*99. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 64*

*100. கலித்தொகை, பா. 3:1-5*

*101. மேலது, பா.7:4*

*102. மேலது, பா. 7:10-11*

*103. மேலது, பா. 13:15*

*104. மேலது, பா. 27: 9*

*105. மேலது, பா. 27: 13*

*106. மேலது, பா. 26:5*

*107. மேலது, பா. 33: 12*

*108. மேலது, பா. 34:8*

*109. மேலது, பா. 1:11*

110. மேலது, பா. 5;14
111. மேலது, பா. 32:5
112. மேலது, பா. 28:16
113. மேலது, பா. 30:4
114. மேலது, பா. 35:10
115. மேலது, பா. 13:7
116. மேலது, பா. 2:6-9
117. மேலது, பா. 4:7
118. மேலது, பா. 4:13-14
119. மேலது, பா. 7:3-4
120. மேலது, பா. 43:16
121. மேலது, பா. 40:15
122. மேலது, பா. 57:12
123. மேலது, பா. 50:13
124. மேலது, பா. 44:4
125. மேலது, பா. 45:2
126. மேலது, பா. 41:31
127. மேலது, பா. 42:16
128. மேலது, பா. 81:9
129. மேலது, பா. 89:8
130. மேலது, பா. 94:33-34
131. மேலது, பா. 6:7-8
132. மேலது, பா. 9:3-5
133. மேலது, பா. 7:1-2
134. மேலது, பா. 66:3
135. மேலது, பா. 69:4
136. மேலது, பா. 72:4
137. மேலது, பா. 92:63
138. மேலது, பா. (74:5)
139. மேலது, பா. 75:1-2

140. மேலது, பா. *91:1*

141. மேலது, பா. *3: 1-4*

142. மேலது, பா. *103: 52*

143. மேலது, பா. *2: 35-36*

144. மேலது, பா. *3:18*

145. மேலது, பா. *3: 53*

146. மேலது, பா. *4:3-4*

147. மேலது, பா. *109:20*

148. மேலது, பா. *108:40*

149. மேலது, பா. *109:23*

150. மேலது, பா. *108:46*

151. மேலது, பா. *104:22*

152. மேலது, பா. *103:53*

153. மேலது, பா. *106:27*

154. மேலது, பா. *103: 59*

155. மேலது, பா. *105:42*

156. மேலது, பா. *106:28*

157. மேலது, பா. *1:13*

158. மேலது, பா. *142:27-28*

159. மேலது, பா. *133:3*

160. மேலது, பா. *127: 4*

161. மேலது, பா. *121:23*

162. மேலது, பா. *147: 38*

163. மேலது, பா. *123:1*

164. மேலது, பா. *119:8*

165. மேலது, பா. *140:7*

166. மேலது, பா. *140:4*

167. நா. ஆறுமுகம், ப. *80*

168. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், நூ. *16*

169. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத், இளம்பூரணர் உரை, நூ. *16*

170. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப.72

171. கலித்தொகை, பா. 5: 17-19

172. மேலது, பா. 7:18-21

173. மேலது, பா. 6:22-26

174. மேலது, பா. 22:11-16

175. பகவதி கோவிந்தன், தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 123

176. மேலது, ப. 125

177. கலித்தொகை, பா. 30

178. மேலது, பா. 35

179. மேலது, பா. 40

180. மேலது, பா. 45

# இயல் -2

## காதல் வாழ்வு

சங்க அக நூல்களில் கலிப்பாக்களால் அமைந்த ஒரே தொகை நூல் கலித்தொகை ஆகும். இது காலத்தால் பிற்பட்டது என்றும் பின்பழந்தமிழ் நூல் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஏனெனில் இவற்றில் கூறப்பட்ட கருத்துகள் ஏனைய சங்க நூல்களிலிருந்து வேறுபட்டு அமைவதே அதற்குக் காரணமாகும். தொல்காப்பியர் திணையை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என எழுதிணையாகப் பாகுபடுத்துகின்றார்.அவர் குறிப்பிட்ட எழுதிணை பற்றிய பாடல்களையும் கொண்டிருக்கும் ஒரே நூல் கலித்தொகை. குறிப்பாக எழுதிணைகளில் கைக்கிளை, பெருந்திணைப் பற்றிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் இந்நூலில் மட்டுமே காணப்படுகின்றன. ஏனைய தொகை நூல்களில் காணப்படவில்லை என்பதும் சுட்டத்தக்கது. எழுதிணை பாடல்களையும் கொண்டிலங்கும் கலித்தொகையில் கூறப்பட்டுள்ள காதல் வாழ்வினை விளக்குவதாக இந்த இயல் அமைகின்றது.

**அகம் புறம் – விளக்கம்**

சங்ககால மக்களின் காதல் வாழ்வினை அகம் என்றும் வீரவாழ்க்கையினைப் புறம் என்றும் கூறுவர். சங்க இலக்கியங்கள் என்னும் கட்டுரையை எழுதிய ச. வையாபுரிப்பிள்ளை அகம், புறம் என்பதற்கு,

> காதலும் போரும் நம் பண்டைத் தமிழ் இலக்கியங்களுக்கு மட்டும் தனித்துரிய பொருள்கள் என்று நினைத்தல் தவறு. கிரீக், லத்தீன் முதலிய பிற மொழிகளிலுள்ள பண்டைச் செய்யுள்களும் இவ் விஷயங்களைப் பற்றியே பெரும்பாலும் அமைந்துள்ளன. வீரமும் காதலும்தான் பண்டைக் காலத்து லட்சியங்கள். காதல் விஷயங்களை அகம் என்பதும் போர் முதலிய புற நிகழ்ச்சிகளைப் புறம் என்பதும் தமிழ்வழக்கு"[1]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார். தமிழ்மொழியில் மட்டுமல்ல; பண்டைக் காலப் பிறமொழியிலும் காதலும் வீரமும் இருந்திருக்கிறது. ஆனால் அவற்றுக்கு அகம் என்றும் புறம் என்றும் பெயர் கொடுத்திருப்பது தமிழ்

வழக்கு என்று கூறியிருப்பது தமிழின் தொன்மையையும் தனித்தன்மையையும் காட்டுவதாக உள்ளது. மேலும் காதலின் இயல்பு குறித்தும் அவர்,

> இது ஒருவனும் ஒருத்தியும் தம்முளே காதல் கொண்டு மணம் புரிந்து இல்வாழ்வு நடத்துகின்ற செய்திகளைப் பல படியாக வகுத்துக் கூறுவது. இப்பகுதிக்குரிய செய்யுள்களை நாம் வாசித்தால் பண்டைக் காலத்து தமிழ் மக்களது இல்வாழ்வும் உயர்ந்த லட்சியங்களும் நன்கு புலனாகும். காதல் என்பது கேவலம் மிருகப் பிராயமான உணர்ச்சியன்று. காதலுக்குக் கங்குகரை இல்லை. ஒரு நெறியில்நிற்பினும் எல்லையற்றுப் பரந்து பெருகித் தோன்றுவது.[2]

என்று குறிப்பிட்டுள்ளார். இது சங்ககாலக் காதலின் இயல்பை நன்கு புரிந்துகொண்டு வழங்கப்பட்ட ஒரு கருத்தாக உள்ளது.

தமிழ்க் காதல் என்னும் சிறந்த இலக்கியப் படைப்பை வெளியிட்ட வ.சுப. மாணிக்கம் கலித்தொகையின் சிறப்பியல்புகள் குறித்து,

> “அகத்திணையாவது கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என எழுபாற் படுவது. ஐந்திணைக்குரிய பாடல்களே ஏனைத் தொகையில் உள. எழுதிணைகளுக்குரிய பாடல்களையும் கொண்டிலங்குவது கலித்தொகையே. கைக்கிளை, பெருந்திணைச் செய்யுள்கள் சங்கவிலக்கியத்து மிகச்சில. அச்சிலதாமும், கலித்தொகை ஒன்றிற்றான் காணப்படுவ. அகத்திணை மாந்தர்களின் இனிய இன்னா உணர்ச்சிகளையும் உரையாடல்களையும் உள்ளங் கிளருமாறு இலக்கியப் படுத்தற்குக் கலிப்பாவின் துள்ளொலி மிக இசைவதாகும். ஏறு தழுவி வரைந்துகொள்ளுதல் என்னும் முல்லைத் துறைப்பாக்கள் கலித்தொகையிலன்றிப் பிற தொகை நூல்களில் காணுமாறில்லை. வெறியாட்டு, மகட்போக்கிய தாயிரங்கல் என்ற துறைப்பாக்களோ கலித்தொகையில் இல்லை”[3]

என்று குறிப்பிட்டுள்ளார். கலித்தொகையில் உள்ளனவும் இல்லனவும் பற்றி இவரது கருத்துரை அமைந்துள்ளது.

*தொல்காப்பியர் கூறுகின்ற களவு, கற்பு இலக்கணத்தின் அடிப்படையில் கலித்தொகையில் காணப்படுகின்ற காதல் காட்சிகளை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது. இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, தோழியிற் கூட்டம், அலர், களவுவெளிப்படுத்தல், உடன் அழைத்துச் செல்ல மறுத்தல், இரவுக்குறி, அறத்தொடு நிற்றல், செலவு அழுங்குவித்தல், கைக்கிளை, பெருந்திணை, மடலேறுதல், வள்ளைப்பாட்டு, ஏறுதழுவுதல், பரத்தை ஒழுக்கம், காமக்கிழத்தி, கூனி குறளன், குறும்புக் காதல் எனும் தலைப்புகளில் இவ்வியல் ஆராயப்படுகின்றது.*

***இயற்கைப் புணர்ச்சி***

*வயதிலும் அறிவிலும் ஒத்தவர்கள் தாமே கூடுவது இயற்கைப் புணர்ச்சி ஆகும். இது குறித்து தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர்,*

> *“காமப்புணர்ச்சி எனினும், இயற்கைப் புணர்ச்சி யெனினும், முன்னுறு புணர்ச்சி யெனினும், தெய்வப் புணர்ச்சி யெனினும் ஒக்கும். இவையெல்லாம் காரணப்பெயர். அஃதாவது ஒத்தார் இருவர் தாமே கூடுங் கூட்டம்”[4]*

*என்று கருத்துரைத்துள்ளார்.*

*கலித்தொகையில் இயற்கைப் புணர்ச்சி பற்றிய பாடல்கள் பல இடம்பெற்றுள்ளன. இந்தப் பாடல்கள் அனைத்தும் கற்பவருக்கு இனிமையைத் தருவதாகவும் அக்காலத்தில் அவ்வொழுக்கம் எத்தகைய சூழலில் நிகழ்ந்தது என்பதை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன.*

*தலைவி ஒருத்தி தன் தோழியிடம் பின்வருமாறு கூறுகின்றாள். ஒப்பில்லாத தலைவன் ஒருவன் வலிமையுடைய யானையைத் தேடுபவன் போல வந்தான். அவன் சிறப்பு வாய்ந்த வில்லினையும் அழகினையும் கொண்டிருந்தான். ஒருநாள் வந்து என்னைக் கண்டவன் பலநாளும் வரத் தொடங்கினான். அவன் உற்ற வருத்தத்தை என்னிடம் சொல்லவில்லை. அவன் மட்டுமல்ல நானும் அவன் நினைவு மிகுதியால் துயில் கொள்ளாமல் அவதியுற்றேன். இத்தகைய வருத்தத்தை நான் அனுபவித்தேன். இடையிலே ஒரு நாள் என் தோள்கள் மெலிந்து இறந்து விடுவேனோ என்று அச்சம்*

தோன்றியது. ஆதலால் நாணமில்லாத ஒரு செயலைச் செய்யத் திட்டமிட்டேன் எனக் கூறுகின்றாள். இக்காட்சியினை,

*கயமலர் உண்கண்ணாய் காணாய் ஒருவன்*

*வயமான் அடித்தேர்வான் போலத் தொடைமாண்ட*

*கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு*

*முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற*

*நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்*

*பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்*

*சேயேன்மன் யானுந் துயருழப்பேன்.*[5]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இத்தகைய தலைவன்மேல் காதல் கொண்ட அந்தத் தலைவி, ஒரு சூழ்ச்சி செய்ததாகவும் கூறுகின்றாள். தினைப்புனம் காவல் செய்யும் இடத்தில் ஊஞ்சலில் நான் ஆடிக் கொண்டிருந்தேன். ஒருநாள் அங்கு வந்தவனை ஐயனே! இந்த ஊஞ்சலைச் சற்று ஆட்டி விடு என்றேன். அவனும் ஆட்டிவிட்டான். அப்பொழுது, பொய்யாக என் கை வழுக்கி அவன் மார்பில் விழுந்தேன். அப்பொழுது அவன் என்னை விரைந்து எடுத்து அணைத்துக் கொண்டான். மெய்வருத்தம் கருதி அவன் கையிலிருந்து நான் விடுவித்துக் கொண்டேன். அப்பொழுது அவன் என்னைப் போ என விடுவித்தான் எனத் தலைவி தன் காதல் ஒழுக்கத்தைத் தோழியிடம் கூறுகின்றாள். இக்காட்சியை,

*இனக்கிளி யாங்கடிந் தோம்பும் புனத்தயல்*

*ஊசலூர்ந் தாட ஒருஞான்று வந்தானை*

*ஐய சிறிதென்னை யூக்கி யெனக் கூறத்*

*தையால் நன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு*

*பொய்யாக வீழ்ந்தேன் அவன்மார்பின் வாயாச்செத்*

*தொய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான்மேல்*

*மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் ஆயிடை*

*மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய்யென*

*ஒண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பின்*

*அங்கண் உடையன் அவன்.[6] (கலி 37)*

என்னும் பாடலடிகள் தெளிவுறக் காட்டுகின்றன. குறிஞ்சிக் கலியின் முதலாவதாக அமைந்த இப்பாடல் கற்பவருக்கு இனிமையைத் தருவதாக உள்ளது என்பதில் ஐயமில்லை. அகவொழுக்கத்தின் தொடக்க நிலையை இந்தப் பாடல் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

மேலது பாடலில் தலைவி ஊஞ்சல் ஆடிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. சங்க காலத்தில் கன்னிப் பெண்கள் ஊஞ்சல் ஆடியதற்கான காரணம் குறித்து ராஜ்கௌதமன்,

> "பழந்தமிழ் அகவல் குறிஞ்சிப் பாடல்களில் தினைப் புனத்தருகே மரக்கிளையில் ஊஞ்சல் கட்டிக் கன்னிப் பெண்கள் ஆடியது வெறும் விளையாட்டு மட்டுமன்று; ஆடுகிறபோது அவள் நிழல் படுகிற பூமிப்பரப்பெல்லாம் – தினைப் புனமெல்லாம் வளம் பெற்று விளைச்சலைத் தரும் என்ற ஆதிமாந்திரீகம் - தாந்திரீகம் சார்ந்த நம்பிக்கையாகவும் இருந்தது"[7]

என்று குறிப்பிட்டுள்ளார். இவர் குறிப்பிடுகின்ற இக்கருத்திற்குச் சங்க இலக்கியத்தில் சான்று உள்ளதாகப் புலப்படவில்லை. மேலும் அவர்,

> "இந்தக் கதை உண்மைச் சம்பவத்தைக் கதைக்குரிய கால, இட ஒருமைப்பாட்டோடு, தேர்ந்தெடுத்த சொற்களால், பெண்ணுக்கிருந்த காலாச்சார கட்டுப்பாட்டுக்குள்ளே நின்று அனுபவம் தோய்ந்த மொழியால், செட்டாகக் கூறப்பட்டுள்ளது. 'காலதேச வர்த்தமானங்களை' கடந்து எந்தக் காலத்திற்கும் உரிதாக இந்த அனுபவம் சார்ந்த கதையை மாற்றி எழுதலாம். தேர்ந்த படைப்பாளனுக்கு அன்றி மற்றோர்க்கு இத்தனை நுட்பம் சார்ந்து

*புனைய இயலாது. (இதனால்தான் குறிஞ்சிக்கலிக்குச் செந்நாப்புலவன் கபிலன் பெயரை ஆசிரியராக இட்டார்கள் போலும்)"*[8]

என்று குறிப்பிட்டுள்ளார். இது உண்மை சம்பவம் என்றும் இப்பாடலைக் கபிலர் நுட்பமாகப் படைத்துள்ளார் என்றும் இவர் கருதுகின்றார்.

மேலது பாடலில் தலைவன் வந்தான், தலைவியைக் கண்டான், காதல் கொண்டார்கள், தழுவினார்கள் என்னும் வரிசைமுறையில் செய்திகள் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவர்கள் அங்குப் பேசிக் கொண்டதாக எந்தக் குறிப்பும் இடம்பெறவில்லை. ஆனால் கலித்தொகையின் மற்றொரு பாடல் இயற்கைப் புணர்ச்சியில் அந்தத் தலைவன், தலைவியின் எழில் நலத்தைக் கண்டு புகழ்ந்து பேசுவதாக அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு;

*அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோட்*

*டுணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்*

*மணமௌவன் முனையன்ன மாவீழ்வா னிரைவெண்பன்*

*மணநாறு நறுநுதன் மாரீவீ ழிருங்கூந்த*

*லலர்முலை யாகத் தகன்ற வல்குற்*

*சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்*

*பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி*

*யினிய சொல்லி யின்னாங்குப் பெயர்ப்ப*

*தினியறிந் தேனது துனியா குதலே*

*பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்*

*மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ.*[9]

அழகிய மூங்கிலை ஒத்த தோளினையும், மலர் போன்ற அழகுமிக்க கண்ணினையும், வரிசையாக அமைந்த பல்லினையும், மணம் வீசுகின்ற நெற்றியினையும், மேக நிறக் கூந்தலையும், பெருத்த முலையினையும், அகன்ற அல்குலையும் உடையவளே! எனத் தலைவன் பல புனைந்துரைகளைக்

கூறியதை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது. இயற்கைப் புணர்ச்சி முடிந்த நிலையில் தலைவன் தலைவியை இவ்வாறு புகழ்ந்ததாகத் தெரிகிறது.

**இடந்தலைப்பாடும் தோழியிற் கூட்டமும்**

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் மீண்டும் அதே இடத்தில் தலைவியைக் காணச் செல்வது இடந்தலைப்பாடு ஆகும். பாங்கற் கூட்டம் என்பது தோழன் உதவியால் கூடும் கூட்டமாகும். தோழியிற் கூட்டம் என்பது தோழியின் உதவியால் கூடுகின்ற கூட்டத்தைக் குறிக்கும். இக்கூட்டம் குறித்துத் தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர்,

> "தலைமக்கள் எதிர்ப்பட்டுழி அன்புடையார் எல்லார்க்கும் இயற்கைப் புணர்ச்சி முட்டின்றிக் கூடுதல் உலகியல் அன்மையான் தலைமகளை யாதானும் ஓரிடத்து எதிர்ப்பட்ட தலைமகன் அவள் காமக் குறிப்பு உணர்ந்து நின்று, கூட்டத்திற்கு இடையீடு உண்டாழியும் ஆண்டு சென்ற வேட்கை தணியாது நின்று, முன்னை ஞான்று கண்டாற் போலப் பிற்றை ஞான்றும் காணலாகுமோ என ஆண்டுச் சேறலும், தலைமகளும் அவ்வாறே வேட்கையான் அடரப்புண்டு ஆண்டுவருதலும் ஆகியவழிப் புணர்ச்சி நிகழும். ஆண்டு ஆயத்தானாராதல் பிறரானாதல் இடையீடு பட்டுழித் தன் வருத்தத்தினைப் பாங்கற்கு உணர்த்தி அவன் தலைமகள் நின்றுழி யறிந்து கூற, ஆண்டுச் சென்று புணரும். அவ்விடத்தும் இடையீடு பட்டுழித் தோழி வாயிலாக முயன்றெய்தும்"[10]

என்று குறிப்பிட்டுள்ளார்.

கலித்தொகையில் இடந்தலைப்பாடு குறித்து ஒரு பாடலும் தோழியிற் புணர்ச்சி குறித்துப் பல பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

தலைவி தன்னுடைய களவொழுக்கம் எப்பொழுதும் தோழிக்குத் தெரிந்துவிடக் கூடாது என்பதில் கருத்தாக இருப்பாள். அதனால் அவள் தோழியிடம் தம் களவொழுக்கத்தை மறைக்கவும் செய்வாள். தோழி அதனைக் கண்டறிவதாக,

நோக்குங்கால் நோக்கித் தொழூஉம் பிறர்காண்பார்

தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்

போக்குங்காற் போக்கும் நினைந்திருக்கும் மற்றுநாங்

காக்கு மிடமன் றினி

எல்லா எவன்செய்வாம்

பூக்குழாய் செல்லல் அவனுழைக் கூஉய்க்கூஉய்

விரும்பி யான் விட்டேனும் போல்வலென் றோண்மேற்

கரும்பெழுது தொய்யிற்குச் செல்வலீங் காக

இருந்தாயோ என்றாங் கிற

அவனின் திருந்தடி மேல்வீழ்ந் திரக்குநோய் தீர்க்கும்

மருந்துநீ யாகுத லான்.[11]

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. தோழி தலைவியின் களவொழுக்கத்தைக் கண்டறிந்து நகையாடுவதாகவும் மீண்டும் அவளுக்கு உதவி செய்வதாகவும் இப்பாடல் அமைந்துள்ளது.

தோழி தலைவியைப் பார்த்து, நீ அவன் நோக்காதபொழுது அவனைப் பார்க்கிறாய். அவன் மகளிரை வணங்குவதைப் பிறர் காண்பார் என்று அஞ்சாமல் நம்மை நோக்கி வணங்குகிறான். அப்படி வணங்குவதை விட்டுவிட்டுப் அவ்விடத்தை விட்டுப் போனால் துன்பம் வரும் என்று எண்ணிப் போகாதிருக்கிறான். ஆதலால் அவன் இனி நம்மிடம் வருவான் என்று கூறி நயமாகத் தலைவிக்கு அவளது காதலை அறிந்ததை வெளிப்படுத்துகிறாள். மேலும், பூங்குழலினை உடையவளே! நீ இனி அவனிடம் நான் அறியாதவண்ணம் செல்லாதே! நானே பலகாலும் அழைத்துக் கொண்டு விடுவேன் போல நடிப்பேன். நீயும் அந்த நாடகத்திற்கு ஏற்ப நடிப்பாயாக! எனத் தோழி கூறுகிறாள். இந்தப் பாடல் தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த தோழி இனி நீ தனியே செல்லாதே! நானே அழைத்து வந்து விடுகிறேன் எனக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலுக்கு பொ.வே. சோமசுந்தரனார்,

"யாம் நோக்குங்கால் நோக்கி என்றது, நீ தானும் அவன் நோக்காக்கால் அவனை நோக்குதி யன்றோ என்னும் கருத்தினைத் தோழி நாகரிகமாக நவின்ற படியாம். இதனால் கூட்டமுன்மையைத் தான் அறிந்தமை புலப்படுத்தினாளாயிற்று. பிறர் காண்பார் தூக்கிலி. தான் மகளிரைத் தொழுவதனைப் பிறர் காண்பரே என்று ஆராயாதவன் என்றவாறு. இது, தலைவன் குறை நயத்தற்கு ஏதுக் கூறியபடியாம். என்னை? நீதான் அவனை ஏற்காதொழியின் இங்ஙனமே பிறர் காணவந்து குடிபழியுண்டாக்குவன் என்பது குறிப்பாகலின். போக்கினும் போகான் என்பதும் குறை நயப்பித்தற்கு ஏதுக்கூறிய படியாம். நாம் காக்குமிடமன்று என்றது காக்குவமேல் அவன் இறந்துபடுவன் என்று குறிப்பாகத் தலைவியை அச்சுறுத்திக் குறை நயப்பித்தவாறு. இத்துணையுங் கேட்டும் தலைவி மறுமொழி கொடாது நாணி நிற்றலின், எல்லா எவன் செய்வாம்? என்று வினவினள். இது நாணி நிற்குமவளுக்கு இனி யாம் செய்யற்பாலன இவை என்று அறிவுறுத்தற்குத் தோற்றுவாய் செய்தபடியாம். இவ்வாறே சொற்றொறும் ஆராய்ந்து இச்செய்யுளின் அழகுணர்ந்து மகிழ்க" [12]

என்று விளக்கவுரை எழுதியுள்ளார். இப்பாடலுக்காக உரையினை படிக்கும்தோறும் மகிழ்ச்சி தோன்றும் என்றும் இவர் சுட்டுகின்றார். இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

இப்பாடல் கலிவெண்பாட்டாகையால் எடுத்துரைப்பிற்கும்,உரையாடலுக்கும் வசதியாக உள்ளது. இவ்வாறாகத் தலைவிதோழிக்கிடையில் தலைவனோடு கூடுவது பற்றிய மிக அந்தரங்கமான பேச்சுக்களைப் பழந்தமிழ் அகவல் அக இலக்கியத்தில் கண்பதரிது. இத்தகைய பேச்சுக்கள் கவித்துவத்தை குறிவைத்துப் பதிவு செய்யப்படவில்லை என்பது வெளிப்படை. ஒரு நாடகக் காட்சியை(கூத்து) பார்ப்பவர்களை ஈர்க்கின்ற நோக்கத்தில் இத்தகைய காமியம் சம்பந்தமான அந்தரங்கமான பேச்சுக்கள் பாடலாக இயற்றப்பட்டதாக அனுமானம் செய்யலாம்.[13]

என்று கருத்துரைத்துள்ளார். இப்பாடல் ஒரு நாடக காட்சி போல அமைந்துள்ளது என்றும் பார்ப்பவரை ஈர்க்கிற நோக்கத்திற்காகக் காமத் தன்மையில் பாடப்பட்டுள்ளது என்றும் இவர் சுட்டுவது ஏற்புடையதாகவே தோன்றுகின்றது.

சங்க இலக்கியத்தில் களவுக் காலத்தில் தலைமக்களுக்குப் பேருதவி புரிபவள் தோழி ஆவாள். அதனால்தான் தொல்காப்பியர் அவளை "ஒன்றித் தோன்றும் தோழி மேன" எனக் குறிப்பிட்டிருக்கின்றார். தலைவிக்கு ஒப்பானவள் தோழி என்னும் கருத்து இங்குப் புலப்படுகின்றது. தோழியிற் புணர்ச்சி பற்றிய பாடல்களே சங்க இலக்கியத்தில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இது குறித்து வ.சுப. மாணிக்கம்,

> *"சங்க இலக்கியத்து 882 களவுப் பாடல்கள் உள. இவற்றுள் 40 பாடல்களே இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற மூன்று வகைக்கும் உரியன. எஞ்சிய 842 பாடல் 95 விழுக்காடு – தோழியிற் புணர்ச்சி என்னும் ஒருவகைக்கே வருவன. இதனால் தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும் ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் (பாத்திரம்) இன்றியமையாதவள் என்பதும் தோழியிற் புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சைக் கவர்ந்தன என்பதும் பெறலாம்"*[14]

என்று கருத்துரைத்துள்ளார். கலித்தொகையில் தோழியிற் புணர்ச்சியை விளக்கும் வகையில் அமைந்த,

> ஒன்று, இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும் உலகம்
> புரப்பான் போல்வந்தோர் மதுகையும் உடையன்
> வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
> நல்லார்கட் டோன்றும் அடக்கமும் உடையன்
> இல்லோன் புன்கண் ஈகையிற் றணிக்க
> வல்லான் போல்வந்தோர் வன்மையும் உடையன்

*அன்னான் ஒருவன்தன் ஆண்டகை விட்டென்னைச்*

*சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய்*[15]

*என்னும் பாடல் தலைவிக்குத் தோழி அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது. அவன் நம்மிடம் ஒன்று இரப்பவன் போல் பேசுகிறான். ஆனால் தோற்றத்தைப் பார்த்தால் உலகையே காக்கின்றவன் போலிருக்கிறான். வீரமுடையவன் ஆயினும் சான்றோர்களிடம் பயின்றவன் போல் அடக்கமுடன் இருக்கிறான். என்னிடம் இரப்பவன் போல் வந்து சொல்லும் அவன் மிகப்பெரிய வள்ளல் போலவும் காணப்படுகின்றான் எனத் தோழி தலைவனின் அருமையைத் தலைவிக்கு எடுத்துரைத்துரைத்து தலைமக்களின் சந்திப்பிற்கு உறுதுணையாக இருக்கின்றாள்.*

***அலர்***

*அம்பலும் அலருங் களவுவெளிப் படுத்தலின்*

*அங்கதன் முதல்வன் கிழவ னாகும்.*[16]

*என்று தொல்காப்பியர் அலருக்குரிய இலக்கணத்தை வரையறுத்துள்ளார். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர்,*

> *“அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவரொருவர் முகக்குறிப்பினாற் றோற்றுவித்தல். அலராவது சொல்லுதல். அதனானே இவை இரண்டும் களவினை வெளிப்படுத்தலின் அதற்குக் காரணமாவான் தலைவன் என்றவாறு”* [17]

*எனும் விளக்கத்தை வழங்கியுள்ளார். அலர் தலைவன் அறியாமால் நிகழாது என்றும் தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.*

*ஒரு பெண்ணின் காதல் ஒழுக்கத்தைப் பற்றி ஊர் மகளிர் வாய்க்குள் பேசிக்கொள்வது அம்பல் எனப்படும். அதையே வெளிப்படையாகப் பேசுவது அலர் என்று கூறுவர். ஊர்ப் பெண்களால் தூற்றப்படும் அலர் பல நன்மைகளை விளைவிக்கும். அலரைத் தலைவியும் தோழியும் பழித்தாலும் அதனால் உண்டாகும் பயனை அறிந்தவராகவே இருந்தனர். அலருக்குத் தலைவன்*

*அஞ்சாமல் மகிழ்ச்சி அடைந்திருக்கிறான் என்பதைக் கலிப்பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன.*

*ஒண்ணுதால்,*

*இன்ன உவகை பிறிதியாது யாயென்னைக்*

*கண்ணுடைக்கோலள் அலைத்ததற் கென்னை*

*மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி*

*அலர்செய்து விட்டாதிவ் வூர்.*[18]

*என்னும் பாடலடிகள் அலர் பற்றி வருகின்றன. ஒருதாய் தன் மகளைக் கடிந்துரைக்கின்றாள். இதனைக் கண்ட பெண்கள் தலைமக்களுடைய களவொழுக்கத்தைப் பற்றி அலர் தூற்றத் தொடங்கிவிட்டனர். இவ்வலர் பற்றித் தெரிந்த தலைவி வருந்தவில்லை. தன்னை அவனோடு சேர்த்துப் பேசப் பேசத் தலைவிக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. இனி தம் பெற்றோர் அத்தலைவனுக்கே தன்னை மணமுடித்து வைப்பர் என்றும் தன் கற்புக்கு ஊறு இல்லை என்றும் எண்ணி அலரை மதிக்கிறாள் என்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதே கருத்தில் அமைந்த,*

*அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்*

*பலரறியார் பாக்கியத் தால்*[19]

*எனும் திருக்குறள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*தலைவன் அலர் தோன்றியதால் இனி களவொழுக்கம் கிடைக்கப்பெறாது என்பதை அறிகின்றான். ஆனால் அவனுக்குக் களவின்பத்தை நீட்டிக்கும் ஆவல் எழுகின்றது.*

*“மாணாஊர் அம்பல் அலரின் அலர்கென*

*நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி*

*பூணாகம் நோக்கி இமையான் நயந்துநங்*

*கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று*

*நாணடப் பெயர்த்த நயவர வின்றே.*[20]

*என்னும் பாடலடிகளின் வழி அலருக்கு நாணாத ஆண்மகனின் தன்மையை அறிந்துகொள்ள முடிகிறது. முகிழ்முகிழ்த்த அம்பல் இன்னும் விரிந்து மலராக மலரட்டுமே என்று ஒரு தலைவன் துணிவாகப் பேசுகிறான். இந்தத் துணிவு பெண்களுக்கு வருவதில்லை. அவர்களது நாணமே அவர்களைத் தடுக்கிறது. நாணம் இல்லாதவனைச் சாகச் சொல்வதோ எனத் தோழி கேட்கிறாள். அதற்குத் தலைவி நமக்கு அலர் எழுந்தால் எழட்டும் என நினைக்கும் அவனுக்கு நாணமும் நிறையும் ஒரு பொருள் அல்ல. ஆகவே அவன் இறக்கவும் மாட்டான். இவ்வாறு தலைவி அவன் மேல் வெறுப்பாகப் பேசினாலும் மிகுந்த காதல் உடையவளாகவே இருந்திருக்கிறாள் என்பதையே இது உணர்த்துகின்றது.*

*உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்*

*ஒல்லை உணரப் படும்.*[21]

*தலைவியின் மனநிலையை என்னும் குறட்பாக் கருத்தும் வெளிப்படுத்துகின்றது.*

*ஆனால் இப்படிப்பட்ட தலைவனிடம் தோழி, தமக்குத் துணையாகத் தெய்வம் இருக்கும் என்று எண்ணி வழிபடுபவர்க்கே அத்தெய்வம் தீங்கு செய்தது போல நீ செய்துவிட்டாய். உடனே அவளை மணந்துகொள் எனக் கூறி இடித்துரைக்கின்றாள். இதனை,*

*வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்கண்*

*கழியுநோய் கைம்மிக அணங்காகி யதுபோலப்*

*பழிப்பரந் தலர் தூற்ற என் தோழி*

*அழிபடர் அலைப்ப அகறலோ கொடிதே.*[22]

*என்னும் பாடலடிகளின் வழி அறிந்துகொள்ள முடிகிறது. இப்பாடலடிகளுக்குப் பொ.வே. சோமசுந்தரனார்,*

“இப்பகுதியில் தலைவன் செய்த கொடுமைக்குத் தோழி கூறும் உவமைத் திறம் மிக மிக நுணுக்கமாதல் அறிக”[23]

என்று கருத்துரைத்துள்ளார். ஆனால் இவர்களுக்கெல்லாம் முற்றும் முரணாக ஊரலரை மிக வெறுக்கும் ஒருவராகத் தலைவியின் தாயே திகழ்கிறாள். அவள் நற்றாயாகவோ அல்லது செவிலித் தாயாகவோ இருக்கலாம். அவர்கள் அம்பலையோ அலரையோ விரும்புவதில்லை என்பதையும் நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது.

**அறத்தொடு நிற்றல்**

தலைவி தன்னுடைய களவொழுக்கத்தைத் தோழிக்கு எடுத்துரைத்து, தோழியின் வாயிலாகச் செவிலிக்கு அறிவுறுத்தி, செவிலி நற்றாய்க்கு அறிவுறுத்துவாள். அவள் தமையனுக்கு அறிவுறுத்துவாள். இவ்வாறு தலைவியின் களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்தும் முறையை அறத்தொடு நிற்றல் என்பர்.

அறத்தொடு நிற்றல் துறையில் கலித்தொகையில் பல பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் சிலவற்றை மட்டும் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

…………… ………..

நரந்தநா றிருங்கூந்தல் எஞ்சாது நனிபற்றிப்

பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை

நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்

விரன்முறை சுற்றி மோக்கலு மோந்தனன்

நறாஅவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போதுகொண்டு

செறாஅச் செங்கண் புதைய வைத்துப்

பறாஅக் குருகின் உயிர்த்தலு முயிர்த்தனன்

தொய்யி லிளமுலை யினிய தைவந்து

தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கும்

மையல் யானையின் மருட்டலும் மருட்டினன்

அதனால்

அல்லல் களைந்தனன் தோழி நந்நகர்

அருங்கடி நீவாமை கூறின் நன்றென

நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்

தின்னது செய்தா ளிவளென

மன்னா வுலகத்து மன்னுவது புரையுமே.[24]

நொதுமலர் வரைவிற்கு மணமுரசு இயம்புகிற சத்தத்தைக் கேட்ட தலைவி, தோழியிடம் கையகப்பட்டு வருந்திய தலைவனின் வருத்தத்தைக் களைந்த முறையையும், இன்னவாறு கூட்டம் நிகழ்ந்தது என்பதையும் கூறி அறத்தொடு நிற்க அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

பொன்னால் செய்யப்பட்ட கோதையினையும் மெல்லிய தோளையும் உடையவளே! உன் பாதத்தில் நான் உறைவதற்கு நீ அருள் செய்யாமல் இருப்பாயா என்று கூறி என் கூந்தலில் உள்ள ஒரு நரந்தம்பூவை எடுத்து முகர்ந்து பார்த்தான். என்னுடைய கையை அவன் பிடித்துக் கொண்டு தன் கண்ணில் ஒற்றிக் கொண்டான். தெய்யில் எழுதிய என்னுடைய இளைய முலையை இனியவாகத் தடவிக் கொடுத்தான். தான் விரும்பிய பிடியை அருள்செய்யும் களிறுபோல என்னுடைய மேனி முழுக்கத் தடவினான். அப்பொழுது கையகப்பட்டு கலங்கிய என் வருத்தத்தை நீக்கினான். தோழி! நம் குடிக்குக் குற்றம் வராமல் நின்மகள் கற்புக்கடம் பூண்டாள் என்று தமருக்கு அறத்தொடு நின்றால் நமக்கு நல்லது என்று உன்னிடம் கூறுகிறேன் எனத் தலைவி தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்தது. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

> “இந்த விவரிப்பு பாலியல் உறவாடலில் உடலுறவுக்கு முந்திய காதலும் காமமும் நெருக்குவதால் உண்டாகும் முன்னிகழ்வைப் பற்றியதாகவுள்ளது. ஒரு பெண், தனக்கும் தன் காதலனுக்கும் இடையில்

*புணர்ச்சி நிகழ்ந்ததென்பதைப் பெண்ணின் (கலாச்சார) வரம்புக்குட்படுத்த தன் நெருங்கிய தோழியோடு பகிர்ந்துகொள்வதாக இருக்கிறது. தொல்காப்பியம் அகவல் மரபை ஒட்டி வரையறுத்த பெண் வேறு (அந்த வரையறையும் கி.பி. 400 – 500 காலகட்டத்தைவையாகும்). இங்கே தன் அந்தரங்கத்தைத் தோழியிடம் பகிர்ந்திடும் பெண் வேறு.*[25]

என்று தொல்காப்பியர் காலப் பெண் வேறு, கலித்தொகை கூறிய பெண் வேறு என்பதை இப்பாடல் கொண்டு வேறுபடுத்திக் காட்டுகின்றார்.

மற்றொரு பாடல் அறத்தொடு நிற்றல் முறைமையைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

*அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*

*என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்*

*அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேர்ந்*

*தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி*

*இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று*

*தெருமந்து சாய்த்தார் தலை.* [26]

என்னும் பாடலடிகளில் தலைவன் பெண் கேட்டு தமர் கொடுக்காது அறம் பிழைத்தால் அவர்கள் நாட்டில் வள்ளிக் கிழங்கு நிலத்தில் வீழாது. அதுமட்டுமல்ல தேனீக்கள் மலையில் கூடு கட்டாது. கொல்லையில் தினைக் கதிர்கள் முற்றி விளையாது என்னும் உயர்ந்த அறங்கள் கூறப்பட்டுள்ளன. தலைவன் ஒருவன் பெண் கேட்டு வருகின்றான். தமர் மறுக்கின்றனர். தலைவி தோழியிடம் சொல்லி, தோழி செல்விக்குச் சொல்லி, செவிலி நற்றாய்க்குச் சொல்லி, நற்றாய் தமருக்கு அறத்தொடு நிற்கின்றாள். இதனைக் கேட்ட அவளது தமையன்மார் பகலெல்லாம் கோபத்தோடு கண் சிவந்து தேர்ந்தெடுத்த அம்புகளையும் வில்லையும் பார்த்து பார்த்து கோபம் தணிந்து இருவரிடத்தும் பிழை இல்லை என்பதை உணர்ந்து பின் வரைவுக்கு உடன்படுவதை விளக்குவதாக மேலது பாடல் அமைந்துள்ளது.

**உடன் அழைத்துச் செல்ல மறுத்தல்**

தலைவன் பொருளீட்டச் செல்ல நினைக்கிறான். அதனை உணர்ந்த தலைவி தானும் வருவதாகக் கூறுகின்றாள். ஆனால் தலைவன் தலைவியின் மென்மைத் தன்மையையும் காட்டின் கொடுமையையும் கூறி அவளை விட்டுப் பிரியக் கருதுகிறான் என்பதை விளக்குவதாக,

எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்

மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை

யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்

கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ

நலம்பெறு சுடர்நுதா லெம்மொடு நீவரி

னிலங்குமா ணவிர்தூவி யன்னமென் சேக்கையுட்

டுலங்குமான் மேலூர்தித் துயிலேற்பாய் மற்றாண்டை

விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ

கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்

றளிபொழி தளிரன்ன வெழின்மேனி கவின்வாட

முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த

வளியுறி னவ்வெழில் வாடுவை யல்லையோ[27]

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. ஒளிவீசும் வளையலை அணிந்தவளே! நீ என்னுடன் வந்தால் அனிச்சம் பூவை ஒத்த உன்னுடைய மெல்லிய அடிகள் காட்டிலுள்ள கற்கள் பட்டு சிவந்துபோகும். அதுமட்டுமல்ல அன்னத்தின் இறகால் செய்யப்பட்ட மென்மையான கட்டிலின் மேல் உறங்கும் நீ அக்காட்டில் சிங்கத்தின் குரல் கேட்டு அஞ்சுவாய். தளிரை ஒத்த உன் மேனி அழகு இழந்து காணப்படும் எனக் கூறி தலைவன் தலைவியை விட்டுப் பிரியக் கருதுகின்றான்.

## *இரவுக்குறி இடையீடு*

*நடு இரவில் தலைவியின் இல்லத்திற்கு அருகிலேயே தலைவனும் தலைவியும் சந்திப்பத்தை இரவுக்குறி என்பர். இரவுக்குறி இடையீடு பற்றிய பாடல் ஒன்று கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது. அப்பாடல் தோழி தலைவியிடம் கூறுவதாக அமைந்துள்ளது.*

*ஊரெங்கும் உறங்கும் நள்ளிரவில் காதலனை வரச் சொன்ன இடத்தில் போர்வையைப் போர்த்திக் கொண்டு நான் நின்றேன். அப்பொழுது மயிரெல்லாம் கொட்டிய தலையும், போர்வை போர்த்திய உடலும் கருங்குட்டத்தால் கரிந்து குறைந்த கையும் காலும் கொண்டு, நம் தெருவைவிட்டு எங்கும் செல்லாதிருக்கும் பார்ப்பானைக் காட்டி இவனுக்கு அருள் செய்க எனப் பலமுறை நீ கூறினாய் அல்லவா! அவன் அந்த இரவு வேளையில் நான் நிற்கும் இடம் வந்து குனிந்து என்னைப் பார்த்தான். அவன் ''பெண்கள் நிற்கக் கூடாத நேரத்தில் இங்கே நிற்கிற நீ யார் என்று கூறி என் பக்கம் வந்தான். வைக்கோலைக் கண்ட கிழட்டெருமை போல் என்னை விட்டு நகராது நின்றான்.*

*தையலே! தாம்பூலம் தின் என்று எடுத்துக் கொடுத்தான். அப்பொழுது நான் பேசாமல் இருந்தேன். அவன் உடனே என் அருகில் வந்து என் கையில் அகப்பட்டுக் கொண்டாய் நீ எனப் பாய்ந்தான்.*

*நான் ஒரு ஆண் பிசாசு. எனக்கு நீ அருள் செய்யவில்லை என்றால் இந்த ஊரில் உனக்கு வரும் பலியை நீ பெறாத படி நான் பறித்துக் கொள்வேன் என்று ஓயாமல் பேசிக் கொண்டிருந்தான். அவன் என்னைப் பெண் பிசாசு என்று நினைத்து இவ்வாறு பயப்படுகிறான் என்பதைப் புரிந்துகொண்டேன். உடனே கீழே கிடந்த மணலை அள்ளி அவன் மேல் வீசினேன். பார்ப்பான் அலறி அடித்துக் கொண்டு கூச்சலிடத் தொடங்கினான். அவன் போட்ட கூச்சலால் ஊரே விழித்துக் கொண்டது. தனியாக இருக்கும் பெண்களிடம் இப்படிச் செய்வதையே இவன் வழக்கமாகக் கொண்டிருக்கிறான். இவன் பண்ணிய கூத்தால் தலைவன் அன்று குறியிடம் வர முடியாமல் போனது. கடைசியில் ஒரு புலிக்கு விரித்த வலையில் ஒன்றுக்கும் உதவாத குள்ள நரி ஒன்று மாட்டியது போல் ஆகிவிட்டது என்று கூறுகிறாள். இதனை,*

.... ……

*சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்*

*தோழிநீ போற்றுதி யென்றி அவனாங்கே*

*பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி*

*யாரிவண் நின்றீ ரெனக்கூறிப்*

…………. …………….

*முதுபார்ப்பான் அஞ்சின னாதல் அறிந்தியான்*

*எஞ்சா தொருதகை மணற்கொண்டு மேற்றூவக்*

*கண்டே கடிதரற்றிப் பூசல் தொடங்கி னனாங்கே*

……………

*இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர்*

*ஏதில் குறுநரி பட்டற்றாற் காதலன்*

*காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅம்*

*ஆகுல மாகி விளைந்தது.* [28]

*என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இப்பாடல், தலைவன் சிறைப்புறத்தில் இருப்பதை உணர்ந்த தோழி தலைவிக்குக் கூறுவதாக அமைந்துள்ளதாக நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். ஆனால் இப்பாடல் குறித்து கருத்துரைத்த ராஜ்கௌதமன்,*

> *“இரவுக்குறி அலராகும் என்றஞ்சிய தோழி தலைவனை இரவுக்குறி நீக்க கருதி அல்லகுறிப்படுதலை (குறிதவறும் நிகழ்ச்சியை) ஒருகதைபோலக் கூறுகிறாள். இரவுக்குறியறிதற்குச் சென்றபோது ஒரு பொய்யை நாடகவழக்கும் உலகியல் வழக்கமாகப் புனைந்துகொண்டு பிற்றைஞான்று (பிறகு ஒரு சமயம்) தலைவன் சிறைப்புறமாக மறைந்திருந்து கேட்குமாறு தலைவிக்குக் கூறியது. எப்படியாகத் தலைவி கூற்றாக இல்லாமல் தோழி கூற்றாக மாற்றிவிட வேண்டும் என்ற*

ஒழுக்கவியல் கடுப்பின் காரணமாகக் கதைசொல்லியை மாற்றுகிற உரையாசிரியன் செயல் தலையைச் சுற்றி மூக்கைத் தொடுகிற செயலை ஒத்ததாக உள்ளது.[29]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது கருத்தின்படி இப்பாடல் தலைவி கூற்று என்பதாகத் தெரிகிறது. உரையாசிரியர்கள்தான் இப்பாடலுக்குப் பொருத்தமான துறையை வகுக்கவில்லை என்று அவர்கள் மீது குற்றம் சாட்டுகின்றார். மேலும் இவர்,

*"இக்கதையில் காணப்படும் சந்தர்ப்ப சூழலுக்கும் பாத்திரங்களுக்கும் ஒட்டிய உரையாடலும், வழக்குத் தொடர்களும் எதார்த்த நிலைமைக்கு ஏற்ற உணர்ச்சிக் கட்டமைப்பும், படைப்பு ரீதியான – கற்பனைக்கு அதிகமான புனைவுகளும், உலக வழக்கு சார்ந்த எடுத்துரைப்பும் பழந்தமிழ் அகவல் மரபிற்கு அந்நியமானவை அல்ல. எனினும் இவை அனைத்தும் மிகைப்படுத்தப்படாமல் புனைவு என்னும் ஓர்மையை ஏற்படுத்தாமல் புனைந்த இப்பாடலின் எடுத்துரைப்பு வியக்கவைக்கின்றது"*[30]

என்று கருத்துரைத்துள்ளார். இப்பாடலில் உரையாடலும் உணர்ச்சிக் கட்டமைப்பும் கற்பனைக்கு அதிகமான புனைவுகளும் மிகுதியாக இடம்பெற்றுள்ளதாக இவர் சுட்டுகின்றார். ஆனால் கலித்தொகைக்கு விளக்கவுரை எழுதிய பொ.வே. சோமசுந்தரனார்,

*"இதன்கட் கூறுவனவெல்லாம், யாங்கள் அல்லக்குறிப்பட்டேம் என்றற்கும் இரவுக்குறிக்கண் இன்னோரன்ன இடையூறுகள் பலவுள்ளன; ஆதலால், நீ இனி வரைந்து கொண்டாலன்றி எம் பெருமாட்டியை எய்த வழியில்லை என்று குறிப்பால் உணர்த்தி வரைவு கடாததற்குப் படைத்துக் கொண்ட பச்சைப் பொய்களேயாகும். ஏன் இவ்வாறு பொய் கூறுகின்றாள்? "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என நுண்ணிதின் அறஞ் செவியுறுத்த வள்ளுவனார் வகுத்த நெறி நிற்பவளாதலாற்றான் என்க"*[31]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது கருத்தின்படி தோழி, சிறைப்புறத்தனாக இருக்கும் தலைவனை விரைவில் மணந்துகொள்ள கூறப்பட்ட பொய்களே

என்று கூறுகின்றார். ராஜ்கௌதமன் உரையாசிரியர்கள் தலைவிக்குக் களங்கம் வராமல் பாதுகாத்தனர் என்று கூறுகின்றார்.

இலக்கியங்களில் தலைவிக்கு இணையாகக் கருதப்படுபவள் தோழி ஆவாள். சங்க இலக்கியங்களில் இவளுக்குத் தனித்த இடம் உண்டு. அந்த வகையில் கலித்தொகையில் தோழியின் பங்கு எத்தகைய நிலையில் அமைந்துள்ளது என்பது குறித்து இங்கு ஆராயப்படுகின்றது.

தலைவன் தலைவியைக் குறியிடத்துக் காணாது வருந்தி, அவ்விடத்திலிருந்து விலகுகிறான். இதனை அறிந்த தலைவி அது தம்மால் நிகழ்ந்தது என வருந்துவானோ என எண்ணுகிறாள். இப்படி வருந்தும் தலைவியின் நிலையைத் தோழி அவனுக்குக் கூறுவதாக,

கலந்தநோய் கைம்மிகக் கண்படா என்வயின்

புலந்தாயும் நீயாயிற் பொய்யானே வெல்குவை

இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலைச்

சிலம்புபோற் கூறுவ கூறும்

இலங்கே ரெல்வளை யிவளுடை நோயே.[32]

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. தலைவியால்தான் குறியிடம் பிழைத்தது. நீ குறி தப்பியதால் வரவில்லை என்று கூறினால் அவள் கலங்குவாள். அவள் என் மேல் சொல்லும் பழியை, நீயும் சுமத்தினால் அவள் நம்புவாள். உன்னையும் ஏற்றுக் கொள்வாள் எனத் தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனிடம் வெளிப்படுத்துகின்றாள்.

இப்பாடல் எந்தப் பிழையும் செய்யாத தோழி தலைவிக்காகத் தன்மேல் பழியைச் சுமத்திக் கொள்கின்ற உயர்ந்த பண்பைக் காட்டுகின்றது.

களவை நீட்டிக்க விரும்பாத தோழி தலைவனிடம் விரைந்து தலைவியை மனந்துகொள் என்பதை வலியுறுத்துவதாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூழ் இளமுலை

முகிழ்செய முள்கிய தொடர்பவள் உண்கண்

அவிழ்பனி யுறைப்பவும் நல்காது விடுவாய்

இமிழ்திரைக் கொண்க கொடியைக் காண்நீ

இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ

நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்

புலந்தழப் புல்லாது விடுவாய்

இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காண்நீ[33]

தோழி தலைவனைப் பார்த்து, இனிமையான மொழியை உடையவளின் இளமுலை தோன்றிய இளம்பருவத்தில் அவளைக் கூடினாய். அதனால் அவளது கண்களிலிருந்து விழும் நீர்த்துளியைத் துடைக்காமல் விட்டுவிட்டவனே! நீ மிகக் கொடியவன் எனத் தோழி இடித்துரைக்கின்றாள். தலைவனை இந்த அளவுக்கு இடித்துரைக்கும் ஆற்றலும் உரிமையும் தோழிக்கு உண்டு என்பதை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

**செலவு அழுங்குவித்தல்**

செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே

வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்.[34]

என்று தொல்காப்பியர் செலவு அழுங்குவித்தலுக்கு இலக்கணத்தை வரையறுத்துள்ளார். பொருளீட்டச் செல்லும் தலைவனைச் செல்லவிடாமல் தலைவியும் தோழியும் தடுப்பது செலவு அழுங்குவித்தல் ஆகும்.

கலித்தொகையில் செலவு அழுங்குத்தல் வகையில் பல பாடல்கள் அமைந்துள்ளன.

வளமையோ வைகலும் செயலாகும் மற்றிவள்

முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த

இளமையும் தருவதோ இறந்த பின்னே.[35]

என்று தோழி தலைவனுக்குக் கூறுகின்றாள். பொருள் எப்பொழுது வேண்டுமானாலும் ஈட்டக் கூடிய தன்மை உடையது. ஆனால் இவளது இளமை

போனால் வாராது என்று கூறித் தோழி செலவு அழங்குவிக்கிறாள். மற்றொரு பாடல்,

அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லார்
இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ[36]

தோழி தலைவியின் அருமையைக் கூறி செலவு அழுங்குவிப்பதாக அமைந்துள்ளது. பொருள் வேட்கை கொண்டு பொருளீட்டச் சென்றால் அப்பொருள் ஓரிடத்தே கிடைக்காது என்பதையும் இளமையையும் காமத்தையும் ஒருங்கே பெற்றவர்கள் செல்வத்தை விரும்புவதால் கிடைக்கும் நன்மை அச்செல்வத்திற்கு இல்லை என்பதையும் இருப்பதைக் கொண்டு இல்வாழ்க்கை நடத்துவதே சிறந்தது என்பதையும் இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

**கைக்கிளை**

தொல்காப்பியர் கைக்கிளைக்கு,

காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்

சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்

புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே[37]

என்னும் இலக்கணத்தை வரையறுத்துள்ளார். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர்,

"காமம் அமையாத இளையாள்மாட்டு, ஏமம் அமையாத இடும்பை எய்தி, புகழ்தலும் பழித்தலுமாகிய இரு திறத்தால், தனக்கும் அவட்கும் ஒத்தன புணர்த்து, சொல் எதிர் பெறானாய்த் தானே சொல்லி இன்புறுதல் பொருந்தித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு"[38]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் கைக்கிளைப் பற்றி நான்கு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அந்நான்கும் கலித்தொகையில்தான் காணப்படுகின்றன. அவற்றுள் மூன்று பாடல்களைக் கபிலரும் ஒரு பாடலை நல்லுருத்திரனாரும் பாடியுள்ளனர்.

கைக்கிளை குறித்து விரிவாக ஆராய்ந்த அறிஞர் வ.சுப. மாணிக்கம்,

அகத்திணைக் கைக்கிளை என்பது காமப்பருவத்தை இன்னும் எய்தாத (அணிமையில் எய்தக் கூடிய) பெதும்பைப் பெண்ணைத் தோற்றத்தால் குமரி என மயங்கிப் பருவம் வந்த இளைஞன் அறியாதே தன்னுட் புலப்படுத்திய காதல் முகிழ்ப்பை மட்டும் கூறியமைவது. இவ்வளவில் இத்திணையின் காமப்பொருள் முடிவடையும்.[39]

எனும் விளக்கத்தை வழங்கியுள்ளார். இவ்விளக்கம் பொருந்துவதாகவே உள்ளது. கைக்கிளை, பெருந்திணை குறித்து ராஜ்கௌதமன்,

கூத்துமரபின் கூறுகள் இடம் பெறும் கலித்தொகையின் பாடல்கள் பெரிதும் கைக்கிளை, பெருந்திணை என்று முத்திரையிடப்பட்டுள்ளன. மதுரைப்புலவர் மரபில் கைக்கிளையும் பெருந்திணையும் மதிப்பிறக்கம் செய்யப்படவில்லை என்பது முக்கியமனதாகும். கூத்துமரபின் பண்புகள் அதிகமாக இடம்பெறும் பாடல்களை உரையாசிரியர்கள் தொல்காப்பிய விதிகளைக்கொண்டு அவை உயர்குடியைச் சேர்ந்த ஆண்- பெண் பற்றியதன்றி, அன்னாருக்கு ஏவல்வேலை செய்கிறவர்கள்,கால்நடை

வளர்ப்புச் சமுகத்தைச் சேர்ந்த ஆயர்-ஆயத்தி, அரண்மனைச் சேவகர்கள், உடல் ஊனமுற்றவர்கள்(கூனி-குறளன்), ஆகியோருக்கிடையில் எழுகிற 'சரசசல்லாபம்' பற்றியவையாக வரையறுத்துள்ளார்கள். குறிஞ்சிக்கலியில் உள்ள குன்றக் குறமகளிர் பாடியாடும் குறவைக் கூத்தும் வள்ளைப் பாட்டும் இனக்குழு சமூகங்களில் தோன்றி நாட்டுப்புறக் கூத்து வடிவில் வாய்வழியாக வந்தவை. அவற்றில் காமியம் மிகையாக வெளிப்படுவதால் அவற்றைக் கைக்கிளை,பெருந்திணைகளில் அடக்கவில்லை என்பதை ஒப்பிட்டறியலாம்.[40]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது கருத்தின்படி கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள், அவற்றில் கூறப்பட்ட கருத்துகள் உயர்குடியைச் சார்ந்தவரைக் குறிப்பன அல்ல; கீழ்மக்களுக்குரியது என்று கூறி அவர்களுக்கு உரையாசிரியர்கள் பாதுகாப்பு தருகின்றனர். ஆனால் உரையாசிரியர்கள் குரவைக் கூத்து, வள்ளைப்பாட்டு ஆகிய பாடல்களில் காமக் கருத்துகள் மிகுதியாக இடம்பெற்றாலும் அவற்றை கைக்கிளை, பெருந்திணைக்குள் அடக்கவில்லை என்பதையும் இவர் சுட்டிக் காட்டுகின்றார்.

ஆடவன் ஒருவன் பெண் ஒருத்தியைக் குமரி எனக் கொண்டு காதல் கொள்கிறான். அவளது நெலிந்த கூந்தலையும் மெல்லிய தோளையும் மலர் போன்ற குளிர்ந்த கண்களையும் மான்போன்ற மருண்ட பார்வையினையும் தளிர்போன்ற மேனியினையும் ஒளிவிடும் நெற்றியினையும் முகை போன்று கூரிய பல் ஒழுங்கினையும் கொடி போன்ற துவளும் இடையினையும் கண்டு பாராட்டி வியக்கிறான். இதனை,

வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமெந்தோள்

பேரெழில் மலருண்கண் பிணையெழில் மானோக்கின்

காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதல்

கூரெயிற்று முகைவெண்பல் கொடிபுரை நுசுப்பினாய்[41]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. மற்றொரு பாடலில் ஆடவன் ஒருவன் பெண் ஒருத்தியின் மேனி அழகைக் கண்டு,

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப்

பெயல்துளி முகிலெனப் பெருத்த நின் இளமுலை

மயிர்வார்த்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டார்

உயிர்வாங்கும் என்பதை உணர்தியோ உணராயோ[42]

என்று வருணிக்கின்றான். பிறிதொரு பாடலில்,

வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பால்

மாவென்ற மடநோக்கின் மயிலியல் தளர்பொல்கி

ஆய்சிலம் பரியார்ப்ப அவிரொளி இழையேய்ப்பக்

கொடியென மின்னென அணங்கென யாதொன்றும்

தெரிகல்லா இடை[43]

என அவளது உடலுறுப்புகளைப் புகழ்ந்து பேசுகின்றான். அன்னமும் மயிலும் புறாவும் போன்ற உன் எழில் நலத்தைக் கண்டவர் காம மயக்கம் கொள்ளமாட்டாரோ என அவன் வினவுகிறான். தன் காமத் துயரை அறிவுறுத்தும் அவனது பாராட்டை அவள் செவிமடுக்கவில்லை. துயரை உணரவில்லை. தன்னால் ஒருவன் அவதியுறுகின்றான் என்றும் அவள் அறியவில்லை. ஏனென்றால் அவள் முன் நின்று அவள் கேட்கும்படியாகவும் உணரும்படியாகவும் ஏதும் செய்யவில்லை. அவன் தன் வாயளவில் உள்ளத்தளவில் மட்டும் கூறிக் கொள்கிறான் என்பதை மேலது பாடல்கள் காட்டுகின்றன.

தோற்றத்தைக் கண்டு அவள் குமரி என எண்ணி காதல் கொள்ள நினைத்தவன் குற்றமுடையவன் அல்லன். மாசுடைய மனத்தை உடையவனும் அல்லன். அவள் குமரியல்ல என்பதை அறிந்துகொண்டவன் தன் செயலைத் தானே நகைத்துக் கொள்கிறான். அவளும் குற்றமிலள், தானும் குற்றமிலன் என்று உணருகிறான். இதனை,

நீயும் தவறிலை நின்னைப் புறங்கடைப்

போதர விட்ட நுமரும் தவறிலர்

*நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்*

*பறையறைந் தல்லது செல்லற்க என்னா*

*இறையே தவறுடை யான்*[44]

*என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. புறத்தே வந்த உன்மேலும் தவறில்லை; உன் பெற்றோர் மேலும் பிழையில்லை. போர் யானை குளத்திற்கு நீர் குடிக்க வந்தால் மதயானை வருகின்றது எனப் பறையறிந்து முன்னறிவிப்பது அரச வழக்கம். அதுபோல நீ புறத்தே வரும்போதும் அரசன் தெரிவிக்க வேண்டும். செய்யாமையால் அவனே பிழையுடையவன் எனத் தலைவன் பேசுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலது பாடல்கள் தலைவியின் அழகை, இளமையை வருணிப்பதாக அமைந்துள்ளன. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,*

> *"ஏறத்தாழ கலித்தொகைப் பாடல்களில் பேரளவில் கைக்கிளை-களவுக் காமம் சார்ந்த பொருள் இடம்பிடித்துள்ளது. இவ்விதத்தில் பழைய அகவல் அகமரபிலிருந்து மாறுகிறது எனலாம். தெருவில் ஒருப் பெண்ணை மறித்து அவள் முகத்திற்கு முன் அவளது கண்களும், முலைகளும், இடையும் தனக்கு துன்பம் செய்வதாக உவமைகளோடு வருணிப்பது எதார்த்தமான நடைமுறையல்ல. இது ஒரு சம்பிரதாயத்திற்கு உட்பட்ட புனைவு. இந்தப் புனைவு தொல்காப்பிய இலக்கண வரம்பைத் தாண்டிய கூத்து சம்பிரதாயத்தின் தாக்கம் கொண்டதாகத் தெரிகிறது"*[45]

*என்று கருத்துரைத்துள்ளார். இவரது கருத்து பொருந்துவதாகவே தோன்றுகின்றது. ஏனெனில் ஒரு பெண்ணை நேருக்கு நேராக இவ்வாறு வருணிப்பது என்பது கடினமான ஒன்றுதான். அதுமட்டுமல்ல தொல்காப்பிய அக இலக்கிய மரபிற்கு முரணாகவும் இது அமைந்திருக்கிறது என்பதையும் உணர முடிகிறது.*

**பெருந்திணை**

*தொல்காப்பியர் பெருந்திணைக்குரிய இலக்கணத்தை,*

*ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்*

*தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்*

*மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்*

*செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.*[46]

*என்று வரையறுத்துள்ளார். இவ்வடிகளுக்கு உரையாசிரியர்கள், பெருந்திணை என்பது பொருந்தாக் காமம், ஒருவன் ஒருத்தியிடம் கழிகாமம் கொள்ளுதல், காதலியைப் பெறாத நிலையில் தலைவன் மடலேறுதல், ஒப்பும் மூப்பும் உடைய பருவத்தாளைக் கூடி நுகர்தல், தலைவியின் இளமைக்கு ஒவ்வாது ஆடவன் மிக முதிர்ந்திருத்தல், இளமைக் காலத்து இன்பம் துய்க்காது கணவன் நெடுங்காலம் பிரிந்திருத்தல், எவ்வகையிலும் தேறுதல் அடையாமல் மனைவி காமம் முற்றுதல், காமம் கொண்ட மனைவியின் துணிவுச் செயல், கரைகடந்த காமத்தால் விரும்பாதவரை வலிதிற் புணர்தல் என்னும் பொருளை வழங்கி வருகின்றனர்.*

*பெருந்திணையின் இழிவு குறித்து இளவழகனார்,*

*முதலில் மடலேறுவன் என்று தலைவன் சொல்லிப் பார்ப்பான். அதற்குத் தலைவியைச் சார்ந்தோர் இசையாவிட்டால், தலைவன் மடலேற வேண்டிய கட்டாயத்துக்கு வரநேரும். அப்போது தலைவியின் அன்பைவிடத் தலைவன் அன்புமிக்க உச்ச நிலையை எய்தும். மடலேறும் நிகழ்ச்சி வெறும் பேச்சு முறையில் இல்லாமல் இங்ஙனம் செயல் முறையில் வரும்போது தலைவன் அன்புக்கும் தலைவியின் அன்புக்கும் ஏற்றத்தாழ்வு காணப்படும். இனித் தலைவன் இளமை நீங்கிய முதியோனாயிருந்து தலைவி இளையவளாயிருந்தாலும், தலைவி மூத்தோளாயிருந்து தலைவன் இளையனாயிருந்தாலும், அல்லது இருவரும் இளமை நீங்கிய முதுமைப் பருவத்தர்களாயிருந்தாலும், அவர்கள் ஒருவர்க்கொருவர் ஏற்றத்தாழ்வான அன்புள்ளவர்களாகவே*

இருப்பர். தலைவன் தலைவியர் இருவர் ஒருவர் தெளிவிழந்து போன மிகு காம நிலையில் உள்ளவராயிருந்தாலும் அவர்கள் அன்பு ஏற்றத்தாழ்வாகவே இருக்கும். இனி, மிக்க காம நிலையில் ஒருவரையொருவர் வற்புறுத்தி நிற்கும்போதும் அவர்கள் அன்பு ஏற்றத்தாழ்வாயிருக்கும் என்பது சொல்லாமலே பெறப்படும்"[47]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது இக்கருத்து பெருந்திணையின் தன்மையினை விளக்குவதாகவும் அதன் தன்மையைச் சுட்டுவதாகவும் அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் பத்து பெருந்திணைப் பாடல்கள் உள்ளன. அப்பத்தும் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகின்றன. அந்தப் பாடல்களின் ஆசிரியர் நல்லந்துவனாரே. அவற்றில் நான்கு பாடல்கள் ஆண்பாற் பெருந்திணையும், ஆறு பாடல்கள் பெண்பாற் பெருந்திணையும் ஆகும்.

கைக்கிளை, பெருந்திணை குறித்து விரிவாக ஆராய்ந்த வ.சுப. மாணிக்கம் அதன் தன்மை குறித்து,

> கைக்கிளைப் பெருந்திணைப் பாடலெல்லாம் கலிப்பாவில் அமைந்திருப்பது ஏன்? சங்ககாலத்து ஆசிரியப்பாவிற்குப் பெருவழக்கும் நன்மதிப்பும் இருந்தது, இத்திணைகள் இப்பாவில் ஏன் பாடுபெறவில்லை? ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்ற நான்கும் ஆசிரியப்பாவில் இயன்ற அத்தொகைகள். ஆயிரத்துக்கு மேலான பாடல்கள் உடைய இத்தொகைகள் முற்றும் ஐந்திணைத் துறைகளே கொண்டவை என்றும் கைக்கிளை, பெருந்திணைக் குறிப்புகள் மருந்துக்குக் கூட இல்லை என்றும் எளிதாக முடிவுசொல்ல என் அறிவு துணியவில்லை. துறையாராய்ச்சியைத் தனிப்பொருளாகக் கொண்டு சங்கத் தொகைகள் ஆராய்வோமேல், சில அகவற்பாக்கள் கைக்கிளை, பெருந்திணைகளாகவும் காணப்படும் என்பது என் கருத்து.[48]

என்று கருத்துரைத்துள்ளார். ஆய்வாளர்கள் பலரும் கைக்கிளைப் பெருந்திணைப் பாடல்கள் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகின்றன என்னும் கருத்தினைக் கொண்டிருந்தனர். ஆனால் வ.சுப. மாணிக்கம் மற்ற

அகநூல்களிலும் இத்துறைப் பாக்கள் இடம்பெற்றுள்ளன என்று கூறுவது புதுவதாக உள்ளது. இது குறித்து மேலும் ஆராய்ந்து தெளிவு காணவேண்டியதாக உள்ளது.

**மடலேறுதல்**

ஆடவன் ஒருவன் ஒரு பெண்ணை விரும்புகிறான். எவ்வளவோ முயன்றும் அப்பெண்ணை அவனால் கைப்பிடிக்க முடியவில்லை. பெண்ணின் பெற்றோர் அவர்களது திருமணத்திற்கு ஒப்புக்கொள்ளவில்லை. அச்சூழலில் அந்த ஆடவன் மடலேறி தன் காதலை ஊராருக்கு அறிவிக்க நினைப்பான். அவ்வாறு நினைக்கும் ஆடவன் பனை மரத்தின் பட்டையைக் கொண்டு குதிரை போன்ற ஒரு உருவத்தைச் செய்வான். அதன்மேல் அந்த ஆடவன் ஏறி அமர்ந்திருப்பான். அந்தக் குதிரையைச் சிலர் இழுத்துச் செல்வர். பனைமரக் கிளையால் செய்த குதிரையின்மேல் மயில்தோகை, பூளைப்பூ, ஆவிரம்பூ முதலிய பூக்களால் தொடுத்த மாலையை அணிவித்திருப்பர். உடல் முழுக்கத் திருநீறு பூசியிருப்பான். பனை கருக்கால் ஆன குதிரையினை இழுக்கும் போது அது உரசி அவன் உடம்பில் குருதி வழியும். இதனைக் கண்ட ஊரார் அவனை அவளோடு சேர்த்து வைக்க முயல்வர் என்பது மடலைக் குறிக்கும்.

சங்ககால காதலை விரிவாக ஆராய்ந்த வ.சுப. மாணிக்கம், கலித்தொகையில் அமைந்துள்ள மடலேறுதல் குறித்து,

> ‘‘மடலேற்றம் பற்றிய நான்கு கலிகளையும் நன்கு ஆராயின், காதலுக்கே நிற்பவர் தலைவியின் பெற்றோர்கள் என்பதும், அவர்களை வணங்குவதற்கே தலைவன் களவில் தன் உள்ளம் கவர்ந்தானை ஊரறிய வெளிப்படுத்துவான் என்பதும் தெளியலாம். மடலேற்றம் கண்ட ஊர்மக்கள், மகள் இசையும்போது பெற்றோர் குறுக்கிடல் பொருந்தாது. இவன் காதலை இனியும் சோதித்தல் ஆகாது என்று கருத்துரைப்பர். இவன் காதலிப்பவள் தானும் இவனைக் காதலிப்பவளே. இஃது அன்புடைக் காமம் என்று சான்றோர் நெறி பகர்வர்.[49]

என்று கருத்துரைத்துள்ளார். இவரின் கருத்தின்படி அவர்களது காதலுக்கு இடையூறாக தலைவன் மடலேறுவதற்குக் காரணமாக இருப்பது தலைவியின் பெற்றோரே என்பது புலப்படுகின்றது.

கல்வி அறிவுடைய ஆடவன் ஒருவன் அழகு வாய்ந்த நங்கை ஒருத்தியைக் காண்கிறான். இருவர் உள்ளமும் காதலால் கலக்கின்றன. அந்த இளைஞன் மீண்டும் அவளைக் காணாது காமத்தால் வாடுகின்றான். அவன்,

மின்னவிர் நுடக்கமும் கனவும்போல் மெய்காட்டி

என்னெஞ்சம் என்னொடு நில்லாமை நனிவெளவித்

தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொலோ.[50]

என்று கூறி வருந்துகிறான். மேலும்,

துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி

ஒளியோடு உருவென்னைக் காட்டி அளியள் என்

நெஞ்சாறு கொண்டாள் அதற்கொண்டும் துஞ்சேன். [51]

எனக் கூறும் அவன் ஒருநாள் கண்டு அவளோடு கலந்த நான் அவளை மீண்டும் எப்பொழுது பார்ப்பேன் என்று புலம்புகிறான்.

மகளும் சான்றோரும் ஊராரும் அவர்களது காதலை ஏற்றுக்கொள்ளும் பொழுது தலைவனும் விடாக் காதலனாக இருக்கிறான். பெண்ணின் பெற்றோர் என்ன செய்யமுடியும்? தாம் விரும்பாவிடினும் அவளை அவனுக்கு மணம் செய்து வைப்பதே முறை எனக் கூறி அதற்கு உடம்படுவர். இதனைக் கலித்தொகை,

வருந்தமா ஊர்ந்து மறுகின்கட் பாடத்

திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே

பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை

போலக் கொடுத்தார் தமர். [52]

என்று குறிப்பிடுகின்றது. இப்பாடல் பெருந்திணைத் தன்மையினைக் குற்றமறக் கற்பிக்கும் பாடலாகத் திகழ்கிறது. கண்டவர்க்கு இரக்கம் தோன்றும்படி தலைவன் மடலூர்கிறான். தெருவிலே தன் காதலைப் பாடினான். பெண்ணுக்குப் பொருத்தமான சொற்களைச் சொன்னான். அதனைக் கேட்ட

அவள் சுற்றத்தார் பாண்டியனுக்கு அஞ்சிப் பகைவர்கள் திறை கொடுப்பதுபோல் மடலேறியவனுக்கு அவனை மணஞ்செய்து கொடுத்தனர் என்னும் கருத்தை மேலது பாடல் எடுத்துரைக்கின்றது.

**இளமை தீர்தல்**

தொல்காப்பியர் கூறிய பெருந்திணைக்குரிய இலக்கணத்தில் இரண்டாவதாக அமைவது இளமை தீர்திறமாகும். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் பல பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவன் பொருளீட்டச் செல்லக் கருதுகிறான். தோழியிடம் கூறிவிட்டுச் செல்ல நினைக்கிறான். பொருளீட்டச் செல்லக் கருதிய அவன் இளமை நிலையாமை என்பதை உணரவில்லை. இளமை சிறந்ததாயினும் அதனைத் துய்ப்பதற்குச் செல்வம் வேண்டும் என்பதை உணர்கிறான்.

ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை
ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதரோ
சென்ற இளமை தரற்கு.[53]

என்னும் பாடலடிகள் உடுப்பதற்கு ஆடை இரண்டு இல்லை; ஒன்றுதான் உள்ளது. அப்படிப்பட்ட வறுமையிலும் கணவனும் மனைவியும் சேர்ந்து வாழ்வதே இல்வாழ்க்கை. எவ்வளவு செல்வம் கிடைத்தாலும் சென்ற இளமை திரும்பி வருமா? என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**காம மிகுதி**

தொல்காப்பியர் கூறிய பெருந்திணைக்குரிய இலக்கணத்தில் மூன்றாவது அமைவது தேறுதல் மிக்க காமத்து மிகுதிறம் என்பதாகும். இதனை விளக்கும் பாடலும் கலித்தொகையில் அமைந்துள்ளது.

ஒரு ஆடவனுக்கும் கன்னிக்கும் மணம் நிகழ்ந்தது. திருமணம் முடித்த சில நாட்களிலேயே அவன் அவளை விட்டுப் பிரிய நினைக்கிறான். இன்பம் முற்றும் நிறைவு பெறாத தலைவியின் காமத்தை,

புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை

அருகுவித்து ஒருவரை அகற்றலின் தெரிவார்கண்

பயனின்று மன்றம்ம காமம்[54]

எனக் கலித்தொகை பாடலடிகள் சுட்டுகின்றன. குற்றமில்லாத இந்தத் தலைவி திருமணத்திற்கு முன்பு பல் வெளியே தெரியும் அளவுக்குக்கூட சிரிக்க மாட்டாள். அப்படிப்பட்டவள் இன்று பல் வெளியே தெரியும்படிக் காட்டிச் சிரிக்கின்றாள். அதோடு நில்லாமல் உடனே அழவும் செய்கிறாள்.

ஒண்ணுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்

முண்ணுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்

கண்ணினும் முகத்தினும் நகுபவள்; பெண்ணின்றி

யாவரும் தன்குரல் கேட்ப நிரைவெண்பல்

மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே

பூவுயிர்த் தன்ன புகழ்சால் எழிலுண்கண்

ஆயிதழ் மல்க அழூம்.[55]

என்னும் பாடலடிகள் மேற்கண்ட தலைவியின் நிலையை வெளிப்படுத்துகின்றன.

பிரிந்து சென்ற தலைவன் வீடு வந்து சேர்கின்றான். காதலியின் அழுகையையும் பெருமூச்சையும் இரவுபகல் உறக்கமின்மையையும் கண்ட காதலன் அவளை ஆரத் தழுவுகிறான். அவனோடு கலந்த பின்னர் அறிவுநலம் பெறுகிறாள். அவளது பசலை நீங்கியது. அறிவு இல்லாதவர்கள் கூறிய பழிச்சொல் எல்லாம் நீங்கின.

பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு

மாயவன் மார்பில் திருப்போல் பவள்சேர

ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்ததென்

ஆயிழை யுற்ற துயர்.[56]

தலைவனைச் சேர்ந்த தலைவியின் துயர் நீங்கிய விதத்தை இப்பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன. மேலும்,

காதலன் மன்ற அவனை வரக்கண் டாங்கு

ஆழ்துயர மெல்லாம் மறந்தனள் பேதை

நகையொழிந்து நாணுமெய் நிற்ப இறைஞ்சித்

தகையாகத் தையலாள் சேர்ந்தாள் நகையாக

நல்லெழில் மார்பன் அகத்து[57]

பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வந்தபோது தலைவி அவனைத் தழுவிய நிலையை இப்பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

தொல்காப்பியர் பெருந்திணைக்குக் கூறிய இலக்கணத்தில் நான்காவதாக அமைவது மிக்க காமத்து மிடல் என்பதாகும். இத்துறையிலும் கலித்தொகைப் பாடல்கள் சில இடம்பெற்றுள்ளன. தலைவனும் தலைவியும் உரையாடும் வகையில் அமைந்த,

சுடர்தொடீ, போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்

வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினிதென்

றுண்பவோ நீருண் பவர்

செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொல்லோ

ஐவாய் அரவின் இடைப்பட்டு நைவாரா

மையில் மதியின் விளங்கு முகத்தாரை

வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று[58]

என்னும் பாடலைக் கபிலர் பாடியுள்ளார். இப்பாடல் ஊடல் நடையில் அமைந்துள்ளது. தலைவன் தலைவியை இழுத்து தன் மார்போடு அணைத்துக் கொள்கிறான். அதற்கு அவள், நான் விரும்பாதபோது என்னைக் கைப்பற்றி அணைக்கலாமா? எனக் கேட்கிறாள். அதற்குத் தலைவன், எனக்கு விருப்பமாக இருந்தது உன்னைத் தழுவினேன் என்கிறான். அதற்குத் தலைவி, தனக்கு இனிது என்று பிறர்க்குத் துன்பம் செய்யலாமா? என்கிறாள். அதற்குத் தலைவன், தனக்கு இனிது என்று தண்ணீர் குடிப்பார்களே ஒழிய, தண்ணீரைக் கேட்டுக் குடிப்பவர்கள் உண்டோ என வினவுகிறான். மேலும் கூறுகிறான். காமத் துயர்படுகின்றேன். யாது செய்வதென்று அறியேன். திங்கள் போலும் ஒளியுடைய முகப் பெண்களைக் கைப்பற்றிக் கொள்ளுதல் அறம் என்று சொல்லப்படும் என்கிறான். அதற்குத் தலைவி, தன்னுள் இவன் நம் சொல்லைக் கேளாது வருந்துகிறான். முற்பிறப்பில் இருவரும் ஒன்றாகவும் வாழ்ந்திருக்கின்றோம். இனி இவன் எண்ணத்திற்கு இணங்க வேண்டும் என எண்ணுகிறாள். இவ்வாறு உரையாடலாக இந்தப் பாடல் அமைந்துள்ளது.

**வள்ளைப் பாட்டு**

பெண்கள் உலக்கை கொண்டு உரலில் நெல்லை இடிக்கும்பொழுது பாடக்கூடிய பாட்டு வள்ளைப்பாட்டு ஆகும். கலித்தொகையில் வள்ளைப்பாட்டு குறித்த செய்திகள் பல இடம்பெற்றுள்ளன.

முற்றிய திணைக் கதிர்களை சந்தனமரத்தால் ஆன உரலில் இட்டு முத்து நிறைந்த யானைத் தந்தத்தால் குற்றியதனை விளக்கும் வகையில்,

முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்

வகைசால் உலக்கை வடான்வயின் ஓச்சி[59]

என்னும் பாடல் அமைந்துள்ளது. மூங்கில் நெல்லினைப் பாறை உரலில் இட்டுக் குத்தியதனை,

பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்

கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைசுளகா

ஆடுகழை நெல்லை அரையுரலும் பெய்திடுவாம்

பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று[60]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

நன்றா கின்றால் தோழிநம் வள்ளையுள்

ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி

மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்

மன்றல் வேங்கைக் கீழிருந்து

மணநயத் தனன் அம் மலைகிழ வோற்கே[61]

என்னும் பாடலடிகள் தலைவியும் தோழியும் வள்ளைப்பாட்டு பாடியதைக் கண்ட தலைவன் இனி களவொழுக்கத்தில் ஈடுபடமுடியாது என எண்ணி மணம் பேச வந்ததையும் அவனது களவொழுக்கத்தை அறியா தந்தை மணமுடித்து வைக்க ஒப்புகொண்டதையும் இப்பாடல் வெளிப்படுத்துகின்றது. இந்த நிகழ்வு தோழிக்குப் பெரு மகிழ்ச்சியைத் தந்தது.

**முல்லை சூடுதல்**

சங்ககாலத்தில் கன்னிப்பெண்கள் கூந்தலில் மலர் அணியமாட்டார்கள். அது அக்காலச் சமுதாய வழக்காக இருந்திருக்கிறது. இது குறித்து வ.சுப. மாணிக்கம்,

> பண்டைத் தமிழ்க் கன்னி மலர்சூடாள் என்பதும், மலர் சூடின் கன்னியாகாள், ஒருவனை வரித்தாள் என்பதும் நம் பழஞ் சமுதாய வழக்கு. இக்கருத்து கற்றார்க்கு இன்று வியப்பாகவும் புரட்சியாகவும் தோன்றும், தோன்றக் கூடும். இவ்வழக்கம் இந்நாள் தமிழகத்து இல்லாமையும் இருக்க இயலாமையும் கண்டு பலர் மலைக்கவும் மலைப்பர்.[62]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது இக்கருத்து சங்ககால மகளிரின் இயல்பினை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

முல்லை நிலத் தலைமகள் ஒருத்தி தன் கூந்தலுக்குள் முல்லைச் சரத்தை வெளியே தெரியாதபடி மறைத்து வைத்திருந்தாள். அவள் நினைவின்றிக் கூந்தலில் வெண்ணையைத் தடவ கூந்தலுக்குள் இருந்த முல்லைப்பூ அன்னைமுன் வீழ்ந்தது. இதனைக் கண்ட அன்னை நாணினாள். ஆனால் கோபப்படவில்லை. நெருப்பைத் தொட்டவர் போலக் கையை உதறிவிட்டு அவ்விடத்தை விட்டு நீங்கிவிட்டாள். தலைவி, யாருக்குத் தெரியாமல் இருக்கவேண்டும் என்று நினைத்தேளோ அவருக்கே தெரிந்துவிட்டதே என வருந்தினாள். இக்கருத்தை விளக்கும் வகையில்,

புல்லின தாய மகன்சூடி வந்ததோர்

முல்லை யொருகாழும் கண்ணியும் மெல்லியால்

கூந்தலுட் பெய்து முடித்தேன்மன் தோழி யாய்

வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே

அன்னையும் அத்தனும் இல்லரா யாய்நாண

அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ[63]

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. மற்றொரு பாடலில் முல்லை நிலத் தலைவியின் காதலை முல்லைப் பூ வெளிப்படுத்துவதாக உள்ளது.

பெய்போ தறியாத்தன் கூழையுள் ஏதிலான்

கைபுனை கண்ணி முடித்தாளென்று யாய்கேட்பின்

செய்வதி லாகுமோ மற்று[64]

என்னும் கலித்தொகை அடிகள் குமரிப்பெண் ஒருத்தியின் கவலையை வெளிப்படுத்துகின்றது. முல்லைத்திணையில் ஏறுகோல் விழா நடக்கிறது. அதில் இடையன் ஒருவன் காளை ஒன்றை மடக்குகிறான். அந்தக் காளை அவன் கழுத்திலிருந்த மாலையைத் தன் கொம்பினால் எடுத்து சுழற்றுகிறது. அது கூட்டத்தில் இருந்த கன்னிப்பெண் ஒருத்தியின் கூந்தலில் போய் விழுகிறது. அதைக் கண்ட ஆய்மகள் அந்தப் பூவைக் கீழே விழவிடாமல் தன் கூந்தலில் அணிகிறாள். இதனை அக்கூட்டத்தில் இருந்த சில பெண்களும் பார்க்கின்றனர்.

இதைப் பார்த்த ஊர்ப்பெண்கள் தம் வீட்டிற்குச் செல்லாமல் அன்னையிடம் சென்று கூறியிருந்தால் என்ன செய்வேன் என அந்த ஆய்மகள் வருந்துவதாக இந்தப் பாடல் அமைந்துள்ளது. இச்செய்தி கேட்ட அவளது பெற்றோர் துடிக்கவில்லை. அப்பூவுக்குரியவன் யார் என்றும் சினக்கவில்லை. ஊர் எதுவோ என்றும் கவலைப்படவில்லை. இது திருமாலின் அறிவிப்பு என்று தெரிந்து மனமகிழ்ந்து அப்பூவிற்குரியவனைத் தம் மகளின் மணமகனாக்கிக் கொண்டனர். இதனை,

மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறவன்

கண்ணிதந் திட்ட தெனக் கேட்டுத் திண்ணிதாத்

தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்

பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையொடு

ஐயன்மார் எல்லாம் ஒருங்கு[65]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

**ஏறு தழுவுதல்**

முல்லைக் கலிப் பாடல்கள் பல தெய்வ வணக்கமாகவும் வாழ்த்தாகவும் அமைந்துள்ளன. முல்லை நில இடையரை ஆட்டிடையர், பசுவிடையர், கோவிடையர் என மூன்று வகையாகப் பாகுபடுத்துவர். எனினும் அப்பிரிவு அவர்களின் மண உறவுக்குத் தடையாக இல்லை என்பதையும் கலித்தொகை பதிவுசெய்கின்றது. இதனை,

எல்லா இஃதொன்று கூறு குறும்பிவர்

புல்லினத் தார்க்கும் குடஞ்சுட் டவர்க்குமெங்

கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்

பல்லேறு பெய்தார் தொழூஉ[66]

என்னும் பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன.

முல்லை நில வழக்கங்களுள் ஏறு தழுவுதலும் ஒன்றாகும். முல்லை நிலத் தலைவன் ஒருவன் முல்லை நிலக் குமரியை மணக்க வேண்டுமானால் அவள் பெற்றோர் விடுக்கும் ஏற்றினைத் தழுவி அடக்குதல் வேண்டும். அவ்வாறு அடக்குவது ஏறு தழுவுதல் ஆகும்.

ஓஒஇவள் பெருபுகல் நல்லேறு கொள்பவர் அல்லால்

திருமா மெய் தீண்டலர்[67]

என்னும் அடிகளுக்கு, போர் செய்யும் விருப்பம் உடைய நல்ல காளைகளை அடக்குபவரே அல்லாமல் வேறு யாரும் இவளது மெய்யைத் தீண்டத்தக்கவர் அல்லர் என்பது பொருளாகும். ஆயர் குலப் பெண் ஏறு தழுவும் ஆடவனையே விரும்பி மணப்பர் என்பதை இது உணர்த்துகின்றது.

வீரமற்றவனை ஆயர்குலப் பெண்கள் விரும்பமாட்டார்கள். காளையின் கொம்புக்கு அஞ்சுபவனை அடுத்த பிறவியில்கூட கணவனாக ஏற்கமாட்டார்கள் முல்லை நில ஆய்மகள் என்பதை,

கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்

புல்லாலே ஆய மகள்[68]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. ஆயர்கள் காளையைத் தழுவும் முறை குறித்தும் கலித்தொகை பதிவுசெய்துள்ளது.

மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயும்

எருத்திடை யடங்கியும் இமிலிறப் புல்லியுந்

தோளிடைப் புகுதந்துந் துதைந்துபா டேற்றும்

நிரைபுமேற் சென்றாரை நீண்மருப் புறச் சாடிக்

கொளவிடங் கொளவிடா நிறுத்தன ஏறு

கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்

செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி

உயிருண்ணுங் கூற்றமும் போன்ம்[69]

என்னும் அடிகள் ஏறுதழுவும் காட்சியைக் காணும் தலைவியும் தோழியும் பேசிக் கொள்வதாக அமைந்துள்ளன. ஆயர்கள் காளையைத் தெருவில் விடுகின்றபோது வாத்தியங்கள் முழங்குகின்றன. மகளிர் வரிசையாக நிற்கின்றனர். தெருவில் ஆய்மகன் பாயும்போது தூசி கிளம்புகின்றது. ஆடவர் காளைகளின் கொம்புகளைப் பிடித்தனர். தன்மார்பில் பொருந்தும்படித் தழுவினர். அவற்றின் கழுத்தில் அடங்கினர். கொண்டை முறியும்படி தழுவினர். தோளுக்கு நடுவே காளையின் கழுத்தினைப் புகும்படி விட்டனர். காளைகள் ஆயர்களைக் கீழே வீழ்த்தின. நீண்ட கொம்புகளால் சாகும்படி குத்தின. கோபமுற்ற காளைகள் எமனைப் போல் விளங்கின என்பதை மேலது பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறு ஏறுதழுவிய ஆயர்களுக்குத் திருமணம் நடக்கும்பொழுது வீட்டில் செம்மண் பூசுவர், இளமணலை வீட்டின் முன்பக்கம் பரப்புவர், பெண் எருமைக் கொம்பை வீட்டில் வைத்து அதைத் தெய்வமாக வழிபடுவர் என்னும் பழக்க வழக்கமும் இருந்ததைக் கலித்தொகை,

> தருமணல் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி
>
> எருமைப் பெடையொடு எமர் ஈங்கு அயரும்
>
> பெருமணம்[70]

என்று பதிவுசெய்கின்றது. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

> இங்கே ஆயர்குடிச் சமூகத்தைச் சேர்ந்த பெண் பதிவிரதா தருமத்தைப் போலத் தனது களவுப்புணர்ச்சியைக் கவுரவமாக ஏற்றுப் போற்றுவதை அறியலாம். குழுச்சமூகங்களில், புலவர் மரபானது வைதீக கிருகஸ்த தருமங்களைப் பரப்பிவிட்ட கலாச்சாரக் கலப்பினை இதில் உணரலாம். ஆயர்கள் வீட்டைச் செம்மண்ணால் பூசி, பெண் எருமைக் கொம்போடு திருமணச் சடங்கினை நிகழ்த்திய புதிய செய்தி இந்தப் பாடலில் வந்துள்ளது. (நீலகிரி தோடர்கள் வழக்கம் இதனை நினைவூட்டுகின்றது).[71]

என்று கருத்துரைத்துள்ளார். கலித்தொகையில் வைதீகக் கருத்துகள் மிகுதியாக இடம்பெற்றுவிட்டன என்னும் கருத்தினை இவர் முன்வைத்துள்ளார்.

ஆட்டிடையர், பசுவிடையர், கோட்டிடையர் என்னும் மூன்று வகையரில் பசுவிடையரைவிட கோட்டிடையரே வீரத்தில் சிறந்தவராகத் திகழ்ந்துள்ளனர் என்றும் கலித்தொகை கூறுகின்றது. இதனை,

இஃதொத்தன்

கோட்டினத்து ஆயர்மகன் அன்றே மீட்டுஒரான்

போர்புகல் ஏற்றுப் பிணர் எருத்தில் தத்துபு

தார்போல் தழீஇ யவன்[72]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. போரிடும் காளையின் கழுத்தில் பாய்ந்து மாலையாய் அதனைத் தழுவியவன் எருமைக் கூட்டத்தை உடைய ஆயர்மகன் அல்லவா? அவன் காளையில் வலிமையை அடக்காமல் மீளான் என்பது இப்பாடலின் பொருளாகும்.

**பரத்தை ஒழுக்கம்**

தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர் பரத்தையர் என்னும் சொல்லிற்கு “ஆடலிலும் பாடலிலும் வல்லவராகி அழகையும் இளமையையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்கார்” என்னும் பொருளை வழங்கியுள்ளார். மேலும் அவர் பரத்தையரை இற்பரத்தை, காமப்பரத்தை, சேரிப்பரத்தை, மாயப்பரத்தை என வகைப்படுத்துவார். இத்தகைய பரத்தையர்களிடம் தலைவன் செல்வதற்கான காரணம் குறித்து ராஜ்கௌதமன்,

> அகவல் மருதப்பாடல்களில் தலைவியின் கருவுயிர்த்தக் காலம், மகப்பேற்றுக் காலம்,புனிற்றுத்தீட்டுக்காலம், மகவுக்கு முலைப்பால் ஊட்டும் காலம் ஆகிய பாலுறவு தவிர்க்கும் காலங்களில் பரத்தையர் சேரிக்குப் போய் வருவதாக எடுத்துரைப்புகள் உள்ளன.[73]

என்று கருத்துரைத்துள்ளார்.

கலித்தொகை மருதக் கலியில் பரத்தையர் குறித்த பாடல்கள் பல இடம்பெற்றுள்ளன. அந்தப் பாடல்கள், பரத்தையிடம் சென்ற தலைவன் மீண்டு வரும்பொழுது அவன்மேல் தலைவி கொண்ட கோபத்தை

வெளிப்படுத்துவதாகவும், பரத்தை தலைவனின் மகனுக்கு அணிகலன்கள் அணிவித்து விடுவதையும் அதைக் கண்ட தலைவி வருந்தி மகனிடம் கடிந்து கொள்வதையும் பரத்தையரைத் திட்டுவதையும் வெளிப்படுத்துதாக அமைந்துள்ளன.

வீங்குநீர் அவிழ்நிலம் பகர்பவர் வயற்கொண்ட

ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்டு

ஓங்குயர் எழில்யானைக் கனைகடாம் கமழ்நாற்றம்

ஆங்கவை விருந்தாற்றப் பகலல்கிப் கங்குலான்

வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்

தேங்கமழ் கதுப்பினும் அரும்பவிழ் நறுமுல்லை

பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதாம் மரீஇய

பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர[74]

என்னும் பாடலடிகள் தலைவன் தன் வீட்டை அறவே மறந்ததையும் காலை, பகல், இரவெல்லாம் பரத்தையர் சேரியிலேயே புணர்ந்தாடித் திரிவதையும் காட்டுகின்றன. இப்பாடலடிகளுக்கு நச்சினார்க்கினியர்,

> "வீங்குநீர் பரத்தையர் சேரியாகவும், அதன்கணவிழ்ந்த நீலங் காமச் செவ்வி நிகழ்ந்த பரத்தையராகவும், பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக் கொண்டுவரும் பாணர் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானையின் கடாத்தை ஆண்டுறைந்த வண்டுகள் வந்த வண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப் பரத்தையர் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவுங், கங்குலில் வண்டு முலையை ஊதுதல் இற்பரத்தையருடன் இரவு துயிலுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும் பொருள் தந்து ஆண்டுப் புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத் திணைப்பொருட்கு உள்ளுறை யுவமமாயவாறு காண்க"[75]

என்னும் உரையை வழங்கியுள்ளார். பரத்தையரிடம் சென்று வந்த தலைவனை நோக்கித் தலைவி கூறுவதாக அமைந்த,

நோதக்காய் எனநின்னை நொந்தீவார் இல்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்
கனற்றிநீ செய்வது கடிந்தீவார் இல்வழி
மனத்திற்றீ திலனென மயக்கிய வருதிமன்
அலமரல் உண்கண்ணார் ஆய்கோதை குழைத்தநின்
மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம்வந் துரையாக்கால்
………
மண்டுநீர் ஆரா மலிகடல் போதுநின்
தண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி மற் றியாமெனின்
தோலாமோ நின்பொய் மருண்டு[76]

என்னும் பாடலடிகள் நீ பரத்தையை விட்டு நீங்கியதால் அவள் வளையல் கழலும் தன்மையில் இருக்கிறாள். அவளுடைய முலையிடையே கசங்கி அழகிழந்த உண் கண்ணி உனக்குப் பகையாகி எமக்கு இதனை உரைத்தது. அதுமட்டுமல்ல அவளுடைய அழகிய மாலைகள் சந்தனம் பூசிய உன் மார்பில் கலந்தது எமக்கு அறிவித்தது. ஆனால் நீ நான் தீது உடையவன் அல்ல என்று கூறி ஊடல் உணர்த்துவதற்கு வருகிறாய். அதனால் நீ பெற்றது என்ன என்று தலைவி தலைவனைப் பார்த்து கேட்பதாக மேலது பாடல் அமைந்தது.

பரத்தையரிடம் சென்று வந்த தலைவன், தலைவி தன் மகனைத் தழுவி விளையாடுகின்ற பொழுது மகன் வாயிலாக ஊடல் தீர்க்கும் வகையில் பின்வரும் செய்யுள் அமைந்துள்ளது.

பெரும விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்

பெருந்தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத்

திருந்துபு நீகற்ற சொற்கள்யாங் கேட்ப

மருந்தோவா நெஞ்சிற் கமிழ்த மயின்றற்றாப்

பெருந்தகாய் கூறு சில

எல்லிழாய் சேய்நின்று நாங்கொண்ர்ந்த பாணன் சிதைந்தாங்கே

வாயோடி ஏனாதிப் பாடியம் என்றற்றோ

நோய்நாந் தணிக்கும் மருந்தெனப் பாராட்ட

ஓவா தடுத்தடுத்தத் தத்தாவென் பான்மாண

வேய்மென்றோள் வேய்த்திறஞ் சேர்த்தலும் மற்றிவன்

வாயுள்ளிற் போகா னரோ

உள்ளி யுழையே ஒருங்கு படைவிடக்

கள்ளர் படர்தந் ததுபோலத் தாமெம்மை

எள்ளுமார் வந்தாரே ஈங்கு[77]

தலைமக்களின் மகன் அழகிய அணிகலன்களை அணிந்துகொண்டு சிறு தேரோட்டி நடை பயிலுகின்றான். தன் குழந்தையின் அழகில் மயங்கிய தலைவி அவன் மேல் பேரன்பு கொண்டிருக்கிறாள். அவன் தன் மகனை அழைத்து நீ கற்றவற்றில் சிலவற்றைக் கூறு என்கிறாள். அவள் அறியாமல் பரத்தையிற் பிரிந்த தலைவன் அவள் பின்புறம் வந்து மறைந்து நின்றான். மகனுக்கு மட்டும் அவன் வந்தது தெரியும். தலைவிக்கு எதிர்புறத்தே நின்ற மகன் தந்தையைக் கண்டுவிட்டான். 'அத்தத்தா' என்றான். அது கேட்ட தலைவி தோழியை நோக்கி இக்கள்வன் மகனிடம் எனக்கு இன்பமாக ஏதேனும் சொல் என்று கேட்டால் தந்தையின் பெயரையே சொல்லி என்னை வருத்துகிறான் என மகனைக் கடிந்துகொள்கிறாள். தலைவனின் வரவை உணர்ந்த பின் தன் ஊடல் தோன்ற

தோழியிடம் இவர் இங்கு எம்மைப் பழிக்கத்தான் வந்தாரோ என வினவுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவி அறிகிறாள். தலைவியிடம் சென்ற தலைவன் தான் செய்த தவற்றை ஒப்புக் கொண்டு பொறுத்துக் கொள்ள வேண்டுமெனக் கூறி அவள் காலில் விழுகின்றான். அப்பொழுது தலைவி எம் தங்கை (பரத்தை) இதைப் பார்த்தால் நன்றாக இருக்காது எனக் கூறுகிறாள். இதனை,

நல்லாய் பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து

கையொடு கண்டாய் பிழைத்தேன் அருளினி

அருளுகம் யாம்யாரேம் எல்லா தெருள

அளித்துநீ பண்ணிய பூழெல்லாம் இன்னும்

விளித்துநின் பாணனோ டாடி யளித்தி

விடலைநீ நீத்தலின் நோய்பெரி தேய்க்கும்

நடலைப்பட் டெல்லாநின் பூழ்[78]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. நல்லாளே! என் தவறுகளையெல்லாம் எனக்குத் தெரிவித்து என் களவைக் கையோடு பிடித்துவிட்டாய். நானும் உன்னிடமிருந்து தப்ப முடியவில்லை. அதனால் எனக்கு அருள் செய்க எனத் தலைவன் கூறுகின்றான். அதைக்கேட்ட தலைவி நீ கூறியவாறு அருள் செய்வதற்கு நான் யார்? உன்னுடைய நடிப்பில் அகப்பட்டு நோய் பெரிது உடைவளாக இருக்கிறேன் எனத் தலைவி கூறுகின்றாள்.

பரத்தை ஒருத்தி தலைவன் தமக்குக் கொடுத்த மோதிரத்தில் ஒன்றைத் தெருவில் விளையாடும் தலைவனின் மகனுக்கு அணிவிக்கிறாள். இதனைக் கண்ட தலைவி கோபப்பட்டு மகனிடம் பேசுவதாக,

நறாவிதழ் கணடன்ன செவ்விரற் கேற்பச்

சுறாவே றெழுதிய மோதிரந் தொட்டாள்

குறியறிந்தேன் காமன் கொடியெழுதி என்றுஞ்

செறியாப் பரத்தை இவன்றந்தை மார்பிற்

பொறியொற்றிக் கொண்டாள்வல் என்பது தன்னை

அறீஇய செய்த வினை

..... …………………….

தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை

இதுதொடு கென்றவர் யார்

அஞ்சாதி நீயும் தவறிலை நின்கை இதுதந்த

பூவெழி லுணக ணவளுந் தவறிலள்

வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்

மேனின்றும் எள்ளி இதுஇவன் கைத்தந்தாள்

தான்யாரோ என்று வினவிய நோய்ப்பாலேன்

யானே தவறுடை யேன்.[79]

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. பரத்தை தம் அணிகலன்களில் தலைவனின் மகனின் வடிவிற்குப் ஒத்த சுறா மீன் வடிவில் இருக்கும் மோதிரத்தை அணிவித்தாள். இந்த மோதிரத்தை இவன் ஏன் வாங்கினான் என மகன் மீது கோபப்படுகின்றாள். 'மகன் அல்லான் மகன்' எனவும் சாடுகின்றாள். இந்த மோதிரத்தை அவள் ஏன் அணிவித்தாள், அதன் குறிப்பு யாது எனவும் கலங்குகிறாள். இந்த மோதிரத்தைக் கொடுத்தவள் யார் எனத் தன்மகனிடம் கேட்கிறாள். அவன் அஞ்சுகிறான். இதனைக் கண்ட தலைவி நீ அஞ்சாதே! இதனை அணிந்து வந்த நீயும் தவறில்லை. உன் கையில் இம்மோதிரத்தை அணிவித்தவளும் தவறு செய்யவில்லை. வேனில் காலத்துப் புதுப்புனல் போல எல்லோர்க்கும் பயன்படும் நும் தந்தையை இங்கு வருந்துபவர் இல்லை. ஆதலால் நானே தவறுடையள் எனத் தலைவி தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

இப்பாடலுக்கு விளக்கவுரை எழுதி பொ.வே. சோமசுந்தரனார்,

"வேனில் புனல் அன்ன நுந்தை என்னும் இவ்வுவமையின் நுணுக்கம் உணர்க. விரும்பிய பரத்தை மகளிரெல்லாம் வேண்டிய பொழுது ஆர்வத்தோடு அணைந்து ஆடுதற்கு இயைந்தொழுகும் தலைவனது பரத்தமை தன்மைக்கு இவ்வாறு எளிதின் உவமை தேர்ந்து கூறும் வித்தகம் சங்கப் புலவர்களுக்கே உரியது"[80]

என்று கருத்துரைத்துள்ளார். சங்கப் புலவர்களின் உவமைத் திறனை சிறப்பித்துள்ளமை போற்றத்தக்கது.

**காமக்கிழத்தி**

பரத்தையிலிருந்து வேறுபட்டவள் காமக்கிழத்தி. இவளும் தலைவனைக் கடிந்துரைக்கக் கூடியவள். தலைவனின் ஆசை நாயகி என்றும் ஆனால் குழந்தை பெற்றுக் கொள்ளும் உரிமை இவளுக்கு இல்லை என்றும் கூறுவர். இந்தக் காமக் கிழத்தி குறித்து பொ.வே. சோமசுந்தரனார்,

"காமக்கிழத்தியராவார் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர் அவர் பலராதலின் பன்மையாற் கூறினார். இவரைக் கண்ணிய காமக்கிழத்தியர் எனவே கண்ணாத காமக்கிழத்தியரும் உளராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையவராகியவரும் சேரிப் பரத்தையரும் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவல பாங்கினரும் பிறருமாம்"எனவும் சான்றோர் பலரும் காமக்கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவாய் செய்து கூறுமாறும் உணர்க எனவும் விளக்கம் தந்தனர்"[81]

என்று கருத்துரைத்துள்ளார். மேலும் இவர்,

"அகப்பொருளிலக்கியங்களிலே கூறப்படுகின்ற பரத்தையர் பொருட்பெண்டிர் அல்லர் என்பதும் கற்பொழுக்கம் பேணுபவர் என்பதும் இத்தகைய பரத்தையரை மட்டுமே தலைவன் கேண்மை கொள்வான் என்பதும் பெற்றாம். இத்தகைய பரத்தையரும் விலை மகளிராகிய பரத்தையரும் ஓரினத்தவரேயாவர். ஆயினும் இவர் தமது

ஒழுக்கம் காரணமாக உயர்ந்தோரும் இழிந்தோருமாகக் கருதப்பட்டனர்”[82]

என்று குறிப்பிட்டுள்ளார். பரத்தையரில் இருவேறுபட்ட தன்மையுடைவர்கள் இருந்தனர் என்பது இவரது கூற்றால் அறியமுடிகின்றது. ராஜ்கௌதமன் காமக்கிழத்தி குறித்து,

மனைவி, கணவனிடம் அவனது பரத்தைமையின் பொருட்டு ஊடல் கொள்ளுவதைப் போலக் காமக்கிழத்தியும் ஊடுகிறாள் என்பதுகுறிப்பிடத்தக்கது. இவர்களில் காமக்கிழத்தி என்னும் பரத்தையை மணமான ஆண் (பரத்தமை என்றாலே மணமான ஆணின் சுகத்திற்காக உருவாக்காப்பட்ட, கேளிக்கை நிறுவனமாகும்), வதுவை புரிந்து ‘மனைவி’யைப் போலத் தனது வீடுகளில் ஒன்றில் குடிவைத்துக் காம இன்பம் நுகர்கிறான்.இவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தனவா, அவற்றின் வாரீசு உரிமைத் தகுதி எப்படிப்பட்டது என்ற விபரங்கள் மருதத்திணைப் பாடற்பொருள்வரம்பிற்கு அப்பாற்பட்டவையாகத் தெரிகின்றன.[83]

என்று கருத்துரைத்துள்ளார். கலித்தொகைப் பாடல்கள் காமக்கிழத்திக்கும் தலைவனுக்கும் இருந்த உறவினை வெளிச்சமிட்டுக் காட்டுகின்றன. ஆனால் இவர் கூறுவது போன்று குழந்தைகள் பற்றியும் வாரிசு உரிமை பற்றியும் எந்தக் குறிப்பும் காணப்படவில்லை என்பது சுட்டத்தக்கது.

கலித்தொகையில், காமக்கிழத்தி தலைவனின் நிலையை எண்ணி வருந்துவதாகப் பல பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பின்வரும் பாடல் காமக்கிழத்தி வருந்துவதாக அமைந்துள்ளது.

பொய்கைப்பூப் புதிதுண்ட வரிவண்டு கழிப்பூத்த

நெய்தல்தா தமர்ந்தாடிப் பாசடைச் சேப்பினுள்

செய்தியற்றி யதுபோல வயற்பூத்த தாமரை

மைதபு கிளர்கொட்டை மாண்பதிப் படர்தரூஉங்

கொய்குழை அகைகாஞ்சித் துறையணி நல்லூர

அன்பிலன் அறனிலன் எனப்படான் எனவேத்தி

நின்புகழ் பலபாடும் பாணனும் ஏமுற்றான்

நஞ்சுயிர் செகுத்தலும் அறிந்துண்டாங் களியின்மை

கண்டுநின் மொழிதேறும் பெண்டிரும் ஏமுற்றார்

முன்பகல் தலைக்கூடி நன்பகல் அவள்நீத்துப்

பின்பகல் பிறர்த்தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்

எனவாங்கு

கிண்கிணி மணித்தாரோ டொலித்தார்ப்ப ஒண்டொடிப்

பேரமர்க் கண்ணார்க்கும் படுவலை இதுவென

ஊரவர் உடன்நகத் திரிதருஃ

தேர் ஏமுற் றன்று நின்னினும் பெரிதே[84]

வரியினை உடைய வண்டு முதலில் பொய்கையில் உள்ள பூக்களின் தேனினை உண்கிறது. பிறகு நெய்தல் பூவின் தேனையும் பிறகு தாமரையில் உள்ள தேனினையும் உண்ணச் செல்லும் நாட்டிற்குரிய தலைவனே! தேரில் ஏற்றிக் கொண்டு வந்த பரத்தையரை முதலில் நுகர்ந்து பின்னர் சேரிப் பரத்தையரை நுகர்ந்து விடியற்காலையில் தலைவியின் வீட்டிற்குச் செல்லும் தலைவனே எனக் காமக்கிழத்தி தலைவனிடம் புலந்து கூறுகின்றாள்.

நீ அன்புடையவன், அறனுடையவன் என்று புகழ்ந்து கூறும் பாணனும் பித்து ஏறியவனாக உள்ளான். உன்னுடைய பொய்யான வார்த்தைகளை உண்மையென நம்பும் பரத்தையரும் பித்து ஏறியுள்ளாள். முன்பகலெல்லாம் ஒருத்தியிடத்தே கூடியிருந்து பிற்பகல் காலத்தில் அவளைக் கைவிட்டு பலரிடத்தில் சென்று மாலை நேரத்தில் கூடுவதற்கு வேறு சிலரைத் தேடும் நின் நெஞ்சமும் பித்தேறியுள்ளது. நீ பித்து உடையவனாக மட்டும் இல்லை. உன்னுடைய தேரும் பித்து ஏறியதாக இருக்கிறது எனக் காமக் கிழத்தி தலைவனைப் புலந்து கூறுகிறாள்.

யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்

*ஊராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை*

*வாரல்நீ வந்தாங்கே மாறு*

*என்னிவை ஒருயிப் புள்ளின் இருதலை யுள்ளொன்று*

*போரெதிர்ந் தற்றாப் புலவல்நீ கூறினென்*

*ஆருயிர் நிற்குமா றியாது*[85]

தலைவி பரத்தையரை குதிரையாகவும் யானையாகவும் பழித்துப் பேசுவதாகக் கலித்தொகையில் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றில் முதல்பாடல் பரத்தையைக் குதிரையாக வர்ணிப்பதாகும். அப்பாடல் வருமாறு:

*அறிந்தேன் குதிரைதான்*

*பால்பிரியா ஐங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவல்*

*மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை*

*நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்*

*ஞாலியல் மென்காதிற் புல்லிகைச் சாமரை*

*மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற*

*உத்தி யொருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி*

*நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்*

*தார்மணி பூண்ட தமனிய மேகலை*

*நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த*

*வார்பொலங் கிண்கிணி யார்ப்ப இயற்றிநீ*

*காதலித் தூர்ந்த நின் காமக் குதிரையை*

*ஆய்சுதை மாடத் தணிநிலா முற்றத்துள்*

ஆதிக் கொளீஇய அசையினை யாகுவை

வாதுவன் வாழிய நீ[86]

தலைவி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள், மார்பில் பூசிய சந்தனம் அழிந்திருக்கிறது, தோல் கட்டிலில் கிடந்ததால் நிறம் குறைந்த மாலையைச் சூடியிருக்கின்றாய், எனும் காரணத்தைக் கூறி நீ எங்கு சென்றுவிட்டு இங்கு வந்தாய் என்கிறாள். இதனைக் கேட்ட தலைவன் குதிரை பயிற்சிக்குப் போய்விட்டு வருகின்றேன் என்று கூறினான். நீ ஏறிய குதிரைதான் நானறிவேனே என்று கூறுகின்றாள். அக்குதிரையின் தன்மையையும் பரத்தையின் தன்மையும் ஒப்பிட்டுப் பேசுகிறாள். இப்பகுதிக்கான நச்சினார்க்கினியர் உரையை அப்படியே நாம் இங்குக் காணலாம்.

> "ஐம்பாற் பகுதி நீங்காத ஐந்து வகையினையுடைய கூந்தலாகிய பல மயிர்களைப் பலகாலுங் கத்தரிகையிடுங் கேசாரியின் மயிரினையும், மயிர் முடியின்மேலே விரித்து நிலை பெறுத்தின துஞ்சாகிய சிவந்த தலையாட்டத்தினையும் நீல மணியைத் தோளிலே வைத்துத் தைத்துச் செய்த, கட்டுவடமாகிய கழுத்திற் கட்டுதலையுடைய வல்லிகையினையும், மெல்லிய காதிற் கிடக்கும் புல்லிகை யென்னும் பூணாகிய கீழே நாலும் இயல்பையுடைய கன்ன சாமரையினையுந், தெய்வவுத்தியென்னும் பூணினருகே துவங்கி ஒரு வடமாய் நாலுஞ் சுட்டியாகிய குதிரை கண்ணாற் கண்டு அஞ்சும்படியாக விட்டுவைத்த அழகுபெற்ற சம்மட்டியினையும் நூலாற் செய்யப்பட்ட உத்தரியமாகிய திண்ணிய குசையினையும், இனமொத்த மணிகளாற் செய்த தன்னிலொத்த முக்கண்டன் கட்டுவடமாகிய பல பல நிறத்தையுடைய கண்டிகையினையும், பொன்னால் செய்த மேகலையாகிய கழுத்திலே கட்டின சதங்கைத் தண்டையினையும், அடியிடத்தே சமைத்துக் கட்டின சிலம்பாகிய கெச்சையும் ஆரவாரிப்பச் செலுத்தி நீ காதலித்து ஏறின விருப்பத்தையுமுடைய குதிரையை செண்டுவெளியிலன்றி அழகினையுடைய சாந்து வாரின மாடத்தில் அழகினையுடைய நிலாமுற்றத்தே ஆதியென்னும் நெடுஞ்செலவை அதற்குக் கொளுத்தி

இளைத்தாய்; ஆகையினாலே நீ மேல் நல்ல அரசவாரியனாகுவை; நீ வாழ்வாயாக! வென்றாள்"[87]

பரத்தையின் கூந்தல், தலையாட்டம், நீலமணிக்கடிகை, காதில் அணிந்த சன்னசாமரை முதலியவற்றைக் குதிரைக்குப் பூட்டிய வல்லிகை, சாட்டை, கடிவாளம் முதலான அணிகளாகக் கூறி அத்தகைய காமக்குதிரையை ஊர்ந்து இளைத்து வந்தவனே! என்று தலைவி சாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

இங்கே வெளிப்படுவது பழந்தமிழ் அகவல் மருதப்பாடல்களில் பாடப்பட்ட ஊடல் அன்று; பெருங்கோபத்தை உள்ளடக்கிய எள்ளலும் இகழ்ச்சியும் மிகத் தீவிரமாக வெளிப்படுகின்றன. வசனமாக மாற்றப்பட்ட வசையாகத்தெரிகிறது[88]

என்று கருத்துரைத்துள்ளார்.

மற்றொரு பாடலில் தலைவி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள். நீ சொன்ன குறியிடத்து உன்னைக் காணாத பரத்தை எம்முடை வீட்டின் வாசலில் வந்து நின்று கடுஞ்சொல் கூறுகின்றாள். நீ அதை அறியாதது போல இருக்கின்றாய் என்றாள். இதனைக் கேட்ட தலைவன் புதிதாக ஒரு யானை அகப்பட்டது. அதன் மேல் ஏறிச் சென்று வந்தேன் எனக் கூறுகின்றான். இதனைக் கேட்ட தலைவி,

ஒக்கும்

அவ்வியானை வனப்புடைத் தாகலிங் கேட்டேன்

அவ்வியானைதான் சுண்ணநீ றாடி நறுநறாநீருண்

டொண்ணுதல் யாத்த திலக அவிரோடைத்

தொய்யில் பொறித்த வனமுலை வான்கோட்டுத்

தொய்யகத் தோட்டிக் குழைதாழ் வடிமணி

யுத்தி பொறித்த புனைபூண் பருமத்து

முத்தேய்க் கும்வெண் பன்னகை திறந்து

*நன்னகர் வாயிற் கதவ வெளில்சார்ந்து*

*தன்னலங்காட்டித் தகையினாற் கால்தட்டி வீழ்க்குந்*

*தொடர்தொட ராக வலந்து படர்செய்யு*

*மென்றோட் டடக்கையின் வாங்கித்தற் கண்டார்*

*நலங்கவளங் கொள்ளு நகைமுக வேழத்தை*

*யின்றுகண் டாய்போல் எவனெம்மைப் பொய்ப்பதுநீ*[89]

*என்று கூறுகின்றாள். இப்பாடலடிகளுக்கு நச்சினார்க்கினியர்,*

*"அந்தப் புத்தியானை, ஒள்ளிய நெற்றியிலே நிலைபெறுத்தின திலகமாகிய விளங்கிய பட்டத்தினையுந், தெய்யில் எழுதின அழகினையுடைய முலையாகிய வெண்மையையுடைய கோட்டினையுந், தொய்யக மென்னுந் தலைக்கோலமாகிய தோட்டினையுந், தாழ்ந்த மகரக் குழையாகிய வடித்த மணிகளையுந், திருவைப் பொறித்து வைத்த புனைந்த தலைப்பணியாகிய கழுத்து மெத்தையினையும் உடைத்து; ஆகையினாலே அழகுடைத்தாகலும் பிறர் கூறக் கேட்டேன்; அந்த யானைதான் சுண்ணமாகிய நீற்றை அணிந்து நறிய கள்ளாகிய நீரை உண்டு நல்ல மனைவாசலிற் கதவமாகிய கம்பத்தைச் சேர்ந்து அதனோடே துவக்குண்டதே தனக்குச் சங்கிலியாகக் கட்டுண்டு தன்னழகைக் காட்டி அவ்வழகாலே ஒருவரும் போகாதபடி காலைத் தடுத்து வீழ்க்கும்; அதுவேயுமன்றிப் பிறர்க்கு வருத்தத்தைச் செய்யும் மெல்லிய தோளாகிய தடக்கையாலே வாங்கிக் கொண்டு தன்னைக் கண்டாருடைய நலமாகிய கவளத்தை முத்தையொக்கும் நகையினையுடைய வெண்பல்லைத் திறந்து கொள்ளும்; அந்தச் சிரிப்பை முகத்தேயுடைய வேழத்தை இன்று கண்டாய்போலே நீ எம்மைப் பொய்யாக்குவது என்ன பயனயுடை தென்றாள்"*[90]

*என்னும் உரையை வழங்கியுள்ளார். மேற்குறித்த இரண்டு பாடல்களுக்கும் நச்சர் உரைத்திறம் உணர்ந்து மகிழத்தக்க அளவில் அமைந்துள்ளதை அறிய முடிகிறது. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,*

மறித்துவரும் நாட்டுப்புறப்பண்பை இவற்றில் பார்ப்பதோடு, தமிழில் ஏசல் இலக்கியத்தின் வளர்ச்சியடைந்த பரிமாணத்தையும் இவற்றில் எடுத்துக்காட்ட இயலும். பார்வையாளர்கள் நகையாடிக் களிப்பதற்கு ஏற்றவடிவமாக இந்தவித வாய்ப்பாடு கூத்தின் தாக்கம் பெற்று அமைந்துள்ளது.[91]

என்று கருத்துரைத்துள்ளார். இப்பாடல்கள் கூத்துக் கலையின் மாற்று வடிவம் என்றும் பார்வையாளர்களைச் சிரிக்க வைப்பதற்காக இயற்றப்பட்டது என்றும் இவர் கருத்துரைத்துள்ளது மேலும் ஆராய்ச்சிக்குரியதாக இருக்கிறது.

**கூனி குறளன்**

கூன் விழுந்த ஒருத்திக்கும் குறளன் ஒருவனுக்கு நிகழ்ந்த காதலை, உரையாடலை விளக்குவதாகக் கலித்தொகையில் ஒரு பாடல் உள்ளது.

ஏர் கலப்பை போன்ற உடலையும் நீருக்குள் நிழல் வளைத்திருப்பது போல் உடலையும் உடைய கூனி ஒருத்தியைக் குறளன் ஒருவன் காண்கிறான். உன்னிடம் ஒரு செய்தியைச் சொல்ல வேண்டும் நில் என்கிறான். அதற்கு அவள் ஆந்தை ஈன்றெடுத்த பறழ் மகனே! உன்னைப் போன்றோரை யாரேனும் தீண்டுவார்களோ எனச் சொல்கிறாள்.

அதற்கு அவன் கலப்பை போன்ற உடலை உடையவளே! உன் அழகு எனக்கு பொறுக்கமுடியாத காம வேதனையைத் தருகின்றது. ஆதலால் நீ எனக்கு அருள்புரிந்தால் என்னுயிர் பிழைக்கும். உன் கருத்தைக் கூறு என்கிறான்.

அதற்கு அவள் குறிபார்க்கும் சூதாட்டப் பலகையை எடுத்து நிறுத்தியது போன்ற உருவம் கொண்டவனே! கல்லாதவனே! மக்கள் இல்லாத உச்சிப் பொழுதில் வந்து என்னைக் கைப்பிடித்து உன் இல்லத்திற்கு வா என்று சொல்லுகிறாயே! உன் பெண்டாட்டி இருக்கமாட்டாளா? என்று கேட்கிறாள். இதனை,

மாண்ட எறித்த படைபோன் முடங்கி மடக்கி

நெறித்துவிட் டன்ன நிரையேரா லென்னைப்

பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லேன்

நீ நல்கி னுண்டென் னுயிர்

குறிப்புக்காண் வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன

கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை

இல்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்

பெண்டி ருளர்மன்னோ கூறு[92]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

குறளன் மேலும் கூறுகின்றான், நிற்கும் கொக்கு போல் வளைந்து நிற்பவளே! உன் மார்பகத்தை நான் தழுவ வேண்டுமென்றால் உன் நெஞ்சு நிமிர வேண்டும். முதுகினையும் தழுவ முடியவில்லை. நின் அருளைக் காட்டு பக்கத்தில் வந்து தழுவிக் கொள்கிறேன் என்கிறான்.

சீச்சீ முரிந்துபோன மகனே! வளைந்த மரத்தில் ஏறியிருக்கும் பூங்கொடி போன்றவள் நான். உன் வலையில் வீழ்வேன் என்று என் பின்னால் வராதே என்கிறாள். மேலும் கூறுகிறாள். நான் விரும்பவில்லை என்று சொல்லியும் என் பின்னால் வருகிறாய். ஆதலால் உன் மொழிக்குத் தலைசாய்க்கிறேன். நமக்குள் ஒருவரையொருவர் பார்த்து சிரித்துக் கொள்ளலாமா? என்கிறாள் கூனி.

கூனி குறளனைப் பார்த்து இனிய மார்பினை உடையவனே! பேயும் பேயும் துள்ளித் திரிகின்றன என்று கோயிலுக்குச் செல்பவர்கள் நம்மைக் கண்டு சிரிக்காமல் இருக்கவேண்டும். ஆதலால் வேறொரு காட்டுக்குச் சென்று ஆரத் தழுவி மகிழ்வோம் என்று கூனி கூறுகின்றாள். இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

> பாத்திரங்களின் உருவமும், உடல் ஊனம் பற்றிய ஏசல்களும், கிண்டலான உவமைகளும், பாத்திரங்களின் ஊனமுற்ற ஊடல்களும், ஏனைய ‘இயல்பான’ ஆண் – பெண்போலசரசமாகப் பேசுவதும் பார்வையாளர்களின் சிரிப்பினைக் குறியாகக் கொண்டுள்ளன. ‘இயல்பான’ மாந்தர்க்குரிய உணர்வு வெளிப்பாடுகள், இயல்பல்லாத-உடல் ஊனமுற்ற மாந்தரிடம் வெளிப்பட்டால் அது விகடமாக எடுத்துக் கொள்ளப்படுவது உலகெங்கிலும் காணத் தக்கதாகும். கூத்தின் தாக்கம்

அதிகரிக்க அதிகரிக்க 'அகப்புறம்' என்று உரைக்காரர்கள் முத்திரையிட்ட ஆண்- பெண் சரசசல்லாபப் பேச்சுக்களாக- பார்வையாளர்களைக் குறிவைத்த பாடல்கள் தோன்றின. கலித்தொகையில் அத்தகு பாடல்களில் இதுவும் ஒன்று; ஏனையவை முல்லைக்கலியில் காணப்படுகின்றன. அக்கால அரசர்களின் அந்தப்புரங்களில் ஆண்மை கழற்றப்பட்ட நபும்சகங்களும்,அந்தபுரத்து உரிமை மகளிர்க்குக் காமத்தைக் கிளப்பயியலாத பிறவி ஊனர்களும்(கூன், குறள் முதலியவர்கள்) காவலாளிகளாகவும், வேளைக்காரர்களாகவும், விதூஷகர்களாகவும் பணியாற்றினார்கள். அவர்களைப் புலவர் நகைச்சுவைக்குப் பயன்படுத்தியது தெரிகிறது[93]

என்று குறிப்பிட்டுள்ளார். இவர் இப்பாடல்களில் நாட்டுப்புறச் சாயல் மிகுதியாக உள்ளது என்றும் பார்வையாளர்களை நகைக்க வைப்பதற்காகவே இப்பாடல் இயற்றப்பட்டது என்றும் கருத்துரைத்துள்ளார். மேலும் இவர்,

இப்பாடலையும்,சான்றோர் கூற்றாக வரும் இரண்டுப் பாடல்களையும் (99,100) நல்லந்துவன் மருதக்கலியில் சேர்த்ததற்கான தருக்கம் முழுமையாகத் தெரியவில்லை.அகப்பாடலில் சான்றோர்க் கூற்று இடம்பெறுவது புதுமையாகவுள்ளது.[94]

என்னும் வினாவினையும் ஐயத்தினையும் இவர் முன்வைத்துள்ளார். கலித்தொகையில் இதுபோன்ற புதுமையான செய்திகள் பல இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

**குறும்புக் காதல்**

தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்த பாடல் ஒன்று காதலனின் குறும்புத் தனத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது.

ஒளிவீசும் வளையலை அணிந்தவளே! நாம் மணலால் ஆகிய சிற்றிலைச் செய்து விளையாடும்பொழுது அதனை ஒருவன் களைத்தான். அதுமட்டுமல்லாது நான் கூந்தலில் அணிந்திருந்த பூவையும் கொய்துக்கொண்டு ஓடினான். நம் கையில் இருந்த வரிப்பந்தையும் எடுத்து ஓடிய அவன் கட்டுப்பாடு இல்லாதவன். அத்தன்மையை உடையவன் ஒருநாள் நானும் என்

அன்னையும் வீட்டில் இருக்கும்பொழுது வந்தான். வந்தவன் குடிப்பதற்கு நீர் கேட்டான். அன்னை என்னைப் பார்த்து நீர் கொடுத்துவரச் சொன்னாள். நானும் சென்றேன். அப்பொழுது வளையல் அணிந்த என் முன்கையைப் பற்றி வருத்தினான். தாயே இவன் செய்வதைப் பார் எனக் கத்தினேன். நான் கத்தியவுடன் தாயும் ஓடிவந்தாள். அப்பொழுது அவனின் நிலையைக் கருதி, அவனின் செயலை மறைத்து ‘உண்ணு நீர் விக்கினான்’ என்று ஒரு பொய்யைக் கூறினேன். என் தாயும் அவன் முதுகை அழுத்திப் பலகாலும் தடவினாள். அப்பொழுது அவன் தன் கடைக்கண்ணாலே நோக்கி என்னைக் கொல்பவன் போலப் பார்த்து நகைத்தான் எனத் தலைவி தோழிக்குக் கூறினாள். இக்காட்சியினை,

> உண்ணுநீ ரூட்டிவா என்றா ளெனயானுந்
>
> தன்னை யறியாது சென்றேன்மற றென்னை
>
> வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
>
> டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
>
> அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
>
> உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையுந்
>
> தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
>
> கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டஞ்
>
> செய்தானக் கள்வன் மகன்.[95]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இப்பாடலுக்கு நச்சினார்க்கினியர்,

> “தலைவன் இருவகைக் குறியும் பிழைத்தலிற் றலைவியைக் காணானாய்க் காட்சியாசையிற் கலங்கி வேட்கையின் மயங்கினனாதலின், நம் மனைக்கண்ணே உண்டிக் காலத்தைக் கருதி வந்து தன் ஆற்றாமை மிகுதியான் இவளை முன்கை பற்றி நலித்தான். இவளும் அதனை மறைத்து விட்டாள்; இனி இவட்கும் அவனைக்

*கூடுதல் கருத்தாயிருந்தது; இனி, அவனைக் கூடுவ ளெனத் தோழி கருதுவளாதலின் வேறுமொரு பொருள் நுதலிவந்ததாயிற்று''*[96]

*என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடலுக்கு விளக்கவுரை எழுதிய பொ.வே. சோமசுந்தரனார்,*

*''இதனால் தலைவியின் திருவுடைமையும் அன்னையின் விருந்தோம்பும் அறப்பண்பும் விளங்குதல் உணர்க''*[97]

*என்று கருத்துரைத்துள்ளார். மேலும், நச்சினார்க்கினியர் இப்பாடலுக்கு, ''புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின் பகுதிக்கண்'' தலைவி தோழிக்குக் கூறியது'' என்று துறைக்குறிப்பு வரைந்துள்ளார். ஆனால் பொ.வே. சோமசுந்தரனார்,*

*''இதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுகின்ற ''புகாக்காலை.... கூறியது'' எனவரும் இலக்கணம் பொருந்தாது. இதனை, ''உயிரினும் சிறந்தன்று..... பொருளே'' எனவரும் (தொல் – கள – 22) விதியினாலமைத்துக் கொள்ளல் பொருந்தும்''*[98]

*என்று மறுத்துரைத்து அதற்குத் தான் சரியெனக் கருதுவனவற்றையும் வெளிப்படுத்தியுள்ளார். இச்செய்யுளில் தலைவி தோழிக்கு குறிப்பாக சில செய்திகளை வெளிப்படுத்தியுள்ளதாக பொ.வே. சோமசுந்தரனார் குறிப்பிட்டுள்ளார். அவை வருமாறு:*

*''சுடர்த்தொடீஇ! கேள்! நோதக்க செய்யும் அச்சிறுபட்டி பண்டே என்னுளம் புகுந்துவிட்டான். உற்றார்க்குரியர் பொற்றொடிமகளிர் என்பது யான் நினக்குக் கூறவும் வேண்டுமோ? யான் இவ்வாறு கற்புக் கடம்பூண்டிருத்தலை என் சுற்றத்தார் சிறிதும் அறியார். ஏதிலாரும் யாதுமறியார். ஆகவே எம்மில்லத்திற்கும் ஏதிலார் சிலர் மகட் பேசி வருகின்றனர். எம் இருமுது குரவரும் அவ்வேதிலார்க்கு மகட்கொடை நேர்தற்கு முன்பே நீ இவ்வுண்மையினை அவர்க்கு அறிவுறுத்தி எனது கற்பறத்தையும், அவர் தம் வாய்மையறத்தையும், பாதுகாத்துத் தருதி!*

என்பதே யாம். இதனை அறத்தொடு நிலை என்று கூறும் பொருளியல் நூல்''[99]

என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

> ''இதனைக் கதை என்பதைவிட ஒருசிறு நிகழ்ச்சி பற்றிய எதார்த்தமான நடைச்சித்திரம் என்றே சொல்லலாம். இதில் சம்பந்தப்படுகின்ற பெண்பாத்திரம், நிகழ்ச்சியில் ஆணின் செயலோடு முரண்படுவது போன்ற பாவனையை உண்டாக்கி, தனது உடன்பாட்டை மறைவாக உணர்த்துகிறாள். பெண்ணை ஒரே வகை மாதிரியாக ஆண் சித்திரிப்பதற்கு எடுத்துக்காட்டாக இதனைக் கூறலாம். புலவன் தெரிவுசெய்த அன்றாட நிகழ்ச்சி முரணான இயல்புகளை உடையவர்களாக ஆணையும் பெண்ணையும் வார்த்துள்ள கலாச்சார அழுத்தத்தால் ஆழ்மனங்களில் ஈர்ப்பினை ஏற்படுத்துவதாக உள்ளது. இதில் அற்புத கதியாயான கற்பனையோ, நவிற்சியோ இல்லாதிருப்பது குறிப்பிடத்தக்கது. கலிவெண்பாட்டு என்ற கலிப்பா வகை சிறுகதையாக நிகழ்ச்சிகளை புனைவதற்கு ஏற்றவடிவமாக இருந்திருப்பதை அறியலாம்.[100]

என்று கருத்துரைத்துள்ளார். இப்பாடல் எதார்த்தமான நடையில் அமைந்துள்ளது என்றும் கற்பனையும் உயர்வு நவிற்சியும் கூறப்படவில்லை என்றும் இவர் தெரிவித்துள்ளார்.

இதுவரையில் சங்க அக நூல்களில் பிற்பட்டதாகக் கருதப்படும் கலித்தொகையில் அமைந்துள்ள பல்வேறு காதல் காட்சிகளை விரிவாகக் கண்டோம். ஏனைய அக நூல்களில் இடம்பெறாத பொருந்தாக் காதல் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ள ஒரே நூல் கலித்தொகை என்பதையும் இவ்வாய்வின் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

**தொகுப்புரை**

சங்க அகநூல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்னும் எழுதிணை பற்றிய பாடல்களையும் கொண்டிலங்கும் ஒரே தொகை நூல் கலித்தொகை ஆகும். இந்தப் பொருள்

வைப்பு முறை பாலையில் தொடங்கிப் பெருந்திணையில் முடிகின்றது. கைக்கிளை குறித்து நான்கு பாடல்களும் பெருந்திணை குறித்து பத்து பாடல்களும் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன. ஏனைய அகநூல்களில் இப்பாடல்கள் இடம்பெறவில்லை என்பதும் இங்குச் சுட்டத்தக்கது.

களவு காலத்து ஒழுகலாறுகளான இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு ஆகியன குறித்து சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் தோழியிற் புணர்ச்சி குறித்த பாடல்களே கலித்தொகையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன என்பது சுட்டத்தக்கது.

கலித்தொகையின் பாலைக்கலிப் பாடல்கள் பெரும்பான்மையும் செலவு அழுங்குவித்தல் துறையில்தான் அமைந்துள்ளன. பொருளீட்டச் செல்லும் தலைவனுக்குத் தலைவியின் இளமை நிலையாமையை எடுத்துக் கூறிப் பொருளைவிட தலைவியோடு சேர்ந்திருப்பதே சிறந்தது எனக்கூறி தோழி அறிவுறுத்துவதாகப் பல பாடல்கள் அமைந்துள்ளன.

முல்லை நில இடையர்களை ஆட்டிடையர், பசுவிடையர், கோவிடையர் என மூவகையாகப் பாகுபடுத்துவர். இவர்களில் கோவிடையரே உடலால் வலிமை மிக்கவராவார். இவர்கள் இவ்வாறு மூன்று பிரிவினராக இருந்தாலும் இவர்களின் மண உறவுக்கு இந்தப் பிரிவு தடை இல்லை என்பதையும் கலித்தொகையின்வழி உணரமுடிகின்றது.

முல்லைநில ஆய்ப்பெண்கள் காளையின் கொம்பிற்கு அஞ்சாமல் அதனை அடக்குபவனையே திருமணம் செய்திருக்கிறாள். இப்படிப்பட்ட வீரனுக்குத்தான் தன் பெண்ணையும் அவர்கள் கொடுத்திருக்கிறார்கள் என்பது கலித்தொகையின் வழி புலனாகின்றது. ஏறு தழுவுதல் விழா கலித்தொகையில் மட்டுமே காணப்படும் ஒரு விழாவாகும்.

பரத்தை, காமக்கிழத்தி ஆகியோருடன் தலைவனுக்கு தொடர்பு இருந்ததையும் இவர்களோடு தலைவனுக்கு இருந்த ஒழுக்கத்தைக் கண்டு தலைவி வருந்துவதையும் விளக்கும் வகையில் மருதத் திணைப் பாடல்கள் அமைந்துள்ளன.

கலித்தொகையில் பல பாடல்கள் அறத்தொடு நிற்றல் நிலையில் அமைந்துள்ளன. இது வேற்று வரைவு வந்தபொழுது தலைவியால் தோழியின் வாயிலாக நிகழ்த்தப்பட்ட ஒன்றாகும்.

அன்றைய காலக் குறும்புக் காதலனின் செயலை விளக்கும் வகையில் கலித்தொகையில் "சுடர்தொடீஇ கேளாய்" என்னும் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் நாடகப் பாங்கில், ஒரு சிறுகதை போல அமைந்துள்ளது இங்குச் சுட்டத்தக்கது. ஏனைய தொகை நூல்களில் இத்தகைய நாடகப் பாங்கிலான நூல்களைக் காணுவது அரிதே.

கூனி, குறளன் இருவருக்குமிடையே நிகழும் பொருந்தா உரையாடல், வேறு எந்த அகநூல்களிலும் இடம்பெறவில்லை. இத்தகைய உரையாடல்கள் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகின்றது. இத்தகைய பாடல்கள் பார்ப்பவர்களிடையே நகைச்சுவை உணர்வினைத் தோற்றுவிப்பதற்காக இயற்றப்பட்டன என்ற கருத்தும் உண்டு என்பதை இவ்வாயிவின் வழி உணர முடிகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. ச. வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், தொ.1, ப. 125
2. மேலது, ப. 125
3. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 9
4. தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, ப.
5. கலித்தொகை, பா. 37
6. மேலது, பா. 37
7. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 35
8. மேலது, ப. 49-50
9. கலித்தொகை, பா. 14
10. தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, ப. 6
11. கலித்தொகை, பா. 63
12. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 111
13. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 76-77
14. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 40
15. கலித்தொகை, பா.
16. தொல்காப்பியர், தொல்காப்பியம், களவியல், நூ. 49
17. மேலது, இளம்பூரணர் உரை, ப. 94
18. கலித்தொகை, பா. 105
19. திருவள்ளுவர், திருக்குறள், பா. 1141
20. கலித்தொகை, பா. 60
21. திருவள்ளுவர், திருக்குறள், பா. 1096
22. கலித்தொகை, பா. 132
23. மேலது, பொ.வே. சோமசுந்தரனார் உரை, ப. 51
24. கலித்தொகை, பா.54
25. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 67
26. கலித்தொகை, பா. 39
27. மேலது, பா. 13
28. மேலது, பா. 65
29. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 51

30. மேலது, ப. 52
31. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, குறிஞ்சிக்கலி, ப. 123
32. கலித்தொகை, பா. 46
33. மேலது, 125
34. தொல்காப்பியர், தொல்காப்பியம், கற்பியல், நூ. 44
35. கலித்தொகை, பா. 18
36. மேலது, பா. 18
37. தொல்காப்பியர், தொல்காப்பியம், கற்பியல், நூ. 995
38. தொல்காப்பியர், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, ப. 76
39. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 180
40. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 51
41. கலித்தொகை, பா. 58
42. மேலது, பா. 56
43. மேலது, பா. 57
44. மேலது, பா. 59
45. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 70
46. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூ. 996
47. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 191
48. மேலது, ப.8
49. மேலது, ப. 198
50. கலித்தொகை, பா. 138
51. மேலது, பா. 139
52. மேலது, பா. 141
53. மேலது, பா. 18
54. மேலது, பா. 142
55. மேலது, பா. 142
56. மேலது, பா. 145
57. மேலது, பா. 142
58. மேலது, பா.62
59. மேலது, பா. 40

60. மேலது, பா. 41

61. மேலது, பா. 41

62. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 130

63. கலித்தொகை, பா. 115

64. மேலது, பா. 107

65. மேலது, பா. 107

66. மேலது, பா. 107

67. மேலது, பா. 102

68. மேலது, பா. 103

69. மேலது, பா. 105

70. மேலது, பா. 114

71. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 122

72. கலித்தொகை, பா. 103

73. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 84

74. கலித்தொகை, பா. 66

75. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 2

76. கலித்தொகை, பா. 73

77. மேலது, பா. 81

78. மேலது, பா. 95

79. மேலது, பா. 84

80. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 72

81. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 8

82. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 8 - 9

83. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 80

84. கலித்தொகை, பா. 74

85. மேலது, பா. 89

86. மேலது, பா. 96

87. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 126

88. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 104

89. கலித்தொகை, பா. 97

90. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 132
91. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 103
92. கலித்தொகை, பா. 97
93. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 109
94. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 109
95. கலித்தொகை, பா. 15
96. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ப. 68
97. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 68
98. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 68
99. கலித்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப. 14
100. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப. 50

## இயல் – 3

## சமுதாய வாழ்வு

சமுதாயம் என்பது இலத்தீன் சொல்லான Societas, என்ற சொல்லிலிருந்து வந்துள்ளது. இது தோழன், நண்பன், நட்பு என்ற பொருள் கொண்ட Socius என்ற சொல்லிலிருந்து பிறந்ததாகும். படைப்பு ஏதும் இல்லாத நிலையில் சமூகம் என்பது முழுமையான மனிதத்தைக் குறிப்பதாகப் பார்க்கப்படுகிறது. சமூகத்தின் கட்டுப்பாடுகளுக்கு மதிப்பளிக்காதவர்கள் சமூக எதிர்ப்பாளராகப் பார்க்கப்படுகிறது. இருப்பினும் ஸ்காட்லாந்தின் பொருளாதார வல்லுநரான ஆடம் ஸ்மித், வெவ்வேறு வணிகர்களிடையே வேறு எந்தவொரு பரஸ்பர அன்பும் பாசமும் இல்லாமல் நிலவும் உறவுமுறையே சமூகம் என்கிறார். சமுதாயம் என்பது சமூகச் செயல்பாட்டு உறவுகளின் எல்லைகளால் வரையறுக்கப்பட்ட தனிநபர்களால் உருவாக்கப்படும் ஒரு அமைப்பாகும். தேசிய அல்லது கலாச்சார அடையாளங்கள், சமூக ஒற்றுமை, மொழி அல்லது படிநிலை அமைப்பு போன்ற சிறப்பியல்புகளை இவ்வமைப்பு கொண்டிருக்கும்.

சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட மக்கள் குழுவைக் குறிக்கும். ஒரே மாதிரியான புவியல் நிலப்பகுதியில் வாழ்கின்ற ஒரு பெரிய மக்கள் குழுவையும் சமூகம் எனலாம். அல்லது ஒரே மாதிரியான அரசியல் அதிகாரத்திற்கு உட்பட்ட சமூகப் பகுதிகளில் வாழ்கின்ற மக்கள் குழுவையும் சமூகம் எனலாம். இக்குழுவில் உள்ளவர்களிடையே தொடர்ச்சியான சமூக உறவுகள் காணப்படும். இவ்வகையான குழுக்களில் இருப்பவர்கள் மேலாதிக்க கலாச்சார எதிர்பார்ப்புகளுக்கு உட்பட்டிருப்பர். தனித்துவமான பண்பாடு, நிறுவனம் சார்ந்த தொடர்புகள், இத்தகைய குழுவினரின் அடிப்படையாக அமைந்திருக்கும் விரிந்த அளவில் நோக்கும்பொழுது சமூகம் என்பதை பல்வேறுபட்ட மக்கள் அல்லது மக்கள் கூட்டத்தை உள்ளடக்கிய பொருளியல், சமூக மற்றும் தொழில்துறை உட்கட்டமைப்பு எனலாம். பொதுவாகச் சமூகம் என்பது தமிழர் என்பதுபோல ஒரு குறிப்பிட்ட மக்களையோ ஒரு பரந்த பண்பாட்டுக் குழுவையோ குறிப்பதாகக் கொள்ளலாம்.

சங்க இலக்கியம் சமூகத்தின் வாழ்வியலையும் வரலாற்றையும் தொன்மையையும் எடுத்தியம்பும் நிலையானதொரு ஆவணமாகத் திகழ்கிறது. உலக மக்களிடையே உயர்ந்த இனமாகத் தமிழினம் வாழ்ந்துள்ளதை சங்கப் பாடல்கள் பலவும் படம்பிடிக்கின்றன. பொருளீட்டுவதும் விருந்தோம்புவதும் மகளிரைப் பேணுவதும் தமிழர்களின் தலையாய கடமையாக இருந்துள்ளது. நானில மக்களும் தம்மிடம் உள்ள பொருள்களைக் கொடுத்தும் கொண்டும் உண்டும் உயிர்த்தும் உறவாடி மகிழ்துள்ளனர்.

> இந்நானில மக்கள் செம்மையான இல்லற நெறியைக் கொண்டிருந்தார்கள். மகளிர் தம் கற்பு பெரிதாகப் போற்றப்பட்டது. ஈத்துவக்கும் இன்பத்தை அச்சமுதாயம் கண்டிருக்கிறது. ஒன்றிய கேண்மை உயர்வாக மதிக்கப்பட்டிருக்கிறது. சான்றோர் வாழ்ந்து அச்சமுதாயத்திற்கு ஆக்கம் தந்திருக்கின்றனர். மன்னராட்சியே நிலைபெற்றிருந்தது என்றாலும் அரசியல் நெறி மிகவும் நேரிய நிலையில் இருந்திருக்கிறது. செல்வத்தின் சிறப்பு பேசப்பட்டிருக்கிறது. நிலையாமை என்பதை அக்காலச் சமுதாயம் தெளிவாக உணர்ந்திருக்கிறது. சூழலுக்கேற்ப அக்கால மக்களிடத்தும் பல்வேறு பழக்க வழக்கங்கள் நிலைபெற்றிருந்த தன்மையினையும் நாம் காணலாம்.[1]

என்ற கூற்றின்மூலம் பண்டைத்தமிழர்களின் வாழ்வு சிறப்புக்குரியதாகவும் வரலாற்றுப் பெட்டகமாகவும் திகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது. இவற்றுள் கலித்தொகையில் தமிழர்களின் வாழ்வு எத்தகைய வளம் நிறைந்ததாக உள்ளது என்பதையும் அவர்களின் சமுதாய அமைப்பு, பண்பாட்டு, பழக்க வழக்கங்களையும் ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**ஐந்திணை மக்களும் அவர்தம் வாழ்வும்**

சங்கப் புலவர் அந்தந்த நிலத்தில் வாழ்ந்த மக்களின் பண்பாட்டுக் கூறுகளை உண்மைத் தன்மையுடன் பதிவுசெய்துள்ளனர். ஐந்திணைகளும் ஐந்து வேறுபட்ட பண்பாடுகளைக் கொண்டிருந்த தன்மையை விளங்கிக் கொள்ள அவர்கள் தரும் வாழ்க்கை பற்றிய குறிப்புகளை அறியவேண்டியது அவசியமாகின்றது.

மலைசார்ந்த நிலமான குறிஞ்சியில் வாழ்ந்தோர் குறவர், கானவர் எனப்பட்டனர். பெண்பாலர் குறத்தி, கொடிச்சி எனப்பட்டனர். மலைப் பகுதிகளில் பெரிய குடியிருப்புகளோ ஊர்களோ உருவாக முடியாத சூழ்நிலையில் சிறிய குடியிருப்புகளே இருந்தன. எனவே, அவை சிறுகுடில் என்று சுட்டப்படுகின்றன. இவர் தம் வீடுகள் எளிமையாகப் புல்லால் வேயப்பட்டன.

இவர்கள் படுப்பதற்கு வரிப்புலியின் தோலைப் பயன்படுத்தியுள்ளனர். ''மரல்நாருடுக்கை மலையுறை குறவன்'' என்னும் குறிப்பினால், குறமாக்கள் பருத்தியாடையை அணியவில்லை என்பது தெளிவாகின்றது. இவர்களின் அடிப்படைத் தொழில் வேட்டையாடுதலாகும். மான், முள்ளம்பன்றி, யானை, புலி முதலானவற்றை இவர்கள் வேட்டையாடினர். வேட்டையில் இவர்கள் நாயையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

> விலங்குகளை வேட்டையாடுதலோடு கிழங்கெடுத்தல், தேன் அழித்தல், பலாப்பழம், மாவடு தொகுத்தல் ஆகிய பணிகளிலும் ஈடுபட்டுள்ளனர். மேலும் இவர்கள் மிகவும் எளிய முறையில்
>
> மலை நிலத்தைப் பயன்படுத்தித் தினை விதைத்துப் பயன்பெற்றுள்ளனர். 'கல்லுழு குறவர்' என்னும் குறிப்பால் குறவர் கூரிய கற்களைக் கொண்டு நிலத்தை உழப் பயன்படுத்தினார்களோ என எண்ண வேண்டியுள்ளது.
>
> இவர்கட்கே சிறப்பாக உரிய பண் குறிஞ்சி என்றே பெயர் பெற்றது. பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாட என்னும் குறிப்பால் இவ்வுண்மை அறியப்படும். இவர்களின் தெய்வம் முருகனானவன். குறவர்கள் முருகனை வணங்கியுள்ளதை திருமுருகாற்றுப்படை விரிவாகப் பேசியுள்ளது. வெறியயர்தல் இவர்கள் வாழ்க்கையில் ஒரு சிறப்பான இடம் பெற்றது எனத் தெரிகிறது.[2]

என்றுரைக்கின்றார் அ. தட்சிணாமூர்த்தி. மேலும், குறிஞ்சி நிலத்தில் மலையும் யானையும் சிறப்பிக்கப்பெறுகின்றன. காந்தள் மலர்களும் வேங்கை மலர்களும் நிறைந்து ததும்பியுள்ளன.

"தினைப்புனத்தில் உள்ள வேங்கை மலர்களின் தாது வீழ்ந்து பொன்போல் ஒளிறும் முற்றம்"[3]

என்ற கூற்றின்மூலம் இதனை அறியமுடிகின்றது.

நெய்தல் நிலமான கடற்கரைப் பகுதிகளில் பரதவர் அல்லது நுளையர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்கள் மிகவும் எளிய குடிசைகளில் காயலாலும் தாழை மடல்களாலும் அமைக்கப்பட்ட குடில்களில் பரதவர் வாழ்ந்துள்ளனர். மணல்வெளிகளில் அமைந்திருந்த இவர் தம் குடியிருப்புகளும் சிறுகுடி எனப் பேசப்படுகின்றன. ஊரென உணரமுடியாத அளவிற்குச் சிறிய குடியிருப்புகளும் இருந்தன.

இவர்கள் படகு, வலை, தூண்டில் ஆகியவற்றைக் கொண்டு மீன் பிடித்தனர். இரவில் மீன் பிடிக்கச் செல்லுகையில் படகில் விளக்கேற்றிச் சென்றனர். முத்து, சங்கு குளித்தல் இவர்களின் முதன்மைப் பணியாக இருந்துள்ளது.

இவர்களின் பொருளாதார வளர்ச்சிக்கு உப்பு விளைவித்தலுக்குச் சிறப்பிடமுண்டு. உப்பு விளைவித்ததால் இவர்களையும் உழவர் என்றே குறித்தனர். இவர்கள் உழா உழவர் எனப்பட்டனர்.

கிளிஞ்சல்களில் மீன் நெய்யை இட்டு விளக்கேற்றுவது இவர்களின் பழக்க வழக்கமாக இருந்துள்ளது. பரதவர்கள் உமணரிடம் உப்பை விற்று அதற்குப் பதிலாக வெண்ணெல்லைப் பெற்றுள்ளனர். இவர்கள் வருணனை வணங்கியதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

முல்லை நிலத்தில் வாழ்ந்தோர் ஆயர், கோவலர், இடையர் என அறியப்பட்டனர். இவர்தம் பெண்பாலரை ஆயமகள் என அழைத்தனர். எருமைக் கிடையை மேய்த்தோரைக் கோட்டினத்தாயர். பசுக்களை மேய்த்தோர் கோவினத்தாயர் என்றும் ஆடு மேய்த்தோரைப் புல்லினத்தாயர் என்று அழைக்கப்பட்டனர்.

கால்நடைகளை மேய்த்தல் என்பது இவர்களின் முதன்மையான தொழிலாக இருந்துள்ளது. எனினும் தினை விதைத்தல் பால், தயிர்,

வெண்ணெய் முதலான பொருள்களை விற்று பொருளாதாரத்தில் உயர்ந்துள்ளதையும் அறிய முடிகின்றது.

வறண்ட பாலை நிலத்தில் வாழ்ந்த மக்களை மறவர் என்றும் எயினர் என்றும் அழைத்துள்ளனர். பொருளீட்ட வழியற்ற இவர்கள் வழிபோக்கர்களிடம் வழிபறி செய்தும் அவர்களைக் கொன்றும் உயிர் வாழ்ந்துள்ளனர். இதனை,

> வில்லையும் வேலையும் கொண்டு வழிப்போவோரை அலைத்து வாழும் இயல்பிரான இவர்கள் பண்பாட்டின் மிகத் தாழ்ந்த நிலையினர் என்பதில் ஐயமில்லை. கோவலரின் ஆக்களைக் கவர்ந்து சென்று பங்கிட்டுக் கொள்வது இவர் வழக்கமாகும். வழிப்போவோர் இக்கள்வராற்பட்ட இன்னல்கள் பற்றிய சான்றுகள் மிகப்பலவாகும். கைப்பொருள் யாதும் இலரெனினும் அவர்களைக் கொன்று பறவைகளுக்கு ஊட்டும் வன்கணாளராக இவர்கள் வாழ்ந்தனர்.[4]

என்ற அ. தட்சணாமூர்த்தியின் கூற்று பாலை நில மக்களின் வன்குணத்திற்கு சான்றாக அமைகின்றது.

வளமான மருதநிலத்தில் உழவுத் தொழில் புரிந்தவர்கள் உழவர்கள் ஆவர். மருதநிலம் நாகரிகத்தின் இருப்பிடமாகவும் இருந்துள்ளது. மருத நிலத்தில் ஊர்கள் மிக நெருக்கமாக இருந்துள்ளன. உழவர் குடியிருப்புகள் பலவாறு சிறப்பிக்கப்பட்டன.

மருதநிலம் நீர் வளத்தால் மற்ற நிலங்களிலும் பல படிகள் வளர்ச்சி கண்டுள்ளது. நெல்லும் கரும்பும் இந்நிலத்தின் முதன்மையான விளைபொருட்களாகும். நெல்விளைவது ஊருக்குப் பெருமையாகக் கருதப்பட்டது. உறந்தை, குடவாயில், ஊணூர், முத்தூர், அம்பர், பருவூர் ஆகியன இங்ஙனம் பாராட்டப்பட்டனவாகும். வளமின்மையை நெல் விளையாமையைக் கொண்டு விளக்கும்பொழுது நெல் பண்டைத் தமிழர் வாழ்க்கையில் இன்றியமையா இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது.

விலைநிலங்களுக்கு உரிமையானவர்கள் தோன்றியிருந்தனர். உயர்ந்த கூடுகளில் நெல்லைச் சேர்த்து வைத்து வாழ்ந்துள்ளதற்கான சான்றுகள் கிடைக்கின்றன.

"மோட்டெருமை முழுக்குழவி

கூட்டுநிழல் துயில்வதியும்"[5]

என்று சோணாட்டு வளம் பாராட்டப்பட்டுள்ளது. நிலக்கிழாரின் களஞ்சியங்கள் மலைபோல் உயர்ந்து காணப்பட்டன. செல்வர் மனைகள் பெருஞ்சோற்று இல்லமென்றும் கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பு என்றும் நெல்லுடை நெடுநகர் என்றும் பாராட்டப்பட்டன. யாண்டு கழி வெண்ணெல்லைக் கொடுத்துத் தமக்கு வேண்டும் பிற பொருட்களை உழவர் பெற்றனர். பழம்பல்லுணவு, பழம்பல் நெல்லின் ஊணூர் என்னும் குறிப்புகள் மூலம் உழவரிடம் சேர்த்து வைக்கும் வழக்கமிருந்தமையை அறியமுடிகின்றது.

மருதநிலத்தில் கரும்பு காடு போல் வளர்ந்துள்ளது. எந்திரத்தைப் பயன்படுத்திக் கரும்பினைப் பிழிந்து சாறெடுத்தனர். சர்க்கரை செய்யும் தொழிலும் இந்நிலத்தில் பரவலாக நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது.

இந்நிலத்தில் ஏற்பட்ட பொருளாதர வளர்ச்சியே வணிகர்களைத் தோற்றுவிக்க காணமாக இருந்தது. இந்நிலத்தைச் சேர்ந்த உமணர் என்பார் நெய்தல் நில விளைபொருளான உப்பை நாடு முழுதும் கொண்டு சென்று விற்றனர். மக்கள் யாவராலும் பயன்படுத்தப்பட்ட உப்பினை விற்ற இம்மக்கள் பெருஞ்செல்வம் குவித்திருக்க இடமுண்டு.

மலையில் விளையும் பொருளையும் கடலில் கிடைக்கும் பொருளையும் கழுதைகள்மீது ஏற்றிக் கொண்டு சென்ற வணிகர் பற்றியகுறிப்புகள் பெரும்பாணாற்றுப்படையில்கிடைக்கின்றன. ஆறலைக் கள்வர்க்கும் வணிகச் சாத்தினர்க்கும் நடந்த போர்கள் பற்றி அகப்பாடல்களில் சான்றுகள் காணப்படுகின்றன.

கோடைக்காலத்தில் தமிழக எல்லைகளைக் கடந்தும் பொருள் தேடச் சென்றவர்கள் பற்றிப் பல குறிப்புகள் உள்ளன. மு. வரதராசன் இவர்களைவணிகர் என்றே கருதுகின்றார். கா. சிவத்தம்பி இங்ஙனம் சென்றோர்

இன்றைய மைசூர்ப் பகுதிக்குச் சென்று பொன்னைக் கொணர்ந்திருக்க இடமுண்டென்று கூறியுள்ளார்.

இங்ஙனம் தமிழகத்திற்கப்பாலும் சென்று பொருளீட்டி வளமான வாழ்க்கையைதமிழர்கள் வாழ்ந்துள்ளனர். மலையைக் குடைந்தது போன்ற மாளிகையில் நுரையைப் போன்ற மென்மையான படுக்கையில் படுத்துறங்கினர். இவர்களது இல்லங்களில் செல்வம் நிறைந்து காணப்பட்டது என்று அகநானூறு கூறுகின்றது. வெளிநாட்டுவணிகத்தால் பெரும் பொருளீட்டிய வணிகர்கள் புகார், காஞ்சி முதலான நகரங்களில் வாழ்ந்தனர்.

**வடவர் ஆதிக்கம்**

சங்ககாலத்திலேயே ஆரியர்கள் தமிழகத்திற்குள் நுழைந்து தமிழ்ச் சமூகத்தோடு தனித்து வாழ்ந்திருப்பதை அறியமுடிகின்றது. பண்பாட்டால் உணவு உடை கலாச்சார பழக்கவழக்கங்களால் வேறுபட்டிருந்த இவர்கள் தமிழர்களிடையே கலக்காமல் தனிப்பட்ட முறையில் குடியிருப்புகளை அமைத்து வாழ்ந்து வந்துள்ளனர். குடியிருப்புகளைத் தனியாக அமைத்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் தமிழர்களைவிட தாங்கள் உயர்ந்தவர்கள் என்றும் மன்னர்களும் தமக்குப் பணிவாக நடந்துகொண்டால் ஆட்சி நீடிக்கும் வளம் கொழிக்கும் எனப் பொய்மை உரைகளைப் பரப்பி தமிழர்களை தமிழ் மன்னர்களை ஏமாற்றியுள்ளனர் என்பதைக் கீழ்க்காணும் கூற்று மெய்ப்பிக்கின்றது.

> வடப்புலத்திலிருந்து ஏறத்தாழ கி.மு. 5ஆம் நூற்றாண்டு முதல் வைதீக அந்தணர் இங்கு வந்து குடியேறத் தொடங்கினர். சங்ககாலத்தில் இவர்கள் தமிழர் சமூகத்திலிருந்து பிரித்துக் காண இயலாத சிறப்பிடம் பெற்றுவிட்டமை அக்கால இலக்கியங்களால் அறியப்படுகின்றது. இவர்கள் மருத நிலப்பகுதிகளிலேயே விரும்பிக் குடியேறினர்.
>
> அந்தணர் பிற மாந்தர் வாழும் பகுதிக்கு அப்பால் தனியே குடியிருப்பமைத்து வாழ்ந்தனர் எனத் தெரிகிறது. கோழியும் நாயும் நெருங்காததாகவும் பைஞ்சோறு மெழுகிய படிவ நன்னராகவும் செழுங்கன்று யாத்த பந்தலைக் கொண்டதாகவும் அந்தணர் இல்லம் அமைந்திருந்தது. மறைகாப்பாளர் உறைபதி என்னும் தொடர் அந்தணர்

தனியே ஊரில் வாழ்ந்தமையை உணர்த்துகின்றது. இவர்கள் உயர்வகை நெல்லால் சமைத்த சுவைமிக்க உணவை உண்டனர். இவர்கள் சமூகத்தின் உயந்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். நாட்டின் காவலரான மன்னர்கள் இவர்கட்குப் பணிதலைக் கடமையாகக் கொண்டனர். இவர்களின் குடியேற்றத்தால் வடபுலத்தின் பண்பாட்டுக் கூறுகள் பல இங்கு இடம்பெற வாய்ப்பேற்பட்டது.[6]

என்ற கூற்றின்மூலம் சங்ககாலத்தில் வைதீகர்களின் குடியேற்றம் படிப்படியாக நிகழ்ந்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

**சமூக வளர்ச்சி**

ஒரு நாகரிகச் சமுதாயத்திற்குத் தேவையான அடிப்படையான கைத்தொழில்கள் அனைத்தும் பழங்காலத்தில் இருந்துள்ளன. படகுகள் செய்யப்பட்டன, வீடுகளின் தூண்களும் நிலைகளும் அழகாகச் செய்யப்பட்டன. கொல்லருள் பொற்கொல்லரும் இரும்புக்கொல்லரும் என இரு பிரிவினர் இருந்தனர். பொற்கொல்லரின் கட்டளைக்கல் பல இடங்களில் சுட்டப்படுகின்றது.

இரும்பு கொல்லரின் உலை பற்றிய செய்திகள் பலவிடங்களில் இடம்பெறுகின்றன. அவர்கள் பயன்படுத்திய மிதியுலை, சம்மட்டி, குறடு ஆகியவை பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. அன்றாட தேவைக்கான பொருள்களும் போர்க்கருவிகளும் இவர்களாற் செய்யப்பட்டன.

ஊர்தோறும் கொல்லர் இருந்திருக்க இடமுண்டு. தன்னூர்க்கொல்லனை இரக்கும் என்னும் குறிப்பால் கொல்லர் ஊரின் பொதுப்பணியாளராய் விளங்கினர் என உணரமுடிகின்றது.

மட்பாண்டக் கலைஞரைக் குயவன் என்றும் வேட்கோ என்றும் கலஞ்செய்கோ என்றும் குறிப்பர். குயவரின் சூளையும் சாகாடும் அவராற் செய்யப்பட்ட தாழிசைகளும் பற்றிய செய்திகள் அறியக் கிடக்கின்றன. அன்றைய மக்கள் மண்பாண்டங்களையே பயன்படுத்தினர் என்பது அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் ஆடைகள் பற்றி இடம்பெறும் குறிப்புகள் நெசவுக்கலை அன்று அடைந்திருந்த முன்னேற்றத்தை விளக்குகின்றன. பாலாவி, பாம்புரி, மூங்கிலின் உட்டோல், புகை, எண்ணெய் நுரை ஆகியவை மெல்லிய ஆடைக்கு உவமைகளாகக் கூறப்பட்டன. ஆடைக்குக் கரையமைத்தல் வண்ணமூட்டல் ஆகிய கலைகளில் நெசவாளர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர்.

> சங்க இலக்கியங்களால் வெளிப்படுத்தப்படும் தொழிற்றிறம் பல தலைமுறைகளின் வளர்ச்சியைக் குறிப்பது என்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு தொழிற் பிரிவாரும் தனித்தனிக் குடியினராக மதிக்கப்பட்டனர் என்பது அவரவர் தொழிலையும் அடையாகச் சேர்த்துப் புலவர்கள் சிலர் பேசப்படுவது கொண்டே உணராலாம்.
>
> தொழில்களை அடிப்படையாகக் கொண்டே மக்கட் பாகுபாடு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தோன்றிவிட்டது என ந. சஞ்சீவி குறிப்பிட்டுள்ளார். தமிழகத்துக்குத் தொழிற் பிரிவுகளோடு ஆரியரின் சாதி பற்றிய கருத்துகளும் இணைந்தன என்றும் புறநானூற்றிலே காணமுடியும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.
>
> ஒரே தொழிலைத் தொடர்ந்து செய்யும் போக்கினால் பல தொழிற் பிரிவுகள் உருவாக இடமேற்பட்டது. காலஞ் செல்லச் செல்ல இப்பிரிவுகள் எண்ணிக்கையில் பெருகின. சங்ககாலத்திலேயே இத்தொழிற் பிரிவு ஒவ்வொன்றும் மரபுவழிப்பட்ட தனித்தனிப் பிரிவாக அமைந்துவிட்டது என்று தெரிகிறது.[7]

கே.கே. பிள்ளை, ஐ. மகாதேவன் ஆகியோர் இக்கருத்தை உடன்படுகின்றனர்.

பண்டைய தமிழ்ச் சமூகம் தொடக்கத்தில் இனக்குழுச் சமுதாயமாக இருந்து நாளடைவில் வேலைப்பிரிவினை காரணமாகத் தொழில்வழிச் சமூகப் பிரிவுகள் கொண்டதாக மாறிற்று என்றும் அங்ஙனம் மாறிய பின்வரும் பழைய இனக்குழுச் சமூகக் கூறுகள் தொடர்ந்து நீடித்தன என்றும் என். சுப்பிரமணியன் குறிப்பிட்டுள்ளார்.

பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் இயற்கை சூழல்கள் சார்ந்தும் தொழில்களைச் சார்ந்தும் மக்கள் பல்வேறு குடியினராய் வாழ்ந்தனர் என்பதைஅறியமுடிகின்றது. இம்மக்களுள் பல்வேறு வேறுபாடுகள் தோன்றி நிலைபெற்றிருந்தன என்பது தெளிவாக விளங்குகின்றது. செல்வப் பெருக்கத்திற்கு உழவும் வணிகமும் அடிப்படையாக விருந்தன என்பது தெரிகின்றது.

வளமையைப் பாடிய புலவர்கள் வறுமையையும் பாடியுள்ளனர். வறுமையுற்ற பாணர்களின் துயர்நிலையினை அவர்கள் காட்டிச் சென்றுள்ளனர். அதனைக் கொண்டே அன்று பொதுவாக வறுமையாளர் பட்ட துயர்நிலையை அறியமுடிகிறது.

செல்வரின் பிள்ளைகள் சிறுதேர் உருட்டி விளையாடிய பிறகு செவிலியர் மார்பிற் பாலுண்டு உறங்கியுள்ளனர். களைப்படைந்த நிலையில் விவசாயிகளின் பிள்ளைகள் வயல்வெளிகளில் அலைந்துள்ளனர். செல்வர் தன் உயர் மாடத்தில் வாழ வறியவர்கள் நனைந்த கவரைக் கொண்ட பழங்கூரையைக் கொண்ட வீட்டில் வாழ்ந்தனர். செல்வ சிறார்களுக்குப் பொற்கிண்ணத்தில் பாலுணவு ஊட்டப்பட்டது. ஆனால் வறுமையுற்ற தாயோ தன் பிள்ளைக்குப் பாலூட்டவும் முடியாத நிலையில் வருந்தினாள். செல்வக் குழந்தைகள் உணவுண்ண மறுத்துச் செவிலியர் வருந்துமாறு ஓடவும் வறியவர் குழந்தைகள் உணவில்லாது வறுங்கலம் திறந்து பார்த்து அழுதனர். பாலில் செய்த உணவையும் பாகிற் செய்த உணவையும் செல்வர்கள் உண்டபோது வறியவர்கள் உப்பின்றி வெந்த வேளைக்கீரையையும் உண்டு வாழ்ந்தனர். புனிற்று நாய் குரைக்கும் புல்லென் அட்டில் என்று வறியரின் அட்டில் விளக்கப்படுகிறது.

வறியோரின் குடல் உணவின்றியும் எலும்புகள் வெளியில் தோன்றும் வண்ணமும் உடல் இளைத்திருந்தது குறிப்பிடத்தக்கது. அழுக்கேறிய கந்தலுடையை வறியவர்கள் உடுத்திருந்தனர். கல்லிற் குயின்றதுபோல வறுமை நிலைத்திருப்பதாக ஒரு புலவர் குறிப்பிடுகின்றார். வறுமையுற்றோர் விருந்தினரைக் கண்டு ஒளிந்துகொண்ட நிலையும் காணப்படுகின்றது.

பொருளாதர அடிப்படையில் செல்வர், வறியர், என்னும் வேறுபாடு தோன்றியிருந்த வண்ணமே பிறப்பால் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்னும் வேறுபாடும் தோன்றியிருந்தமை புலப்படுகின்றது.

காழியர் என்பார் ஆடை வெளுக்கும் பிரிவினராவர். இக்குடியைச் சார்ந்த பெண்ணை புலைத்தி என்று புலவர் பெருமக்கள் சுட்டியுள்ளனர். பசை விரற் புலைத்தி, வறனில் புலைத்தி என்று காழியர் குடிப்பெண்கள் சுட்டப்படுகின்றனர். புலைத்தி என்னும் சொல் பொதுவாக இழிந்தோள் என்னும் பொருள் கொண்டதாகத் தெரிகின்றது. இடுகாட்டிலிருந்து இறந்தோருக்குச் செய்யும் சில சங்குகளைச் செய்தோரும் புலையர் என்றே சுட்டப்பட்டனர். பாணனையும் புலையன்.[8]

எனச் சுட்டும் மரபு சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

சங்க சமூகத்தில் மேனிலையில் அந்தணர், கீழ் நிலையிற் புலையர் குடியினர் இருந்தனர் என்று அறியப்பட்டாலும் இவ்விரு மார்க்கத்தாருக்கு இடைப்பட்ட பிரி மக்களைக் கணித்துக் கூற எச்சான்றும் கிடைக்கவில்லை.

அன்றைய சமூகத்தில் அந்தணர், அரசர், வணிகர், நிலக்கிழார் ஆகிய நான்கு பிரிவினரும் ஏனையோரைவிடச் சமூகத்தில் மதிக்கப்பட்டோராக விளங்கினர் எனக் கொள்ள இடமிருந்தாலும் பிற தொழிற் பிரிவினர்க்கு இருந்த சமூக நிலை யாதெனக் கூறமுடியவில்லை. தச்சர், கொல்லர், குயவர், முதலியோர் கல்வி கற்று புலவர்களாய் விளங்கியுள்ளமையை நோக்க இவர்கள் இழிந்தோராகக் கருதப்படவில்லை என்பது தெரிகிறது.

இங்குக் கூறப்பட்ட பல்வேறு பிரிவு மாந்தர்க்குள் எத்தகு உறவு நிலவிற்று எனக் காண்பது இன்றியமையாதது. திணைச் செய்யுட்களில் ஐந்து திணைமாந்தரும் தனித்தனியாகப் பண்பாடுகள் கொண்ட தனித்தனிக் குழுவினராக விளக்கப்பட்டாலும் அவர்கள் ஒருவர் மற்றவரோடு எத்தகைய உறவுமின்றித் தனித்துக் கிடக்கவில்லை. அவர்கள் ஒருவரோடொருவர் பழகவும் ஒருவர் மற்றவரைப் புரிந்துகொள்ளவும் வாய்ப்புகள் இருந்தன.

வேடுவன் தான் கொணர்ந்த மான் தசையையும் முல்லை வாழ்வினராகிய ஆயர் தாம் கொணர்ந்த தயிரையும் மருத நிலத்தூர்களில் விற்றுவிட்டு

நெல்லைப் பெற்றுச் சென்றனர். மருத நிலத்து உமணர் நெய்தல் நிலத்து உப்பினுக்கு ஈடாக நெல்லைக் கொடுத்தனர். கடற்கரையிலிருந்து புறப்பட்டு மலைநாடு வரையில் செல்வோராக உமணர் உமணர் அறியப்பட்டனர்.

> சங்ககாலச் சமூகத்தின் தன்மை பற்றிக் கூறும் ந. சஞ்சீவி பண்டைத் தமிழ்நாட்டுச் சமூகத் தலைவர், மன்னர், புலவர் ஆகியோர் விரிந்த மனமுடையோர் என்றும் சங்ககாலம் மக்கள் உண்மைக்கும் மேலான தத்துவமும் மனித நேயத்திற்கு மேலான சமயமும் இல்லையென உணர்ந்தினரென்றும் இதனால் சமூகத்தில் பூசல்கள் தோன்றவில்லை.[9]

என்றும் குறிப்பிட்டுள்ளார். இதுவரை பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் பொதுவான அமைப்பும் பல்வேறு மாந்தரிடையே நிலவிய உறவின் தன்மை பற்றியும் விளக்கப்பட்டது.

**விளிம்பு நிலையினர்**

தாழ்த்தப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்களும் தேசத்தால் கைவிடப்பட்ட அகதிகளும் விளிம்புநிலை மக்களும் காலங்காலமாகவே இலக்கியத்தில் பதிவுசெய்யப்படாமல் புறந்தள்ளப்பட்டனர். ஆனால் அவர்களின் வாழ்க்கைக் கலித்தொகைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளது. இத்தகைய விளிம்புநிலை மக்கள் யார்? என்பது குறித்து பேரா. மு. குருவம்மாள் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

சமுதாயத்தில் பொது வெளிக்கு அப்பாற்பட்ட சிறுபான்மை மக்களும் சமூகத்தால் புறக்கணிக்கப்பட்ட சிறைமீண்டோரும் சமூக விரோதிகளும் குடும்பத்தால் விலக்கப்பட்ட தொற்று நோயாளிகளும் திருநங்கைகளும் தேசத்தால் கைவிடப்பட்ட அகதிகளும் விளிம்பு நிலையினர் சமூகத்தில் பதியெழு அறியா மூதூர் மக்கள் நிலைகுடிகள். நிலைகுடிகளாகிய மக்கள் சமுதாயத்திற்கு உதவும் வகையில் தமது பங்காற்றும் கைவினைஞர்கள், கைவினைக் கலைஞர்கள் இயற்கை மருத்துவர்கள், நிமித்தகர், பண்டமாற்று வணிகர் ஆகிய அலைகுடிகள் விளிம்பு நிலையினர். கலைக்காக என்பது தனி உடமை கருத்து. கலைகள் தங்களுக்காக என்பது ஆட்சியாளர் புரிதல். கலைகள் செல்வர்களின் பொழுதுபோக்குச் சின்னங்கள். ஆடம்பர வாழ்க்கையின் அடையாளம் என்பது முதலாளித்துவச் சிந்தனை. கலை மக்களுக்காக என்கிற

மார்க்சிய சிந்தனை ஓங்கி சமூகப் பங்களிப்பையும் சமூக விழிப்புணர்வையும் கலைஞர்கள் நிகழ்த்திய போதும் தொழில் முறையில் நாடோடியாக வாழ்க்கை நடத்துகின்றமையால் சமூகப் பொருளாதார தற்சார்பு அற்றவர்களாக நிலைகுடிகளைச் சார்ந்து வாழும் அலைகுடிகளாகியமையால் விளிம்பு நிலையினர்.

சமூக வெளியில் அங்கீகரிக்கப்படாத குற்றமிழைப்போர் தண்டனை பெற்றோர் கொள்ளையர், திருடர், சோம்பேறிகள், நாகரிகமற்றவர்களும் அலைகுடிகள் என்று சமூகவியலார் பட்டியலிடுகின்றனர். இந்தியாவின் பல வண்ணப் பண்பாட்டுத் தொகுதிக்குள், கழைக்கூத்தாடிகள், கதைப்பாடகர்கள் வருகின்றனர். இவர்கள் சமூக அரசியல் பண்பாட்டு ரீதியாக அங்கீகாரம் மறுக்கப்பட்டு தகவல் தொடர்பு, உணவு, உடை, உறையுள், கல்வி, ஓட்டுரிமை இன்றி எந்த அரசியல் அதிகாரக் கட்டமைப்பிற்குள்ளும் இடம்பெறாத அடித்தட்டு மக்கள். தங்களுக்கென்று போராட்டச் சங்கங்களோ அமைப்புகளோ இயக்கங்களோ இல்லாத அதிவிளிம்பு நிலையினர் என அறியப்படுகின்றது. இதனைப் பேராசிரியர் குருவம்மாள்,

> அக இலக்கியங்களில் ஐந்திணை எனப்படும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நிலங்களின் குறவர், காடர், உழவர், பரதவர், ஆறலைக் கள்வர் என்ற மண்ணின் மைந்தர்கள் அரசின் சாதிப் பட்டியலில் பழங்குடியினர் (st) தாழ்த்தப்பட்டோர் (sc) என்று குறிக்கப்பட்டுள்ளனர். தலித்துகள் எனப்படும் தாழ்த்தப்பட்டோர் சமூக மாற்றங்களின் பயனாக தங்களுக்கென்று சங்கங்கள், அமைப்புகள், இயக்கங்களை அமைத்துப் போராடி தங்களுக்கான உரிமைகளை நிலைநாட்டி வருகின்றமையாலும் தங்களுக்க்கென்று சமூகத்தில் ஒருநிலைப் படியை கொண்டுள்ளமையாலும் பழங்குடியினரைக் குறிக்கும் விளிம்பு நிலையிலிருந்து வேறுபடுகின்றனர். அதிவிளிம்பு நிலையினராகிய பாலியல் பணியாளர்களும் திருநங்கைகளும் மாற்றுத்திறனாளிகளும்[10]

உரிமைபெற சங்கம் அமைத்து வருகின்றமையை ஆய்வாளர்கள் கவனத்தில் கொண்டு ஆய்வுகளை நிகழ்த்திக் கொண்டுள்ளனர்.

**கலித்தொகையில் விளிம்பு நிலையினர்**

கலித்தொகையில் நிலங்களின் இயல்புக்கு ஏற்ப விளிம்புநிலையினர், பொதுவகை விளிம்புநிலையினர் என இருவகைப்படுத்தலாம்.

நிலங்களின் இயல்புக்கேற்ற விளிம்புநிலையினராக குறிஞ்சி நிலத்தில் குறவர் – கொடிச்சியர், முல்லை நிலத்தில் புலைத்தி, மருத நிலத்தில் உழத்தி – பரத்தை, நெய்தல் நிலத்தில் பரதவர், பாலை நிலத்தில் ஆறலைக் கள்வர் என்று இலக்கியங்கள் பதிவுசெய்கின்றன.

எவ்வகை நிலமாயினும் மக்களின் மனநலம் காக்கும் நிமித்தகர், மக்களின் உடல் நலம் காக்கும் மருத்துவர் இயற்கை சார்ந்த வாழ்வினர். இவர்கள் நிலைகுடிகளைச் சார்ந்த அலைகுடிகள். ஐவகை நிலங்களிலும் பயணிக்க உதவும் தேரைத் தயாரிக்கும் வினைஞர், தேரைச் செலுத்தும் பாகனாகிய அடியோர் நிலங்களுக்குரிய விலங்குகளைப் பயிற்சிக்குள்ளாக்கிப் பயன்படுத்த உதவுகின்ற வினைவலர். உண்கலம், அணிகலம் செய்யும் தங்கம், வெள்ளி, உலோகத் தொழிலாளர்கள், பெண்கள், குழந்தைகளுக்கான பொம்மைகள், ஊஞ்சல் தயாரிப்போர், பச்சைகுத்துவோர், ஒப்பனைக் கலைஞர், அரசுக்குரிய முரசு, அனைவருக்கும் கட்டில் தயாரிக்கும் மரத் தொழிலாளர்கள் ஆகிய ஐவகை நிலங்களுக்கும் உரிய பொதுவகை விளிம்புநிலையினர்.

**வாழ்வியல் அடையாளம்**

கலித்தொகையில் ‘சேரிக் கிழவன் மகளே யான்’[11] என்ற ஒரு முல்லைத் தலைவி தன்நிலை விளக்கம் செய்வதன் வழி ‘நீ செய்த அருளின்மை சேரியும் மறைத்தாள்’[12] ‘நம்சேரியின் போகா முடமுதிர் பார்ப்பானை’ என்று குறிஞ்சித் தோழி கூறுவதன் வழி குறிஞ்சி முல்லை நில மக்கள் தம் இருப்பிடத்தை சேரி என்று குறிப்பதை அறியலாம். பரத்தையர் இருப்பிடத்தை சேரி என்று மருத நிலத்தவர் குறிப்பிடுவர் என்பது

சேரியார் சென்று நீ சேர்ந்த இல் வினையினன்[13]

சேரி அரிமதன் உண்கண்ணார்[14]

என்ற தொடர்களின்வழி புலனாகின்றது.

*சேய்நின்று நாம் கொணர்ந்த பாணன் சிதைந்து ஆங்கே*

*வாய் ஓடி ஏனாதிப் பாடியம் என்றறா*[15]

*என்ற தொடரின் வழி ஏனாதி என்ற பட்டம் பெற்றவனால் உருவாக்கப்பட்ட பரத்தையர் சேரியைக் குறிப்பது ஏனாதிப்பாடியம் என்று கலித்தொகை பதிவுசெய்கின்றது.*

***சிறுபான்மையினர்/ பழங்குடியினர் அடையாளம்***

*குறிஞ்சி நிலம் சார்ந்த பூர்வ குடிகளைச் சிறுபான்மை இனத்தவர் என்றும் பழங்குடிகள் என்றும் சமூகவியல் குறிப்பிடுகின்றமையால் குறவர் என்னும் மலைவாழ் மக்களாகிய நிலைகுடிகள் பழங்குடிகளாகினர். குறிஞ்சிக் கலியில்,*

*ஏனல் இதணத்து அகிற்புகை உண்டு இயங்கும்*

*வான் ஊர் மதியம் வரை சேரின் அவ்வரை*

*தேனின் இறால் என ஏணி இழைத்திருக்கும்*

*காள் அகல் நாடன்*[16]

*என்று பதிவுசெய்கிறது.*

*நெய்தல் நிலத்து துளை அம்பி ஊர்வானும் விளிம்பு நிலை எய்தினான். கலித்தொகையில் சிறுபான்மை இனத்தவராக வலையர், புலையர், கள்வர், கொடிச்சியர் இடம்பெற்றுள்ளனர். மேலும் இரண்டு தொழில் முறைகளில் 'புலைத்தி' சுட்டப்படுகிறாள். ஊரவர் ஆடை கொண்டு ஒலிக்கும் புலைத்தி என்றும் மாதர் புலைத்தி விலையாகச் செய்தது ஓர் போழின் புனைந்த வரிப்புட்டில் எனவும் கலித்தொகை பதிவுசெய்கின்றது.*

***மருத்துவர்***

*கலித்தொகையில் இடம்பெறும் மருந்து குறித்த பதிவுகளின் வழி மருத்துவரை உய்த்துணர ஏதுவாகும் தொடர்கள்.*

*அருந்துயர் ஆரஞர் தீர்க்கும் மருந்து, பகை இல் நோய், நோய் தீர்க்கும் மருந்து, மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம், நோய் நாம் தணிக்கும் மருந்து, மருந்தின்றின் மன்னவன் சீறின், நீ உற்ற நோய்க்கு மருந்து, வருத்த நோய்*

*செய்திறப்பின் அல்லால் மருந்து அல்லள், இடுதோள் மருந்தோ, மருந்து அறை கோடலின் கொடிதே, இன்னுயிர் போதரும் மருத்துவர், உள் இடும்பை தணிக்கும் மருந்து, ஏதிலார் எல்லாரும் தேற்றார் மருந்து என்பனவாகும்.*

***பாணன்***

*கலித்தொகையில் அடியோர் வகைப்பாட்டில் அமையும் காமத்தரகராகச் செயல்படும் அலைகுடியாகிய பாணன் குறித்த பதிவுகளை உணர்த்தும் தொடர்கள்:*

*யாழொடும் எடுத்துச் சூழ்பல உற்ற **பாணன்**..*
*யாழ் தழீஇய கல்லா வாய்ப் **பாணன்***
*பண்ணினால் களிப்பிக்கும் **பாணன்***
*புகழ் பல பாடும் **பாணன்***
*நோய் சேர்ந்த திறம் பண்ணி **நின்பாணன்***
*சேய் நின்று நாம் கொணர்ந்த **பாணன்***
*பொய் போர்த்துப் **பாண்** தலையிட்ட பலவல் புலையன்*
*புதுவன ஈகை வளம் பாடி காலின்*
*பிரியாக் கவிகைப் **புலையன்** தன் யாழின்*
*ஏதில் **பெரும்பாணன்** தூது ஆட*
***பாணன்** புணையாய்ப் புக்கு*
*பொலிக எனப் புகுந்த நின் **புலையன்**[17]*

*என்பனவாகும்.*

***பாகன்***

*கலித்தொகையில் காமத்தரகராய்ச் செயல்படும் நிலைகுடி சார்ந்த அலைகுடியாகிய பாகனைக் குறிக்கும் தொடர்கள்.*

*வேட்டார் திறத்து விரும்பிய நின் பாகன்,*
*கடுந்திண் தேர் பூட்டு விடாஅ நிறுத்து*
*தேரோடும் தேற்றிய பாகன் வந்தீயான் கொல்,*

*பாகனைத் தேரோடும் விட்டு அவன் வரல் நோக்கி,*

*தேரோடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ*[18]

*என்பனவாகும்.*

***நிமித்தகன்***

*நெறி அறி செறி குறி புரிவு திரிபு அறியா அறிவன்*[19] *என்று நிமித்தகனைக் கலித்தொகை பதிவுசெய்கின்றது.*

**கருவி உருவாக்கும் வினைவலர்**

*கலித்தொகையில் மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான பல கருவிகளையும் உருவாக்கித் தரும் பலரும் இருந்துள்ளனர் என்பதை கலித்தொகைப் பாடல்கள் தெளிவுறக் காட்டுகின்றன.*

*கலித்தொகையில் இடம்பெறும் கருவிகளின் வாயிலாக அவற்றை உருவாக்கும் மக்களை அறிந்துகொள்ளும் வகையில் அமைந்த சொற்றொடர்கள்:*

*"கடுவினைக் கவணையில் கல் – (கவட்டை) புலம்கூடி கவணை*

*கடுமா கடவுறுங் கோல் – (தார்க்குச்சி/ சாட்டை) ஆய்கோல்*

*வல்லவன் தைஇய வாக்கமை கடுவிசைவில், கைபுனை வல்வில் சுற்றமை வில்*

*சுரை அம்பு புனைமாண் மரீஇய அம்பு கழுவொடு சுடுபடை சுருக்கிய தோல் வெள்வேல்,*

*ஒளிறுவேல் நிலவுவேல் கொடுமிடல் நாஞ்சில் உழு நாஞ்சில்"*[20]

*போன்ற பாடல் அடிகளின்மூலம் அதனைத் தெரிந்துகொள்ளமுடிகிறது.*

*கலித்தொகையில் இடம்பெறும் இசைக்கருவிகளின் வழி அவற்றை உருவாக்குபவர்களை, ஏழ்புணர் இன்னிசை, யாழ், யாழிசை கொண்ட இனவண்டு வல்லவர் யாழ், நரம்பின் தீங்குரல் நிறுக்கும் குழல் சிற வெதிர்ங்குரல் கோவலர் தீங்குழல்என்பனவாகும்.*

கலித்தொகையில் இடம்பெறும் கட்டில் – கதவு – முரசம் வழி அவற்றை உருவாக்குபவர்கள்,

கட்டில்: மாசில் வண் சேக்கை படை அமை சேக்கை இலங்கு மாண் அவிர் தூவி அன்ன மென் சேக்கை துலங்கு மான் மேல் ஊர்தி மெல்லணை – துணை புணர் அன்னத்தின் தூவி மெல்லணை இணைபட நிவந்த நீலமென் சேக்கை.

கதவு: பொருந்து நோன் கதவு போரார் கதவம் நல்நகர் வாயில் கதவம் அயில் திணிநெடுங் கதவு.

முரசு: ஏமம் என்று இரங்கும் எறிமுரசம் யாண்டோரும் தொழூதேத்தும் இரங்கிசை முரசம் முரசு மூன்றோடு ஆள்பவர் என்பனவாகும்.

**ஆடை தயாரிப்பவர்கள்**

கலித்தொகையில் இடம்பெறும் ஆடைகளின் குறிப்புகளைக் கொண்டு அவற்றை உருவாக்கும் கைவினைக் கலைஞர்களை உய்த்துணர் உதவும் தொடர்கள்:

கலிங்கத்துள் ஒடுங்கிய மாதர், சில பூங் கலிங்கத்தாள்,ஒன்றன் கூறாடை நீல நீர் ஆடை, ஈர்ந்தண் ஆடை, அம்துவர் ஆடை, விளங்குவெண் துகில், கருந்துவர் ஆடை, நிலம் தாழ்ந்த பூங்கரை நீலம், அடிதாழ் கலிங்கம் என்பனவாகும்.

**விளையாட்டுப் பொருள்களை உற்பத்தி செய்பவர்**

கலித்தொகையில் இடம்பெறும் ஆயமோடு ஆடும் ஆட்டத்துக்குரிய பொருட்களின் பதிவின்வழி அவற்றை உருவாக்கும் கைவினைக் கலைஞர்களை உய்த்துணர ஏதுவாகும் தொடர்கள்:

புனைவினை உருள்கலன், கவளம் அறியா கைபுனை வேழம், செல்வுறு திண் தேர், வல்லவன் தைஇய பாவை, உப்பு இயல் பாவை, பொறி செய் புனை பாவை வரிப்பந்து, எறிபந்து, சுவர்வரி வினை, வாய்த்த தூதையும் பாவையும் பௌவ நீர்ச்சாய்கொழுதிப் பாவை, தாய் உயிர் பெய்த பாவை, சிறு முத்தனைப் பேணி சிறு பெருமணற் பெண்ணைப் பிணிர்த் தோட்டுப் பைங்குரும்பைக்

*குடாய்க் கொடி பின்னல் வாங்கி வளர்தரும் பெரு மணித் திண் தேர் என்பனவாகும்.*

*மேலும் ஆண்களுக்குரிய (சூதாட்டப்பலகை) வல்லுப் பலகை, பெண்களுக்கான ஊசல், 'தாழாது உறைக்கும் தன் தாழை வீழ் ஊசல்'' பதிவாகியுள்ளன.*

***ஒப்பனை/ பச்சை குத்துதல்/ பூ கட்டுதல் ஆகிய கலைகளைச் செய்வோர்***

*கலித்தொகையில் இடம்பெற்றுள்ள ஒப்பனைக் கலைஞர்கள், பச்சை குத்துதல், பூ கட்டுவோர் குறித்த பதிவுகளின்வழி இந்தக் கலைஞர்களை உய்த்துணர உதவும் தொடர்கள்:*

*ஒப்பனை: நெய் இடை நீவி மணி ஒளிவிட்டன்ன ஐவகை எஃகிடை தொட்ட கார் கவின் பெற்ற ஐம்பால் வாள் இடைப்படுத்த வயங்கீர் ஓதி*

*பச்சைகுத்துதல்: வெதிர் உழக்கு நாழியால் சேதிகை குத்தி*

*பூ கட்டுதல்: அரி நீர் அவிழ் நீலம் அல்லி அனிச்சம் புரி நெகிழ் முல்லை நறவொடு அமைந்தேரி மலர்க் கண்ணி என்பனவாகும்.*

*கலித்தொகையில் அணிமணிகளை உருவாக்கும் வினைஞர்களைக் குறித்துப் பின்வரும் தொடர்கள் வருகின்றன.*

*அணிநுதல் வகை பெறச் செரீஇய வயந்தகம், அரிபெய்த அழகமை புனைவினை ஆய் சிலம்பு, பொன்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை, பொலம்புனை புகழ் நேமி.*

*தளை நெகிழ் பிணி நிவத்த பாசடைத் தாமரை*

*முளை நிமிர்ந்தவை போலும் முத்துக்கோல் அவிர் தொடி*

*தோள் அரிச் சிலம்பு: மின் ஒளிர் அவிர் அறல்*

*இடைபோழும் பெயலே போல் போன் அகை*

*தகை வகிர் வகை நெறி இலங்கு ஏர் எல்வளை சுடரிழாய்*[22]

*என்பனவாகும்.*

***மகளிருக்கான அணிகலன்கள்***

*புல்லிகை, உத்தி, துஞ்சு, மேகலை, முக்காழ் சதங்கை, சிலம்பு, நீலமணிக்கடிகை ஆகியன மகளிருக்கான அணிகலன்கள் ஆகும்.*

***குதிரைக்கான அணிகள்***

*வல்லிகை, துஞ்சு, கன்ன சாமரை, கண்டிகை ஆகியன குதிரைகளுக்கான அணிகலன்கள் ஆகும்.*

***குழந்தைக்கான அணிகள்***

*குழந்தைகளுக்கான அணிகலன்கள் குறித்து கலித்தொகை பின்வருமாறு சுட்டுகின்றது.*

*காலவை, சுடுபொன் வளைஇய ஈர் அமை கற்றொடு*
*போடி அறழ் புறம் தந்த செய்வுறு கிண்கிணி*
*உடுத்தவை, கைவினைப் பொலிந்த காசுஅமை பொலங்காழ் மேல்*[23]

*போன்றனவாகும்.*

*கலித்தொகையில் இடம்பெற்றுள்ள அலங்கரிக்கப்பட்ட தேரை உருவாக்கும் வினைஞரை உய்த்துணர உதவும் தொடர்கள்:*

*நெடுந்திண் தேர் மணிக்குரல், புரி உளைக் கவிமான் தேர், பாய் பரிக் கடுந்திண் தேர், இழை அணி கொடித் திண் தேர், பூட்டு மான் திண் தேர், தேர் பூண்ட நெடுநல்மான் தெள்மணி என்பனவாகும்.*

*மக்கள் பயன்பாட்டில் பால் கிண்ணம், தங்கக் கிண்ணம், வெள்ளிக் கிண்ணம், தீம்பால் உண்பவர் கொள்கலன், சேடியல் வள்ளம், பொற்சிரகம் என்ற தொடர்கள் கலித்தொகையில் காணப்படுகின்றன.*

***அரசியல்***

*குடிமக்களுக்கு குறையுண்டாகமல் பாதுகாக்கவேண்டும்.இத்தகைய ஆட்சியே சிறந்த அரசாட்சி.இந்த நல்லாட்சியை எவரும் அசைத்து அழித்துவிடமுடியாது. இத்தகைய நல்லாட்சி நடைபெறும் நாட்டில்தான் அமைதியும் இன்பமும் குடிகொண்டிருக்கும். செல்வம் கொழித்திருக்கும்*

*எல்லா மக்களும் வறுமையின்றி வாழ்க்கை நடத்தி வந்தனர். பண்டைத் தமிழர்கள் இந்த உண்மையை அறிந்திருந்ததால் அவர்கள் அரசியலிலே கண்ணும் கருத்துமாக இருந்தனர். சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாவற்றிலும் இக்கருத்தைக் காணலாம்.*

*கலித்தொகைப் பாடல்கள் பலவற்றிலும் செங்கோல் ஆட்சி சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளதுடன் கொடுங்கோலாட்சியின் கொடுமை விளக்கப்படுகிறது.*

*அலவுற்றக் குடிகூவ, ஆறு இன்றிப் பொருள் வெஃகிக்*

*கொலை அஞ்சா வினைவரால், கோல் கொடியவன் நிழல்*

*உலகுபோல், உலறிய உயர் மர வெஞ்சுரம்*[24]

*குடிமக்கள் துன்புற்று அலறும்படி-அறமற்ற வழியிலே அவர்களிடம் பொருளை விரும்பி-கொலைக்கஞ்சாமல் ஆளும் அதிகாரிகளைக் கொண்டு-கொடுங்கோலாட்சியும் புரியும் மன்னவனுடைய நாடு பாழாகும் என்ற கருத்து இதன்மூலம் பெறப்படுகின்றது.*

*குடி மக்களிடம், அளவுக்குமீறி வரிவாங்குகின்ற அறம் கொல்லும். அதிகார வர்க்கத்தாலும், அவர்களுக்கு ஆதரவளிக்கும் அரசாங்கத் தலைவரானாலும் நாடு பாழாகும் என்பதை இதனால் அறியலாம்.*

*முறை தளர்த்த மன்னவன் கீழ்க் குடிபோலக் கலங்குபு (ப34) நீதி முறைகளிலே சோர்வடைந்த மன்னவன் ஆட்சியிலே வாழ்கின்ற குடிகளைப் போலக் கலக்கமடைந்து''*

*நீதியற்ற ஆட்சியிலே வாழுங் குடிகளுக்கு அமைதியில்லை அல்லற்படுவார்கள்: இதனை இவ்வரி விளக்குகின்றது.*

*தன்னுயிர் போலத் தழீஇ உலகத்து*
*மன்னுயிர் காக்கும் மன்னன்*
*தன்னுயிரைப் போலவே தழீஇ உலகத்து*
*மன்னுயிர் காக்கும் மன்னன்*[25]

*தன்னுயிரைப் போலவே உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் எண்ணிப் பாதுகாக்கின்ற மன்னவன்''*

இதனால் ஒரு அரசனுடைய முதற்கடமை இன்னதென்று கூறப்பட்டது. தனது நாட்டில் வாழும் உயிர்களையெல்லாம் தன்னுயிரைப் போலவே எண்ணிப் பாதுகாப்பவனே மக்களால் மதிக்கப்படும் மன்னவன், அரசியல் தலைவன்என்ற உண்மை விளக்கப்பட்டது.

**செல்வத்தின் சிறப்பு**

வாழ்க்கையை இன்பமடையச் செல்வமே ஏற்றகருவி நல்லறங்களைச் செய்வதற்கும் செல்வமே சிறந்த துணையாக உள்ளது. ஆதலால் பொருளீட்டும் முயற்சியிலே ஒவ்வொரு ஆடவனும் ஈடுபடவேண்டும் என்பது பழந்தமிழர் கொள்கையாகவும்இருந்துள்ளது.

*அரிதாய அறன் எய்தி அருளியோர்க் களித்தலும்*
*பெரியதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்*
*புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும்.*[26]

பொருளோ சிறந்த அறத்தை அடையச் செய்யும்.அருளுடையோர்க்கு அளிக்கும்படி செய்யும்; தனது பெரிய பகைவர்களை வென்று முறியடிக்கச் செய்யும்.தனது எதிரிகளை அழிக்கச் செய்யும்; அன்பு நிறைந்த காதலுடன் இல்லற வாழ்க்கையிலே இன்புற்று வாழவும் செய்யும்'' செல்வமுடையவரே இவ்வுலகிலே சிறந்து வாழ்வார் செல்வமற்றவர்களின் வாழ்விலே இன்பமில்லை; அவர்களால் நல்லறங்களை நடத்தமுடியாது; என்பதை இதனால் காணலாம். பொருளாதர உயர்வு தாழ்வுள்ள சமுதாயத்தில் இத்தகைய உணர்ச்சி மக்கள் மனத்திலே படிந்திருக்க வேண்டும்.அப்பொழுதுதான் மக்கள் முன்னேற முடியும்.

**செல்வ நிலையாமை**

செல்வத்திற்குக் காரணம் முயற்சி மட்டு அன்று. பழவினையும் செல்வம் சேருவதற்குக் காரணமாகும். இக் கருத்தும் பழந்தமிழர்களிடம் குடிகொண்டிருந்தது. செல்வம் நிலையுள்ளது; அழியாதது என்று நம்பி அதைச் சேர்ப்பதிலே காலங்கடத்துவது அறியாமை. செல்வம் நிலையற்றது; வரும்; போகும்; ஆதலால் செல்வமுள்ளபோதே நல்ல செயல்களைச் செய்யவேண்டும். இதுவும் பழந்தமிழர் கொள்கை, இதை வலியுறுத்தவே

செல்வம் நிலை அற்றது என்பதைப் பற்றிப் பல நூல்களிலும் பாடியிருக்கின்றனர்.

**கூடா நட்பு**

தன்னலம் ஒன்றையே குறிக்கொண்டு நண்பினராக நடிப்பவர்கள் உண்மையான நண்பர்கள் அல்லர். அவர்கள் தங்களுக்கு நன்மை கிடைக்கும் வரையில்தான் நண்பர்களாக நடிப்பர். தன்னலம் நிறைவேறாதபோது நட்பைக் கைவிடுவர். இத்தகையவர்களிடம் நட்புக்கொள்ளுதல்கூடாது. நண்பருக்கு உதவி செய்தல் தன் கடமை என்று நினைக்கின்றவர்களுடன் ஏற்படும் தொடர்புதான் இடையிலே அறுந்து போகாது; என்றும் பிணைந்து நிற்கும். நண்பர் இருவரும் இத்தகைய எண்ணமுடையவர்களாயிருந்தால் அவர்களுடைய நட்புக்கு எப்போதும் முடிவேயில்லை.

சிறப்புசெய்து உழையராப் புகழ்புஏற்றி மற்றவர்

புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்[27]

நண்பர் தமது பக்கத்திலே இருக்கும்பொழுது அவரைக் கொண்டாடுவார்கள். புகழ்ந்து போற்றுவார்கள். அவர்கள் அப்பாற் போனபின் அவர்களைப் பழித்துப் பேசுவார்கள்.

ஒருவர் செல்வம் உள்ளவராக இருக்கும் காலத்தில் அவருடன் ஒன்றாக உறைந்திருப்பார்கள். அவர்களுடைய செல்வத்தைச் சுரண்டி தின்பார்கள். அவர் வளமிழந்து வறுமையுற்ற காலத்து ஒருசிறிதும் உதவி செய்யமாட்டார்கள். இவர்கள் அறிவிலிகள்.

ஒன்றுபட்ட நண்பராக இருக்கும்பொழுது நண்பர்களுடைய இரகசியங்களையெல்லாம் தெரிந்துகொள்வார்கள். நட்பு முறிந்து அவர்களை விட்டுப் பிரிந்துபின் தாம் அறிந்த இரகசியங்களைப் பிறரிடம் வெளியிடுவார்கள். இவர்கள் பெருந்தன்மையற்றவர்கள்.

புறங்கூறுவோன், தன்னலமே குறிக்கோளாக உடையவன், இரகசியத்தை வெளியிடுவோன், இவர்கள் நண்பர்களாகக் கொள்ளுவதற்கு தகுதியற்றவர்கள்.

அவர்களுடன் கொள்ளும் நட்பு கூடா நட்பாகும். இக்கருத்தினை கலித்தொகை 25ஆவது பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

**மனசாட்சி**

குற்றமுளார் நெஞ்சு குறுகுறுக்கும் என்பது அனைவரும் அறிந்த பழமொழி. வேண்டுமென்றே குற்றமிழைப்பவர்களின் உள்ளத்திலே ஒருசிறிதும் அமைதி இருக்காது. நேர்மையின்றித் தாம் செய்த குற்றத்தை நினைத்து நினைத்து நெஞ்சம் நைவார்கள். சந்தர்ப்ப வாதத்தால் மனமறிந்து செய்த குற்றத்திற்கு பரிகாரம் தேடிக் கொண்டாலே ஒழிய அவர்கள் மனதிலே அமைதி ஏற்படாது. இதனை,

> கண்டவர் இல்லென உலகத்துள் உணராதார்
> தங்காது தகைவின்றித் தாம்செய்யும் வினைகளுள்
> நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்
> நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை.[28]

அறிவற்றவர்கள் தாம் செய்யும் தீங்குகளைக் கண்டவர்கள் உலகத்திலே இல்லையென்று கருதி எவ்வளவுதான் பிறர் அறியாமல் மறைத்தாலும் அவைகள் மறைந்துவிடாது. அக்கொடுமைகளை அவர்கள் நினைக்கும்போது அவர்கள் மனம் குழம்பும். அவர்களுடைய கொடுமையை மெய்ப்பிக்க அவர்களுடைய நெஞ்சத்தைக் காட்டிலும் நெருங்கிய சாட்சி வேறு ஒன்றுமில்லை.

பிறர் அறியாமல் ஒருவர் குற்றம் செய்யலாம். ஆனால் அவர் மனம் அவர் செய்த குற்றத்தை மறக்காது. ஆதலால் அவருக்கு மனவேதனை தோன்றுவது இயற்கை.

**கொடுக்கல் வாங்கல்**

பண்டைக் காலத்தில் பணம் வட்டிக்குக் கொடுக்கும் வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை. பொருள் வேண்டியவர்கள் தமக்கு வேண்டிய பொருளை உள்ளவர்களிடம் கடனாக வாங்கிக் கொள்வார்கள். பிறகு கொடுத்துவிடுவார்கள். இப்படி வாங்கும் கடனுக்குத் தனிசு என்று பெயர்.

கடன் வாங்கும்போது முகமலர்ச்சியுடன் வாங்குவார்கள். அதனைத் திருப்பிக் கொடுக்கும்பொழுது வாங்கும்போதிருந்த முகமலர்ச்சியை அவர்களிடம் காணமுடியாது. வாங்கும்போது மகிழ்ச்சியடைவதும் கொடுக்கும்போது வருத்தமடைவதும் மக்கள் இயற்கையென்றுதான் கொள்ளவேண்டும். மிகவும் நேர்மையாக நடந்துகொண்ட பண்டைக் கால மக்களிடமும் இக்குணம் இருந்ததாகத்தான் தெரிகின்றது.

உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும் தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும் வேறாகுதல்
பண்டும் இவ் வுலகத்து இயற்கை அஃது இன்றும்
புதுவது அன்றே[29]

உண்பதற்காக வாங்கும் கடனைப் பெற முறையோடு கூறி இரக்கும்போது காணப்படும் முகமும் தாம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது காணப்படும் முகமும் வேறு வேறாகக் காணப்படுதல் பண்டைக் காலத்திலும் இயல்பாகும். இந்த இயல்பு இன்றும் உண்டு. இது புதியதன்று. பழமை தொட்டு தொடர்ந்தே வருகின்றது.

**கற்புடை மகளிர்**

பெண்களின் கற்பு பற்றிய செய்தி கலித்தொகைப் பாடல் பலவற்றிலும் காணமுடிகிறது. சங்க இலக்கியங்களிலே பெண்களுக்கு மட்டும்தான் கற்பு வலியுறுத்தப்படுகின்றது. பெண்கள் மட்டும் தான் ஆடவர்களை மணம் புரிந்துகொண்ட மனைவிமார்கள் மட்டும்தான் – கட்டுப்பட்டு வாழவேண்டும்; கற்புடையவர்களாய் வாழவேண்டும் என்று கருதினர். ஆண்களுக்கு அத்தகைய கட்டுப்பாடும் இல்லை. அவர்கள் மனம்போனபடி திரியலாம். ஆண்கள் பல பெண்களை மணந்தனர். பரத்தையர்களுடனும் கூடிக் களித்தனர் என்பதையும் பல சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகிறது.

வடமீன்போல் தொழுதேத்தும் வயங்கிய கற்பினாள்[30]

அருந்ததியைப் போல் எல்லோரும் தொழுது போற்றும்படி விளங்குகின்ற கற்பினையுடையவள்

*என்தோழி*

*அருமழை தரல்வேண்டிதன் தருகிற்கும் பெருமையனே*[31]

*என் தோழியிடம் அரிய மழையைத் தருவிக்கும்படி வேண்டிக் கொண்டாலும் அதைப் பெய்யும்படி செய்யும் பெருமையுடையவள்.*

*தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை*[32]

*என்ற குறளில் இக்கருத்து அமைந்திருப்பதைக் காணலாம்.*

*விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்*
*அருநெறி ஆயர் மகளிர்க்கு*
*இருமணம் கூடுதல் இல் இயல்பன்றே*[33]

*இவ்வுலகம் பரிசாகக் கிடைத்தாலும் சிறந்த ஒழுக்கத்தையுடைய ஆயர்குலப் பெண்கள் முதலில் காதலித்த கணவனைக் கைவிட்டு மற்றொருவனை மணத்தாலாகிய இருமணம் பிரிந்து கொள்ளுதல் அவர்கள் குடிப்பிறப்பின் தன்மையன்று.*

*பெண்கள் கற்பு நெறியோடு வாழ்தல் வேண்டுமென்பதும் மழையைப் பெய்யச் செய்யும் சக்தி படைத்திருக்க வேண்டும் என்பதுவும் முதலில் பண்டைய தமிழர் நெறியாக இருந்துள்ளது. முதலில் காதலித்த கணவனைக் கைவிட்டு மற்றொருவனை மணம் புரிந்து கொள்ளுதல் கூடாது. இவைகளே பெண்களின் கடமை; கற்புடைமை இவ்வாறு பண்டைத் தமிழர்கள் கருதினர்.*

***பழக்க வழக்கங்கள்***

*கலித்தொகையில் பின்வரும் பழக்கவழக்கங்கள் மக்களிடையே நிலவியிருந்தன என்று கூறப்பட்டுள்ளன.*

*பல்லி சொல்லுக்குப் பலன் உண்டு, பெண்களுக்கு இடதுகண் துடித்தால் அதனால் நன்மையுண்டு.*

*தவத்திலே தமிழ் மக்களுக்கு நம்பிக்கை உண்டு. முற்பிறப்பிலே தவம் செய்தவர்கள் இப்பிறப்பில் எல்லா இன்பங்களையும் நுகர்ந்திருப்பார்கள். மறுபிறப்பிலே நம்பிக்கை உண்டு.*

*பொய்சாட்சி சொன்னவன் ஒரு மரத்தின் கீழ் இருப்பானாகில் அந்த மரம் பற்றியெறிந்துவிடும்.*

*மலையிலே வாழ்வோர் அறமல்ல செய்தால் வள்ளிக்கிழங்கு நிலத்தில் வீழாது., தேன் பூச்சிகள் அடை கட்டாது, தினைக்கதிர்கள் முற்றி விளையாது.*

*பகலிலே நனவிற் செய்த காரியங்களைப் பற்றி இரவிலே கனவு காண்பார்கள்.*

*கனவிலே கண்ட செய்திகள் நனவிலே பலிப்பதும் உண்டு.*

*இவ்வுலகிலே ஒழுக்கத்துடன் வாழ்ந்து குடிகளையும் குறைவின்றிக் காப்பாற்றிய மன்னவன் இறுதியிலே சுவர்க்கத்தை அடைந்து இன்பம் துய்ப்பான்.*

*போர்க்காலத்தில் போர் நடைபெறும் இடத்தில் வாழும் குடிகள் அவ்விடத்தை விட்டு வேறு இடங்களுக்குக் குடியேறி விடுவார்கள். போர் முடிந்த பின் மீண்டும் தங்கள் பழைய இடத்துக்குக் குடியேறுவார்கள். பா. 78*

*இவை போன்ற பழக்கவழக்கங்கள் இன்னும் பல கலித்தொகையில் காணப்படுகின்றன.*

***முல்லைக்கலியில் பழக்க வழக்கங்கள்***

*முல்லைக்கலியில் மூவகைப்பட்ட மக்கள் வாழ்ந்துள்ளனர். ஆயர்கள், வேடர்கள், உழவர்கள் என்பவர் அவர்கள்.*

*முல்லைப் பாடல்களில் முதல் ஏழில் ஏறுதழுவும் வீரனாகத் தலைவனும் அவள் மேல் காதல் கொள்பவளாகத் தலைவியும் உள்ளனர்.*

*கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே ஆயர் மகள்*[34]
*திருநுதலாயத்தார் தம்முட் புணர்ந்த*

ஒரு மணந்தானறியுமாயின்[35]
அருநெறியாளர் மகளிர்க்கு
இருமணங்கூடுதல் இல்லியல்பன்றே[36]

என்ற நல்ல நெறியோடு தலைவியின் மனதை உணர்ந்தவர்கள் மகிழ்வர். இத்தகைய தலைவியின் மனப்போக்கிலிருந்து தலைவனின் உயர்ந்த நிலையை உணரமுடிகிறது.

முல்லைக்கலிப் பாடல்கள்பலவற்றிலும் தலைவன் தலைவியின் உரையாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் வன்மைக்காதல் இடம்பெற்றுள்ளது. இத்தலைவன் தலைவியரிடையே பிற தொகைப் பாடல்களில் கண்ட உயர் பண்பை காணாததால் வினைவல பாங்கர் எனத் துறைவகுத்தோர் கூறியுள்ளனர். இவர்கள் குறிக்கோள் மாந்தராக இன்றி நடப்பியல் மாந்தராக இருப்பர் என்று கருதலாம் என்பார் நா. செயராமன்.

முல்லை நில மக்கள் தூய்மையும் எளிமையும் கொண்டு வாழ்ந்துள்ளனர். ஒழுக்கத்தில் சிறந்தவராகவும் வாழ்க்கை நெறிகளை ஒழுங்குற கடைபிடித்து வாழ்ந்தவர்களாகவும் இருந்துள்ளனர். இவ்வாறு முல்லை நில மக்களின் தூய்மையும் எளிமையும் ஒரு புறமும் அஞ்சாமையும் வீரமும் மற்றொரு புறமும் காட்டும் தமிழ்ப்பாட்டுகள் அவர்களை ஒழுக்கத்தில் எளியவராக்கி உயர்வல்லாத வகையில் காட்டும் பகுதிகளும் கலித்தொகையில் சில உள்ளன. அவை அந்நிலத்து தலைமக்களைப் பற்றியவை அல்ல. ஏவலாளரையும் அடிமைகளையும் பற்றியவை என்று அமைதி கூறுவதும் உண்டு.

தலைவன் ஒருவனைப் பார்த்து தலைவிநீ காயாம்பூவால் செய்த கண்ணியையும் கரிய ஆடையையும் உடையவனாக இருக்கின்றாய். ஒரு கோலை வைத்துக்கொண்டு நிரை மேய்த்து நின்ற நீ முல்லை நிலத் தன்மை உடையவனல்ல; ஞாயிற்றின் மகனா நீ? எனக் கேலி பேசுகிறாள்.

தலைவன் ஆயன் அல்லன்; வேறு இனத்தைச் சார்ந்தவன் என்பதும் புலப்படுகின்றது.

நீராடி, முல்லை பறித்துப் பொதிகையிலே தங்கிச் செல்ல அழைக்கிறான் தலைவன். அதனைக் கேட்டு கோபமடைந்த தலைவி,

*யா முனியா ஏறுபோல் வைகற் பதின்மரைக்*
*காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை*[37]

*எனப் பேசுகிறாள்.*

*உன்னைவிடச் சிறந்தவர்கள் நிலவுலத்தில் இல்லை என்று கூறித் தலைவியை ஈர்க்கிறான். மேலும் திருமால் மேல் ஆணையிட்டுச் சூளுரைக்கிறான். நடப்பியல் மாந்தனாகத் தலைவன் தன் எண்ணத்தை ஈடேற்றுகிறான்.*

*ஒருவனை மணமாகாத பெண்டிர் பலரும் காதலிக்கலாம். இவை தமிழ்ச் சமுதாயத்தின் குறிக்கோள் அல்ல. ஒருவன் ஒருத்தி என்பதே அதன் குறிக்கோள். எனினும் ஒருவன் பலர் என்னும் நடைமுறைக்கு இணங்கிச் சமுதாயம் இயங்க வேண்டியதாயிற்று என்ற கருத்து இங்கு நோக்குவதற்குரியது.*

*முல்லைக் கலியில் வரும் சில பாடல்களின் தலைவர்கள் (108, 110, 112, 113, 116, 117) எதிர்வரும் தலைவியைத் தடுப்பதும் எவ்வாறேனும் அவர்களை அடைவதையும் நடைமுறையில் நிகழ்த்தியுள்ளனர். ஒழுக்கத்தில் எளியவர் என்று குறிப்பிட்டாலும் அவ்வாறே கருதப்பட்டாலும் அத்தகையோரைத் தலைவியர் ஏற்றல் என்பது அவர்களின் சமுதாயத்தில் குற்றமற்றதாகவே இருந்திருக்கிறது.*

*குடிமை, பிறப்பு, ஆண்மை கொண்ட வீரத்தலைவன் ஏறுதழுவி இடைமகளை ஏற்றதைக் கூறும் முல்லைக் கலியில் மோர் விற்பவர்களை, வெண்ணெய் விற்று வருபவர்களை வழியிலே செல்பவளை மறித்து தனது கூட்டத்திற்கு உடம்பட வைக்கும் நடப்பியல் மாந்தரும் இருந்தனர் என்பது தெரிகிறது.*

***குறிஞ்சிக் கலியில் பழக்கவழக்கங்கள்***

*சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்வியலைப் பறைசாற்றுகின்றன. ஒவ்வோர் இனத்திலும் அந்தந்த இனத்திற்குரிய பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் இருத்தல் இயல்பே. அவற்றில் சில காலப்போக்கில் மறைந்திருக்கலாம் அல்லது மாற்றம் பெற்றிருக்கலாம். அந்த வகையில் குறிஞ்சி நிலத்தில் மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள்*

எத்தகைய நிலையில் இருந்துள்ளன என்பது குறித்து இங்கு விளக்கப்படுகின்றது.

**ஊஞ்சலாடல்**

குறிஞ்சி நிலமக்களிடையே தினைப்புலம் காத்தலும் ஊஞ்சலாடலும் இருந்தமையை,

ஏனல்

இனக்கிளி கடிந்தோம்பும் புனத்தயல்

ஊசலூர்ந் தாட[38]

என்னும் தொடர்களால் அறியமுடிகின்றது. மகளிரின் இவ்விளையாட்டே காலப்போக்கில் ஊசல் என்ற இலக்கிய வகையில் உட்பிரிவாகிய பெண்பாற் பிள்ளைத்தமிழில் ஒரு பருவமாகச் சிறப்படைந்ததை அறியமுடிகிறது.

**தைநீராடல்**

தையில் நீராடிய தவம் என்பதன் மூலம் தைத்திங்களில் மிகுந்த விருப்புடன் நீராடுவது தவம் என்பது புலனாகின்றது. குறிஞ்சியிலும் பெண்கள் நீராடும் பழக்கம் கொண்டிருந்தமை,

காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்

தாமரைக்கண் புதைத்தஞ்சி[39]

என்ற வரிகளாலும்,

வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ

தையில்நீ ராடியதவம் தலைப்படு வாயே[40]

என்னும் வரிகளாலும் அறியமுடிகின்றது. தைத்திங்களில் மகளிர் விருப்புடன் கூடி நீராடும் பழக்கத்தைப் பரிபாடலும் சுட்டுகின்றது. மகளிரின் இப்போக்கே காலப்போக்கில் பாவைப்பாடல் இலக்கியத்திற்கு முன்னோடியாக அமைந்தது எனலாம்.

**குரவைக்கூத்து**

*தலைவனும் தலைவியும் வாழவேண்டும் என்பதற்காக குறிஞ்சி நில மக்கள் மலை தெய்வமான முருகனைப் பாடிப் பரவும்போது கைக்கோத்துக் குரவையாடும் பழக்கத்தை,*

*நீயும் நின் கேளும் புணர*

*வாயுறை தெய்வம் உவப்ப உவந்து*

*குரவை தழீஇயாம் ஆடக் குரவையும்*

*கொண்டு நிலைபாடிக் காண்*[41]

*என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. சிலப்பதிகாரத்தில் குன்றக்குரவை தனிக்காதையாக இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கது.*

**வள்ளைப்பாட்டு**

*குன்றக் குரவை போல் வள்ளைப்பாட்டு பாடும் பழக்கமும் குறிஞ்சி நில மக்களிடையே இருந்தமை,*

*நம் வள்ளையுள்*
*ஒன்றிநாம் பாட*[42]
*வள்ளை அகவுவம் வா இருளை நாம்*
*வள்ளை அகவுவம் வா*[43]

*என்ற பாடல் அடிகளால் அறியலாம்.*

**திருமணம் பேசுதல்**

*நூல் நெறி அறிந்தவனும் தலைவன் தலைவி கூடும் முகூர்த்த நாளைக் குறிப்பதில் வல்லவனும் தான் குறிக்கும் நாள் தப்புதல் அறியாதவனும் ஆகிய காலக்கணிதனை முன்னாகக் கொண்டும் அறிவு சான்றவர் சுற்றமாக அமைய திருமண முடிவுசெய்யும் பழக்கம் குறிஞ்சி நில மக்களிடையே இருந்ததை*

*நெறி அறி செறிகுறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇ (39:45) என்னும் அடியால் கபிலர் உணர்த்துகின்றார்.*

தலைவன் தலைமகளை வலிந்து கொண்டு செல்வதை இராக்கத மணம் எனத் தொல்காப்பிய உரையின் வாயிலாக அறியலாம். குறிஞ்சிக் கலியில் தலைவன் தலைமகளை வலிந்து கொண்ட இராக்கத மணத்தை

மையில் மதியின் விளங்கு முகத்தாரை

வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று[44]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

திருமணத்திற்குப் பின்னும் தம் நிலை உயரக் கடவுளை வேண்டுவதும் உயர்வு கண்ட பின்னர்த் தம் நிலையை உயர்த்திய கடவுளுக்குக் கடமைகளைச் செய்து முடிக்கும் பழக்கமும் குறிஞ்சி நில மக்களிடையே இருந்தது. இதனை,

நிலையுயர் கடவுட்குக் கடன்பூண்ட தன்மாட்டுப்

பலசூழும் மனத்தோடு[45]

என்னும் தொடர்களின் வாயிலாகக் கபிலர் உணர்த்துகின்றார்.

**மடலேறுதல்**

தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் விரும்பிய நிலையில் தலைவி வீட்டார் தலைவன் செல்வ வளத்தில் குறைந்திருந்தமை காரணம் காட்டி மறுப்பர் என்பதனால் தலைவன் தன் வருத்தத்தை வெளிப்படுத்தி மடலேறும் செயலைக் கபிலர்

ஒறுப்பின் யான் ஒறுப்பது நுமரை யான் மற்றுஇந் நோய்
பொறுக்கலாம் வரைத்துஅன்றிப் பெரிதாயின் பொலங் குழாய்
மறுத்து இவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல் யான் நீபடு பழியே[46]

என்னும் தொடர்களால் உணர்த்துகிறார்.

பல்லார் நக்கு எள்ளப் படுமடல் மா ஏறி

மல்லல் ஊர் ஆங்கண் படுமே[47]

என்ற அடிகள் தலைவன் அருள்செய்யாத போது தலைவன் மடலேறும் பழக்கத்தைப் புலப்படுத்துகின்றன. இச்செய்திகளால் குறிஞ்சி நில மக்களிடையே மடலேறும் பழக்கம் இருந்தமை புலப்படுகின்றது.

**நெல் குத்துதல்**

குறிஞ்சி நில மக்கள் மூங்கில் நெல்லை பாறையால் அமைந்த உரலில் இட்டு யானைக் கொம்பை உலக்கையாகக் கொண்டு குற்றி நல்ல சேம்பின் இலையைச் சுளகாகப் பயன்படுத்திப் புடைக்கும் பழக்கத்தை,

வயக்களிற்றுக்
கோடு உலக்கையாக நல்சேம்பின் இலைசுளகாக
ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்திருவாம்[48]

என்னும் தொடர்களால் அறியலாம். மேலும்,

வாரணத்து,
ஏந்து மருப்பின் இனவண்டு இமிர்பூதும்
சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்ணெல் அறை உரலுள் பெய்து இருவாம்[49]

என்னும் தொடர்களில் ஐவன நெல்லைப் பாறை உரலில் பெய்து யானைக் கொம்பாலும் சந்தன மரத்தாலும் செய்யப்பட்ட உலக்கையால் குற்றும் பழக்கத்தையும் கபிலர் வெளிப்படுத்துகின்றார். குறிஞ்சி நிலக் கருப்பொருளான யானை, சந்தனமரம், மலைப்பாறை மூங்கில் அரிசி ஆகியவற்றைக் கூறும் கபிலர் குறிஞ்சி நில மக்களின் இயல்பான வாழ்க்கையும் இப்பாடல் அடிகளின் வாயிலாக உணர்த்துகின்றார்.

**காசியில் நீராடல்**

காசியில் உள்ள கங்கையில் நீராடுவோர் அங்குள்ள புனிதத்தால் அருட்சிறப்படைவார்கள் என்பது இன்றளவும் உள்ள நம்பிக்கை. இந்த நம்பிக்கையையும் பழக்கத்தையும் கபிலர் தம் குறிஞ்சிக் கலியில் வெளிப்படுத்துகின்றார். ஏதிலார் போல் உள்ள பிறர்படும் துன்பத்தைக் கண்டு இரக்கம் கொண்டு உதவுவோர் அருள் பெறத்தக்கோர் என்பதைக் கூறும் கபிலர்,

*தெருவின்கண் காரணமின்றிக் கலங்குவார்கண்டு*
*வாரணவாசிப்பதம் பெயர்தல் ஏதில்*
*நீரின் மேற்கொள்வதெவன்*[50]

*என்னும் தொடர்களில் வாரணவாசி என்னும் இன்றைய காசியில் உள்ளோர் அருட் சிறப்படைவர் என்று கூறுகின்றார்.*

***மறுபிறப்பு***

*வேதங்களில் கூறப்பட்டாலும் எல்லாக் காலங்களிலும் மறுபிறவிமேல் அதீத நம்பிக்கை கொண்டிருந்தனர்.*

*பண்டு நம்*
*வேறல்ல என்பது ஒன்று உண்டால் அவனொடு*
*மாறு உண்டோ நெஞ்சே நமக்கு*[51]

*என்று பாடி காதலும் அதன் தொடர்பான மனவுணர்வுகளும் பிறவிகள்தோறும் தொடரும் என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றார் கபிலர்.*

***தொய்யில் எழுதுதல்***

*தலைவியின் தோள்மேல் கரும்பைப் போல் வண்ணக் கலவை எழுதும் பழக்கத்தினை,*

*தோள்மேல்*
*கரும்பெழுது தொய்யிற்குச் செவ்வல்*[52]
*தொய்யில் எழுதி இறுத்த பெரும் பொன்படுக*[53]

*என்ற அடிகளால் அறியமுடிகின்றது.*

***மலையைப் பாடுதல்***

*குறிஞ்சி நில மக்கள் குறிப்பாகக் காதல் வயப்பட்டவர் தம் தலைவனை எண்ணி மனநிலையை வெளிப்படுத்தும்போது மலையைப் போற்றிப் பாடும் வழக்கமும் இருந்தது. இதனை,*

*பகையில் நோய் செய்தான் பயமலை ஏத்தி*

*அகவினம் பாடுவாம் நாம்*[54]

*கொடிச்சியர் கூப்பிர வரை தொழுகை*[55]

*என்னும் தொடர்கள் வெளிப்படுத்துகின்றன.*

***தமிழ்ச் சமுதாயம்***

*பண்டைத் தமிழ்ச் சமுதாயம் தொடக்கத்தில் இனக்குழுச் சமுதாயமாக இருந்து நாளடைவில் வேலைப்பிரிவினை காரணமாகத் தொழில்வழிச் சமூகப் பிரிவுகள் கொண்டதாக மாறிற்று என்றும் அங்ஙனம் மாறிய பின்வரும் பழைய இனக்குழுச் சமூகக் கூறுகள் தொடர்ந்து நீடித்தன.*

*பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நிலவியற்கையொட்டியும் தொழில்களையொட்டியும் மக்கள் பல்வேறு குடியினராய் வாழ்ந்தனர் என்பது இதுகாறும் விளக்கப்பட்டது. இம்மக்களுள் செல்வ வறுமை வேறுபாடுகள் தோன்றி நிலைபெற்றிருந்தன என்பது தெளிவாக விளங்குகின்றது. செல்வப் பெருக்கத்திற்கு உழவும் வணிகமும் அடிப்படையாக விருந்தன.*

*முல்லை நில மக்களின் தூய்மையும் எளிமையும் ஒரு புறமும் அஞ்சாமையும் வீரமும் மற்றொரு புறமும் காட்டும் தமிழ்ப்பாட்டுகள் அவர்களை ஒழுக்கத்தில் எளியவராக்கி உயர்வல்லாத வகையில் காட்டும் பகுதிகளும் கலித்தொகையில் சில உள்ளன.*

*அன்றைய சமூகத்தில் அந்தணர், அரசர், வணிகர், நிலக்கிழார் ஆகிய நான்கு பிரிவினரும் ஏனையோரைவிடச் சமூகத்தில் மதிக்கப்பட்டோராக விளங்கினர் எனக் கொள்ள இடமிருந்தாலும் பிற தொழிற் பிரிவினர்க்கு இருந்த சமூக நிலை யாதெனக் கூறமுடியவில்லை. தச்சர், கொல்லர், குயவர், முதலியோர் கல்வி கற்று புலவர்களாய் விளங்கியுள்ளமையை நோக்க இவர்கள் இழிந்தோராகக் கருதப்படவில்லை என்பது தெரிகிறது.*

*இங்குக் கூறப்பட்ட பல்வேறு பிரிவு மாந்தர்க்குள் எத்தகு உறவு நிலவிற்று எனக் காண்பது இன்றியமையாதது. திணைச் செய்யுட்களில் ஐந்து திணைமாந்தரும் தனித்தனியாகப் பண்பாடுகள் கொண்ட தனித்தனிக் குழுவினராக விளக்கப்பட்டாலும் அவர்கள் ஒருவர் மற்றவரோடு எத்தகைய*

உறவுமின்றித் தனித்துக் கிடக்கவில்லை. அவர்கள் ஒருவரோடொருவர் பழகவும் ஒருவர் மற்றவரைப் புரிந்துகொள்ளவும் வாய்ப்புகள் இருந்தன.

காட்டு வாழ்வினனாகிய வேடுவன் தான் கொணர்ந்த மான் தசையையும் முல்லை வாழ்வினராகிய ஆயர் தாம் கொணர்ந்த தயிரையும் மருத நிலத்தூர்களில் விற்றுவிட்டு குளநெல்லைப் பெற்றுச் சென்றனர். மருத நிலத்து உமணர் நெய்தல் நிலத்து உப்பினுக்கு ஈடாக நெல்லைக் கொடுத்தனர். கடற்கரையிலிருந்து புறப்பட்டு மலைநாடு வரையில் செல்வோராக உமணர் அறியப்பட்டனர்.

**பாலைநில மக்கள் பழக்க வழக்கங்கள்**

சங்க இலக்கியத்தில் நானில மக்களும் இல்லற நெறியை ஒழுங்குற அமைத்திருக்கிறார்கள். மகளிர் கற்பு பெரிதும் போற்றப்பட்டிருக்கிறது. சான்றோர்கள் வாழ்ந்து அந்தச் சமுதாயத்திற்கு ஊக்கம் தந்திருக்கிறார்கள். மன்னராட்சி நிலைபெற்றிருந்தாலும் அரசியல் நெறி மிகவும் சிறந்த நிலையில் இருந்திருக்கிறது. நிலையாமை குறித்து அக்காலச் சமுதாயம் தெளிவாக உணர்ந்திருக்கிறது. சூழலுக்கேற்ப அந்தக்கால மக்களிடையே பல்வேறு பழக்க வழக்கங்கள் நிலைபெற்றிருந்த தன்மையினையும் காண முடிகிறது.

**குடும்ப நெறி**

அன்பு மிகுந்த தலைவன், தலைவி காதல் கொண்டு மனம் புரிந்து இல்லறத்தை அமைத்துள்ளனர். தகுதி வாய்ந்த தலைவனும் தலைவியும் இயற்கை கூட்டுவிக்க அன்பொழுக பழகியுள்ளனர். இதனைச் செந்தமிழ்ச்செல்வி கலிபெருமாள்,

> ஒத்த தகுதி வாய்ந்த தலைவனும் தலைவியும் ஊழின் வலியால் எதிர்பட்டுக் காதல் கொண்டு வாழ்ந்தனர். இவர்தம் காதல் நெறிக்குத் தோழி உற்ற துணையாக இருக்கிறாள். காதலர்களை இணைத்துவைக்கும் முக்கிய பாத்திரமாகவே தோழி விளங்கினாள். தலைவியைத் தலைவன் இரவில் சந்திப்பான். அது இரவுக்குறி என்றழைக்கப்பட்டது. இவ்வாறு இரவிலும் பகலிலும் எதிர்பட்டுக் கலந்துரையாடிக் களவுவாழ்க்கையைக் கொள்கின்றனர் காதலர்கள். ஒவ்வோர் ஊரிலும் இரவில் ஊர்க்காவலர்

ஊரைக்காத்து வந்திருக்கின்றனர். இரவுக்குறியில் வரும் தலைமகன் இக்காவலர் அறியா வண்ணமே வந்து போயிருக்கின்றான்.[56]

என்றுரைக்கின்றார். மேலும் இல்வாழ்கையில் ஈடுபட்ட தலைவன் தன்னை நாடிவந்து இரப்பவர்களுக்கு இல்லையென்று சொல்வது அறமாகாது என்று கருதி இருப்பதைக் கொடுத்து அதனைப் பெறுபவனின் மகிழ்ச்சியில் திளைப்பவனாகத் திகழ்ந்தான் தலைவன். தலைவனையே தன் உயிராகக் கருதும் தலைவி தலைவன் பொருள் தேடிப் பிரியாமல் இருக்க முயற்சிக்கிறாள். ஆனாலும் தலைவன் பொருள்தேடப் பிரிவதில் உறுதியாக இருக்க கணவனும் தானும் செல்வதென முடிவெடுக்கிறாள். கணவனுடன் இன்பமாக வாழ்வது மட்டும் வாழ்வல்ல. அவனது துன்பத்திலும் பங்குகொள்வதே நல்ல துணைவிக்கு அழகு என்பதை மெய்ப்பிக்கும் வகையில் தலைவன் பிரியும்போது தன்னையும் உடன் அழைத்துச் செல்லவேண்டும் என வற்புறுத்துகிறாள். இதனைப் பெருங்கடுங்கோ,

> கணவனின் இன்பத்தில் மட்டும் பங்கு கொள்பவள் நல்ல மனைவி அல்லர். அவன் துன்பத்திலும் துணையாக இருந்து இன்பம் காண்பவளே நற்பெண் என்பதனை ஒரு பெண்ணின் கூற்றில் வைத்துக் காட்டியுள்ளார் பெருங்கடுங்கோ. தலைவன் பிரியும்போது தன்னையும் உடன்கொண்டு செல்கென வேண்டிய மனைவியிடம் காட்டின் கடுமை கூறி மறுத்தான். அப்போது,
>
> அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
>
> துன்பம் துணையாக நாடின் அதுவல்லது
>
> இன்பமும் உண்டோ எமக்கு என்கிறாள்.[57]

என்று கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

**கற்பு**

பெண்களின் கற்பு சிறப்பு குறித்தும் பாலைக்கலிப் பாடல்கள் பேசுகின்றன. சங்க இலக்கியங்களில் பெண்களின் கற்பு பற்றியே

விளக்கப்பட்டுள்ளது. வடமீன்போல் தொழுதேத்தும் வயங்கிய கற்பினாள் என்று பெண்களின் கற்பு சிறப்பிக்கப்பட்டுள்ளது.

ஆண்கள் பல பெண்களோடு திருமணம் செய்துகொண்டு வாழ்ந்ததோடு பரத்தையருடனும் கூடிக் கலித்துள்ளனர். பெண்கள் ஆண்களின் அத்தகைய போக்கினைத் தெரிந்துகொண்டே இல்லறத்தில் இனிதே ஈடுபட்டு கற்போடு வாழ்ந்த செய்தியினை அக்காலச் சமுதாயம் உணர்த்துகின்றது.

**கற்பக் காலப் பெண்கள்**

கற்பக் காலத்தில் பெண்களுக்கு வயா நோய் என்னும் ஒரு நோய் வந்து அவர்களின் அழகைக் கெடுத்திருக்கிறது. அதற்காக பெண்கள் பெரிதும் வருந்தியுள்ளனர் என்பதை கலித்தொகைப் பாடல்கள் உணர்த்துகின்றன. இதனை,

> கருப்பந் தங்கிய காலத்துப் பெண்ணுக்குத் தோன்றும் வயாநோய் அவளது இளமைக்காலத்து அழகைக் கெடுக்கும். அதுவல்லாமல் அவள் மிக வருந்துகையால் அதைக் கண்ட சுற்றத்தாரும் வருந்துவர். பின்னர் அவளின் மெய்நோக்காடு கண்டு சுற்றத்தார் வருத்தமுறும்படி அவள் புதல்வனை ஈன்றெடுப்பாள். பின் அப்புதல்வனைக் கொண்டு தனது குடி எல்லாம் பாதுகாத்திருப்பாள். இதுபோல் உழவர் உலகில் பயிரை உண்டாக்குவர். இடையில் வந்த நோய்க்கு வருந்திய வருத்தம் நீங்கும்படி உலகம் தானீன்ற உணவுகளைக் கொண்டு குடிமக்களையெல்லாம் பாதுகாக்கும் அவள் தனது ஈன்ற அணிமை தீர்ந்து புதிய அழகு பெற்றாற் போல, இளையோர் இழைத்த வண்டல்பாவையும் பூவும் கலந்து கிடப்பன போல, வார்ந்த மணலில் பூக்கள் உதிர்ந்து கிடத்தலினால்தான் (உலகம்) ஈன்ற பசுமை தீர்ந்த அழகு தோன்றும். ஆறிடு மணலை ஊடறுத்துச் செல்லும் நீர் ஒழுங்கு அவ்விளைய மகளிருடைய மயிர்போல விருக்கும் மாமை நிறத்தையுடையவளின் மார்பில் படர்ந்த சுணங்குபோல மாவின் சிறிது முற்றின தளிர்மேலுள்ள பூவின் தாது உதிரும். இவ்வாறு இளவேனிற் காலம் வந்தது.[58]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**நல்லாட்சி**

கலித்தொகையில் மன்னர்கள் கொடுங்கோல் வழுவாமல் ஆட்சி செய்த திறனும் குறிப்பிடப்பட்டுள்ளது. கொடுங்கோலாட்சி மக்களால் வெறுக்கப்பட்டுள்ளது. நல்லாட்சி நடைபெறும் நாடு அமைதியும் இன்பமும் குடிகொண்டிருக்கும் நாடாக செல்வம் கொழித்திருக்கும் நாடாக விளங்கியுள்ளது. இந்த உண்மைகளை அக்காலச் சமுதாயம் தெளிவாக உணர்ந்திருக்கிறது. மன்னன் வாய்மை தவறாதவனாக இருந்துள்ளான். இதனைப் பாலைக்கலி,

காமர் கடுந்திண்டேர்ப் பொருப்பன்

வாய்மை யன்ன வைகலோடு புணர்ந்தே[59]

என்று கூறுகின்றது.

**பாண்டிய மன்னன்**

கலித்தொகையில் பாண்டிய மன்னர்களின் நாடு மிகுதியும் சிறப்பிக்கப்பட்டுள்ளது. அவர்களின் வெண்கொற்றக்கொடையும் முரசும் சேனையும் வாட்படையும் மதிலும் போற்றப்பட்டுள்ளன.

இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல

அகலல்குல் தோள்கண் எனமூ வழிப்பெருகி

நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி[60]

என்னும் அடிகளின்மூலம் படையமைப்பு சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. மேலும் பாண்டிய மன்னனின் நகரங்களில் மதுரையும் திருப்பரங்குன்றமும் பற்றிய செய்திகள் மிகுதியும் இடம்பெற்றுள்ளன.

நிலவினாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்

புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ

வல்லவர்

செதுமொழி சீத்த செவிசெறுவாக

*முதுமொழி நீராப் புலனா வுழவர்*

*புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர்*[61]

*என்ற பாடல் அடிகள் சங்கம் வைத்து தமிழ்மொழி வளர்த்த சூழல்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளன.*

**தொகுப்புரை**

*சங்க இலக்கியம் சமூகத்தின் வாழ்வியலையும் வரலாற்றையும் தொன்மையையும் எடுத்தியம்பும் நிலையானதொரு ஆவணமாகத் திகழ்கிறது. உலக மக்களிடையே உயர்ந்த இனமாகத் தமிழினம் வாழ்ந்துள்ளதை சங்கப் பாடல்கள் பலவும் படம்பிடிக்கின்றன. பொருளீட்டுவதும் விருந்தோம்புவதும் மகளிரைப் பேணுவதும் தமிழர்களின் தலையாய கடமையாக இருந்துள்ளது. நானில மக்களும் தம்மிடம் உள்ள பொருள்களைக் கொடுத்தும் கொண்டும் உண்டும் உயிர்த்தும் உறவாடி மகிழ்துள்ளதை அறியமுடிகிறது.*

*சங்கப் புலவர் அந்தந்த நிலத்தில் வாழ்ந்த மக்களின் பண்பாட்டுக் கூறுகளை உண்மைத் தன்மையுடன் பதிவுசெய்துள்ளனர். ஐந்திணைகளும் ஐந்து வேறுபட்ட பண்பாடுகளைக் கொண்டிருந்த தன்மையை விளங்கிக் கொள்ள அவர்கள் தரும் வாழ்க்கை பற்றிய குறிப்புகளை அறியவேண்டியது அவசியமாகின்றது.*

*சங்ககாலத்திலேயே ஆரியர்கள் தமிழகத்திற்குள் நுழைந்து தமிழ்ச் சமூகத்தோடு தனித்து வாழ்ந்திருப்பதை அறியமுடிகின்றது. பண்பாட்டால் உணவு உடை கலாச்சார பழக்கவழக்கங்களால் வேறுபட்டிருந்த இவர்கள் தமிழர்களிடையே கலக்காமல் தனிப்பட்ட முறையில் குடியிருப்புகளை அமைத்து வாழ்ந்து வந்துள்ளனர். குடியிருப்புகளைத் தனியாக அமைத்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் தமிழர்களைவிட தாங்கள் உயர்ந்தவர்கள் என்றும் மன்னர்களும் தமக்குப் பணிவாக நடந்துகொண்டால் ஆட்சி நீடிக்கும் வளம் கொழிக்கும் எனப் பொய்மை உரைகளைப் பரப்பி தமிழர்களை தமிழ் மன்னர்களை ஏமாற்றியுள்ளனர்.*

*பண்டைய தமிழ்ச் சமூகம் தொடக்கத்தில் இனக்குழுச் சமுதாயமாக இருந்து நாளடைவில் வேலைப்பிரிவினை காரணமாகத் தொழில்வழிச் சமூகப்*

*பிரிவுகள் கொண்டதாக மாறிற்று என்றும் அங்ஙனம் மாறிய பின்வரும் பழைய இனக்குழுச் சமூகக் கூறுகள்தொடர்ந்து நீடித்தன.*

*பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் இயற்கை சூழல்கள் சார்ந்தும் தொழில்களைச் சார்ந்தும் மக்கள் பல்வேறு குடியினராய் வாழ்ந்தனர் என்பதைஅறியமுடிகின்றது. இம்மக்களுள் பல்வேறு வேறுபாடுகள் தோன்றி நிலைபெற்றிருந்தன என்பது தெளிவாக விளங்குகின்றது. செல்வப் பெருக்கத்திற்கு உழவும் வணிகமும் அடிப்படையாக விருந்தன என்பது தெரிகின்றது.*

*அன்றைய சமூகத்தில் அந்தணர், அரசர், வணிகர், நிலக்கிழார் ஆகிய நான்கு பிரிவினரும் ஏனையோரைவிடச் சமூகத்தில் மதிக்கப்பட்டோராக விளங்கினர் எனக் கொள்ள இடமிருந்தாலும் பிற தொழிற் பிரிவினர்க்கு இருந்த சமூக நிலை யாதெனக் கூறமுடியவில்லை. தச்சர், கொல்லர், குயவர், முதலியோர் கல்வி கற்று புலவர்களாய் விளங்கியுள்ளமையை நோக்க இவர்கள் இழிந்தோராகக் கருதப்படவில்லை என்பது தெரிகிறது.*

*சங்க இலக்கியத்தில் நானில மக்களும் இல்லற நெறியை ஒழுங்குற அமைத்திருக்கிறார்கள். மகளிர் கற்பு பெரிதும் போற்றப்பட்டிருக்கிறது. சான்றோர்கள் வாழ்ந்து அந்தச் சமுதாயத்திற்கு ஊக்கம் தந்திருக்கிறார்கள். மன்னராட்சி நிலைபெற்றிருந்தாலும் அரசியல் நெறி மிகவும் சிறந்த நிலையில் இருந்திருக்கிறது. நிலையாமை குறித்து அக்காலச் சமுதாயம் தெளிவாக உணர்ந்திருக்கிறது. சூழலுக்கேற்ப அந்தக்கால மக்களிடையே பல்வேறு பழக்க வழக்கங்கள் நிலைபெற்றிருந்த தன்மையினையும் காண முடிகிறது.*

**சான்றெண் விளக்கம்**


1. செந்தமிழ்ச்செல்வி கலியபெருமாள், கலித்தொகையில் பாலைத்திணை, ப. 61
2. அ. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப. 5
3. இரா. மணியன், கலித்தொகை, ப. 159
4. அ. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப. 7
5. பட்டினப்பாலை, பா. 14-15
6. அ. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப. 9
7. மேலது, ப. 11
8. நற்றிணை, பா. 90:3
9. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப. 9
10. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 81
11. கலித்தொகை, மு.கலி. பா. 117
12. கலித்தொகை, கு.கலி, பா. 44
13. கலித்தொகை, ம.கலி, பா. 68
14. கலித்தொகை, ம.கலி, பா. 91
15. கலித்தொகை, ம.கலி, பா. 81
16. கலித்தொகை, ம.கலி, பா. 85
17. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 84
18. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 85
19. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 86
20. கலித்தொகை, கு.க, பா. 38
21. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 86
22. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 89
23. மு. குருவம்மாள், தமிழ் மொழி இலக்கியம் பண்பாடு, ப. 90
24. கலித்தொகை, பா. 10
25. கலித்தொகை, பா. 145
26. கலித்தொகை, பா. 11
27. சாமி சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப. 107
28. கலித்தொகை, பா. 125

*29. கலித்தொகை, பா. 22*

*30. கலித்தொகை, பா. 2*

*31. கலித்தொகை, பா. 39*

*32. திருவள்ளுவர், திருக்குறள், பா. 55*

*33. கலித்தொகை, பா. 114*

*34. கலித்தொகை, பா. 103*

*35. கலித்தொகை, பா. 114*

*36. கலித்தொகை, பா. 114*

*37. கலித்தொகை, பா. 108: 48-49*

*38. கலித்தொகை, பா. 37:12-14*

*39. கலித்தொகை, பா. 39:1-2*

*40. மேலது, பா. 29:12-13*

*41. மேலது, பா. 39: 26-29*

*42. மேலது, பா. 41:40*

*43. மேலது, பா. 42:8-9*

*44. மேலது, பா. 62: 14-15*

*45. மேலது, பா. 46: 16-17*

*46. மேலது, பா. 58:20*

*47. மேலது, பா. 61:22-23*

*48. மேலது, பா. 41:1-3*

*49. மேலது, பா. 43:2-4*

*50. மேலது, பா. 54*

*51. மேலது, பா. 26:17 – 19*

*52. மேலது, பா. 63:8*

*53. மேலது, பா. 64:9*

*54. மேலது, பா. 40:6-7*

*55. மேலது, பா. 40:11*

*56. செந்தமிழ்ச்செல்வி கலியபெருமாள், கலித்தொகையில் பாலைத்திணை, ப. 62*

*57. மேலது, ப. 65*

58. ந.சி. கந்தையா பிள்ளை, கலித்தொகை, ப. 101

59. கலித்தொகை, பா. 34:24-25

60. மேலது, பா. 21

61. மேலது, பா. 56

# இயல் - 4

## அறச் சிந்தனைகள்

நல்லன எல்லாம் அறம் என்று அறத்திற்கு விளக்கம் வழங்குவர். ஆனால் இந்த அறம் எல்லோருக்கும் பொதுவானது அல்ல. அது காலத்திற்குக் காலம் மாறும் தன்மையுடையது என்ற கருத்தும் நிலவுகின்றது. ஒரு காலத்தில் அறமாகக் கருதப்பட்ட ஒன்று பிறிதொரு காலத்தில் அறனல்லவாக முடிந்துள்ளதை இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க நூல்களில் ஒன்றான புறநானூறு, அரசர்களுக்குரிய அறம், குடிமக்களுக்குரிய அறம் என விரிந்த நிலையில் தனித்தனியே அறம் பற்றிப் பேசுகின்றது. புற நூல்களில் மட்டுமல்ல; அக நூல்களிலும் அறக் கருத்துகள் புலவர்களால் மிகுதியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அந்த வகையில் அக நூலாகிய கலித்தொகையில் கூறப்பட்டுள்ள அறக் கருத்துகளை ஆராய்வதாக இந்த இயல் அமைகின்றது.

### அறம் – விளக்கம்

'அறு' என்னும் வினைச் சொல்லடியாகப் பிறந்ததே 'அறம்' என்பதாகும். 'அறு' என்னும் அடிச் சொல்லிற்கு 'அறுத்துச்செல்' 'வழியை உண்டாக்கு' 'உருவாக்கு' 'துண்டி' 'வேறுபடுத்து' எனப்பல பொருட்கள் வழங்குகின்றன. இத்தகைய அறம் குறித்து க.த. திருநாவுக்கரசு,

> "அம் என்னும் தொழிற்பெயர் விகுதி அறுத்தலாகிய தொழிலை உணர்த்துகின்றது. இத்தகைய சொல்லமைப்பியல் ஆராய்ச்சியின் அடிப்படையில் அறம் என்னும் சொல்லிற்குப் பின்வரும் விளக்கம் தரப்படுகிறது. மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறிமுறைகளின் தொகுதியே – முழு நிறை வடிவமே" [1]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார்.

### அறம் குறித்து அகராதிகள் தரும் விளக்கம்

அறம் என்னும் சொல்லிற்கு அகராதிகள் பலவும் பல விதமாக விளக்கம் வழங்கியுள்ளன. அந்தவகையில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி,

*"தருமம், புண்ணியம், தகுதியானது, சமயம், ஞானம், அறச் சாலை, நோன்பு, தரும தேவதை, யமன்"* [2]

என்னும் பொருளைத் தந்துள்ளது. ஆனால் அறம் என்பதற்குப் பெருஞ்சொல்லகராதி,

*அறம் 1. மக்கள் நல்வாழ்வு வாழச் சான்றோர்களால் வரையறுக்கப்பட்ட நன்னெறி, தருமம், இல்லறம், துறவறம், கற்பு, இன்பம், ஏற்றது, இதம், தகுதியானது, குற்றம் தீர்ந்த நன்மை.*

*அறம் 2. நோன்பு, சமயநெறி, வீடு பயக்கும் மெய்ப்பொருள், நல்வினை, புண்ணியம், அறநிலையம்.*

*அறம் 3. அறக்கடவுள், இயமன்.*

*அறம் 4. செய்யுளில் அல்லது பேச்சில் தீமை விளைவிக்கும் சொல்.* [3]

என்னும் விளக்கத்தை விரிவாக வழங்கியுள்ளது. (பெருஞ்சொல்லகராதி, தொகுதி.1) எம்.வின். சுலோவின் தமிழ் அகராதி அறம் என்பதற்கு,

*ஒழுக்கம் அல்லது சமயக் கடமைகள், மதிப்பு, சாத்திரங்களோடு இணைந்து செல்லும் நற்செயல்களின் வெளிப்பாடு, ஒவ்வொரு தனிப்பட்ட இனத்தாலும் வரையறுக்கப்பட்டுச் செயலாற்றப்படுகின்ற நீதி, விருந்தோம்பல், பெருந்தன்மை முதலான கடமைகள்"* [4]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளது. பேரகரமுதலி,

*நல்வினை, ஐயம், ஏழைகளுக்கு இலவசமாகக் கொடுப்பது, நோயாளிகளுக்கு இலவசமாக மருந்தீகை, நலமானது, இன்பம், தகுதியானது, கற்பு, நோன்பு, அறப்பயன், சமயம், ஓதி, அறச்சாலை, அறத்தெய்வம், நடுநிலையறம் பேணும் கூற்றுவன்"* [5]

ஆகிய பதினைந்து வகையான பொருளைத் தருகின்றது. சொல் நிலையில் அமைந்துள்ள இந்த விளக்கத்திற்கு மாறாக, கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி அறம் என்பதற்கு,

*"தனிமனிதனின் வாழ்வும் பொதுவாழ்வும் சீராக இயங்கத் தனிமனிதன், அரசு போன்றவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தின் அடிப்படையிலான நெறிமுறைகள் அல்லது கடமைகள்"[6]*

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளது. "சங்ககாலமும் சங்கம் மருவிய காலமும் பக்திக் காலமும் – கால மாறுபாடும் அறனும்" என்னும் கட்டுரையை எழுதிய பெ. மாதையன், மேற்குறித்த கிரியாவின் தற்கால அகராதியின் விளக்கத்தைச் சுட்டிக் காட்டி,

*"இது ஒரு சார்புத் தன்மை உடையதாக உள்ளது. தனிமனிதனின் வாழ்வே பன்முகப்பட்டது. இது ஆணுக்கு ஒரு நியதியும் பெண்ணுக்கு ஒரு நியதியும் ஏழைகளுக்கு ஒரு நியதியும் என்ற நிலையில் அறம் என்பது மாறும் இயல்புடையது. எனவே இது இடம், காலம், இனம், மதம், எனும் பல்வேறு அடிப்படைகளிலும் மாறும் இயல்புடையதாகவே உள்ளது"[7]*

என்று கூறி அக்கருத்தை மறுத்துள்ளார். மேலும் இவர் அறம் என்பது எல்லோருக்கும் பொதுவானது என்னும் கருத்தினை ஏற்கவில்லை என்பதையும் அறிய முடிகின்றது. அறவியல் என்பதற்கு வாழ்வியல் களஞ்சியம்,

*"அறவியல் என்பதை ஒருவகைச் செயல்முறை சார்ந்த அறிவியல் எனக் கொள்ளவேண்டும். தனிமனிதன் தன் வாழ்வோடும் தன்னை இணைத்துக் கொண்டு வாழும் நிலையில் காலம், இடம், சூழ்நிலை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இவை இவை செயற்பாலன எனத் தேர்ந்தெடுக்கவும் அல்லாதவற்றை நீக்கவும் தேர்ந்தெடுத்தவற்றைச் செம்மையான முறையில் செயற்படுத்தவும் ஆகிய நிலையில் அவன் செயற்படுவதற்கு வேண்டிய செயலறிவைத் தருவதே அறவியல்"[8]*

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளது. ஆ. சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி அறம் என்பதற்கு,

"இல்லறம், துறவறம் என இருவகை. இல்லறம், கொடுத்தலு மளித்தலும் கோடலும், இன்மையும், ஒழுக்கம், புணர்தல், புணர்தோர்ப் பேணல் மற்றையவுமாம். துறவறமாவது துறவும், அடக்கமும், தூய்மையும் தவமும், அறவினை யோம்பலும் மறவினை மறுத்தலும், பிறவுமாம்"[9]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளது. மேற்குறித்த அகராதிகள் அறம், அறவியல் என்பதற்கு விளக்கத்தை வழங்கியுள்ளன. ஆனால் அபிதான சிந்தாமணி அறத்தை இல்லறம், துறவறம் என இரண்டாகப் பிரித்து இல்லறத்தார் ஆற்றவேண்டிய கடமைகளையும் துறவறத்தார் ஆற்றவேண்டிய கடமைகளையும் சுட்டுகின்றது. மேலும் இவ்வகராதி அறத்தின் வகைகளை முப்பத்திரண்டாகவும் பாகுபடுத்தியுள்ளது. அவை,

"ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத் தோர்க்குண்டி, பசுவிற்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச் சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத் தூரியம், கண்ணம், நோய் மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப் பந்தர், மடம், தடம், கா, ஆவுறிஞ் சுதறி, விலங்கிற் குணவு, ஏறு விடுத்தல், விலைக் கொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம் முதலியனவாம்.[10]

என்பனவாம். யார் யாருக்கு என்னென்ன பொருள்களை வழங்கவேண்டும் என்பதையும் இவ்வகராதி பட்டியலிடுகின்றது.

அறம் என்பதற்கு ராஜ்கௌதமன்,

"அறங்கள் வெற்று விதிகள் அல்ல. இவை, மேலாதிக்க சமூக ஒழுங்கை அல்லது நடப்பில் நிலவுகின்ற ஆதிக்க – ஆட்பட்ட உறவுகளைச் சாசுவதமாக்குகின்றன. ஒரு சாராரின் நலனே ஒட்டு மொத்த சமூக நலன் என்று அறங்கள் நியாயப்படுத்தவல்லவை. இவ்வாறு இவை, நியாயப்படுத்துவதன் மூலமாக, நடப்பிலுள்ள சமூக ஒழுங்கும், உறவுகளும் இயல்பானவை, மாறாதவை, மாற்றக்கூடாதவை என்று ஆக்குகின்றன. அறங்கள் இயற்கைச் சட்டம் என்கிற அரணைப் பெறுகின்றன. நடப்பனவற்றைக் கேள்விக்கு அப்பாற்பட்டவையாக,

இதிலே கேட்பதற்கு என்ன இருக்கிறது என்பதாக அறங்கள் ஆக்குகின்றன. இதனால் கேள்வி கேட்கவே முடியாத வல்லாண்மையை உண்டாக்குகின்றன. கேட்டே தீரவேண்டியவர்களுக்கு, பாதிக்கப் பட்டவர்களுக்கு அறவகைப்பட்ட அச்சத்தை ஏற்படுத்துகின்றன"[11]

என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார். ராஜ்கௌதமனின் இந்த விளக்கம் பொருந்துவதாக உள்ளது என்கிறார் பெ. மாதையன்.

பிற்கால ஆய்வாளர்களாலும் நூல்களாலும் அறம்குறித்து இத்தகைய கருத்துகள் வழங்கப்பட்டுள்ளன. ஆனால் காலத்தால் முற்பட்ட இலக்கியப் படைப்பாகிய திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர், அறம் என்பதற்கு,

*அறமாவது, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்.*

*அவற்றுள், ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.*

*வழக்காவது, ஒரு பொருளைத் தனித்தனியே 'எனது எனது' என்று இருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேல் செல்வது. அது 'கடன் கோடல்' முதல் பதினெட்டுப் பதத்தது ஆம்.*

*தண்டமாவது, அவ் ஒழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயனாரை, அந்நெறி நிறுத்துதற் பொருட்டு, ஒப்ப நாடி, அதற்குத் தக ஒறுத்தல்.*

*இவற்றுள் வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவது அல்லது, ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பில ஆகலானும், அவைதாம் நூலானே அன்றி உணர்வு மிகுதியானும், தேய இயற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது.*[12]

*என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார். பரிமேலழகரின் அறம் குறித்த வரையறையை தமிழறிஞர்கள் பலரும் ஏற்றுக் கொள்வதில்லை. ஏனெனில் அவை வடநூன் முறையை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது என்னும் கருத்து அவர்களிடையே நிலவுவதே அதற்குக் காரணமாகும்.*

*அறம் என்பதற்கு இவ்வாறு சொன்மை நிலையிலும் பொருண்மை நிலையிலும் பல்வேறு கருத்து விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.*

> *"அறம் என்ற சொல் இடத்திற்கேற்ப பல பொருளில் வழங்கப்படுகின்றது. கருத்துப்பொருள் இவ்வாறு பல வகையில் இருந்தாலும் அவையெல்லாவற்றிற்கும் அடிப்படையாக உள்ள அதன் சொற்பொருள் 'அற்றது' என்பதாகும். அது பற்றற்ற நிலை; தன்னலப்பற்று அற்ற தூய்மை"[13]*

*என்று சுப்புரெட்டியார் விளக்கம் தந்துள்ளதும் இங்குச் சுட்டத்தக்கது.*

**அறத்தின் நோக்கம்**

*அறத்தின் நோக்கம் பிறர் நலம் பேணுவதே ஆகும். இதன் நோக்கம் குறித்துக் கவிதாராணி என்பவர்,*

> *ஒருவர் தம்மால் இயன்ற அளவு பிறர் துன்பத்தைப் போக்க முயலுதலும், தம் எண்ணம், சொல், செயல் இவற்றால் பிறருக்கு நன்மையே நினைத்து தீமையை முற்றிலுமாக அழித்தலும் பிறர் உயர்வினில் பொறாமை கொள்ளாது இன்பம் காண்பதும் நல்வழிப்படுத்துவதும் என, இப்பிறர் நலம் பேணல் விரிவடைந்துகொண்டே செல்கிறது. இப்பண்பு சிறிது சிறிதாகப் பெருகும்போது தன்னலம் காணலும் சிறிது, சிறிதாக நீங்குகிறது. அறவாழ்வின் அடிப்படை பிறர் நலம் பேணுவதில் தொடங்குகிறது.[14]*

*என்னும் விளக்கத்தை வழங்கியுள்ளார் பிறர் நலம் பேணல் என்பது அறத்தின் நோக்கமாகின்றபொழுது சமுதாயத்தைஉயர்த்துதல்என்பதும்அறத்தின்நோக்கமாக அமைந்து விடுகின்றது தனிமனிதனுக்கும்சமுதாயத்திற்குமாஷஉறவு ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்கமுடியாத நெருக்கமுடையது சமுதாயத்தினால் நன்மைபெறும் தனிமனிதன்தனதுகடமைகளைச்சமுதாயத்திற்காகவுஷூற்றவேண்டும்*

அறத்தின் நோக்கம் குறித்துக் கலைக்களஞ்சியம் பின்வருமாறு கருத்துரைக்கின்றது.

> கடமையுணர்ச்சியே அறநிலையின் உயிர்நாடி. கடமை சமூகத்தில்தான் பிறக்கிறது. கடமைகளைத் தன்னலம் கருதாது, கடமைகளின் பொருட்டு செய்து முடித்தால்தான் ஒருவன் தன் கடமையைச் செய்து முடித்தவன் ஆவான்.[15]

ஆகவே பிறர் நலம் பேணுவதும் அதன்வழி ஏற்படும் சமுதாய உயர்வும் ஆகிய பொதுநலனே அறத்தின் நோக்கமாகிறது என்பது தெளிவாகின்றது.

**அறத்தின் தோற்றம்**

தொடக்க நிலையில் தங்கள் விருப்பங்களுக்கு ஏற்ப வாழத் தொடங்கிய மக்கள்கூட்டம் காலப்போக்கில் தனிமனிதர்களாகிய சான்றோர்கள் தத்தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகிய நல்ல பழக்கங்களைப் பின்பற்றத் தொடங்கியது. நாளடைவில் அச்சான்றோர்களின் பழக்கங்களே அவர்கள் வாழ்ந்த சமூகத்தினரால் சிறப்புடையனவாகப் போற்றப்பட்டிருக்கவேண்டும். அறிவாலும், பண்பாலும் உயர்ந்தோராக உள்ளோரின் கூற்றும் செயலுமே அவர்கள் சார்ந்த சமூகத்தவரால் பின்பற்றப்பட்டன என்பதனை,

> வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
>
> நிகழ்ச்சி அவர்கட் டாகலான.[16]

என்ற நூற்பா எடுத்துரைக்கின்றது. பண்பால் உயர்ந்த சான்றோர்களை, உயர்ந்த வேட்ட உயர்ந்திசினோர், உயர்நிலை உலகத்து உயர்ந்தோர் எனப் புலவர்கள் போற்றிப் பாராட்டுவது கருதத்தக்கது. இவர்கள் அல்லவை கடிந்து நல்லவை உரைத்து எல்லோரையும் நல்லாற்றுப்படுத்தும் அறவாணர்களாக விளங்கினர்.

**தொல்காப்பியர் கூறும் அறம்**

தொல்காப்பியர் அறத்தைத் தனிப்பொருளாக வைத்துக் கூறாவிட்டாலும் அகத்திணையியல், புறத்திணையியல், செய்யுளியலில் அறம் பற்றிப் பேசியுள்ளார்.

தொல்காப்பியம் மக்கள் வாழ்வியலை அகம், புறம் என்று இருகூறாகப் பகுத்துள்ளது. இவ்விருவகை வாழ்க்கை நெறிகளும் அறத்துடன் தொடர்பு கொண்டதையும் அறம், பொருள், இன்பம் மூன்றும் அவர்கள் வாழ்க்கையில் சிறந்து விளங்கியதையும் தெளிவுபடுத்துகின்றது. இன்பம் தனி மனித வாழ்வை மகிழ்ச்சியாக வைத்திருக்க உதவுவது. பொருள் தனிமனித வாழ்வு, சமூக வாழ்வு, அரசவாழ்வு ஆகிய அனைத்தையும் செழுமையுடன் காப்பாற்றவல்லது. அறம் தனி மனிதன், சமூகம், நாடு என்ற அனைத்தையும் தழுவிய கட்டுக்கோப்புடன் காத்து நிற்பது. முத்திறக் கூறுகளின் இந்தப் படிமுறை வளர்ச்சியைத் தொல்காப்பியர்,

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு

அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்[17]

என்று வரிசைப்படுத்துவார். இந்த அமைப்பு முறையின் நுட்பத்தினை இளம்பூரணர்,

"அறனும் பொருளும் இன்பமும் என்னாது, இன்பமும் பொருளும் அறனும் என்றது என்னையெனின் பலவகை உயிர்கட்கும் வரும் இன்பம் இருவகைப்படும். அவையாவன, போகம் நுகர்தலும், வீடுபெறுதலும் என. அவற்றுள் வீடுபேறு துறவறத்தில் நின்றார்க்கல்லது எய்துதல் அரிதாயிற்று. போக நுகர்வது மனையறத்தார்க்கு எய்துவது, அவரெய்தும் இன்பமும் அவ்வின்பத்துக்குக் காரணமாகிய பொருளும், அப்பொருட்குக் காரணமாகிய அறனும் எனக் காரிய காரணம் நோக்கி வைத்தார் என்க"[18]

என்று விளக்கம் தந்துள்ளார்.

உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்

செய்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று.[19]

என்பது கற்பொழுக்கத்தைக் காட்டும் சிறந்த நூற்பாவாகும். களவு வாழ்க்கையைக் கற்பாக ஆக்குவதும் கற்பறத்தை வலியுறுத்துவதும் அறத்தொடு நிற்றல் என்ற துறையால் சுட்டப்படுகிறது.

புறவாழ்விலும் தமிழர் அறநெறியைப் பின்பற்றினர். தொல்காப்பியர் குறிப்பிடும் ஏழு புறத்திணைகளில் காஞ்சி, பாடாண் ஆகியன அறத்தையே போதிக்கின்றன. இவற்றில் காஞ்சித்திணை நிலையாமையைச் சுட்டிக்காட்டி அறத்தினை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

**இலக்கியங்களில் அறக்கருத்துகள்**

பண்டைத் தமிழ் மக்கள் தனிமனிதனையும் சமுதாயத்தையும் போற்றி வளர்க்கும் ஒழுக்க நெறியாக அறத்தைக் கருதினர். இவ்வுலக வாழ்க்கையில் தனிமனிதனும் சமுதாயமும் நலமாக வாழ்வதற்கும் முன்னேற்றத்தை அடைவதற்கும் அறவாழ்வு இன்றியமையாதது என்னும் நம்பிக்கை முன்னோர்களிடம் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. அவர்கள் வாழ்வில் அடிப்படை நிலைக்களன்களாகக் காதல், போர், அரசியல், சமுதாயம் முதலியன அமைந்திருந்தன. இவற்றில் தோன்றிய சிக்கல்களையும் முரண்பாடுகளையும் செம்மைப்படுத்த எண்ணியபோது அறக்கருத்துகள் மலர்ந்தன. அவை இலக்கியங்களில் அறக்கூறுகளாய் வெளிப்பட்டன.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே நீதியை மட்டும் எடுத்துரைக்கும் தனி நீதி நூல்கள் வழக்கில் இருந்திருக்கலாம். அறம் பாடிற்றே, அறம் கூறும் ஆக்கம், அறம் பொருள் கண்டார் போன்ற தொடர்களால் இவ்வாறு கருதுவதற்கு இடமுள்ளது. இலக்கியத்தின் தேவை, நோக்கம், இலக்கிய மாந்தர்தம் சூழல் இவற்றின் அடிப்படையில் அறம் பலகோணங்களில் மொழியப் பெற்றுள்ளது. மனிதனுடைய மனம் அறநெறியில் இயங்கவேண்டும் என்பதற்காக அறநெறிகளை இலக்கியங்களில் எடுத்துரைத்தனர். இலக்கியங்கள் அறம் உரைக்கும் இயல்பினை அடிப்படையாகக்கொண்டு முழுமையும் அறம் பேசவேண்டும் என்று கருதாது தனிப்பாடல்களிலும் காப்பியங்களிலும் இடையிடையே பேசப்பட்டவை. அறங்கூறுவதே நோக்கமாகக் கொண்டெழுந்தவை, அறத்தை நேரடியாகப் பேசாமல் முன்னுள்ள அறநூல் அடிகளை அமைத்துக் கதையாக விளக்குபவை, கதையாக அறக்கருத்துகளைக் கூறுபவை என்று அவற்றை நான்கு வகைகளாகப் பிரித்துரைக்கின்றது வாழ்வியல் களஞ்சியம்.

தொல்காப்பியத்துக்குப் பின் எழுந்த சங்க இலக்கியங்கள் காதல், வீரம், கொடை பற்றிய அறங்களை விவரித்துக் கூறுகின்றன. மன்னர்கள் வஞ்சினம் கூறும் இடங்களிலும் புலவர்கள் புரவலர்களின் பண்புகளைப் பாராட்டிக் கூறும் பகுதிகளிலும் புலவர்கள் தம்மியல்பைப் பெருமிதத்துடன் எடுத்தியம்பும் இடங்களிலும் இயற்கைப் புனைவுகளிலும் அறக்கருத்துகள் புலப்படுத்தப்பட்டுள்ளன.

சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள் பாடலோடு ஒன்றியும், தனித்துறைகளாக அமைந்தும் சிறப்பாக வெளிப்படுகின்றன. அகப்பொருள் பற்றிய செய்திகளில் உவமைகளிலும் குறிப்பாக உள்ளுறை இறைச்சிகளிலும் அறக்கருத்துகள் இடம்பெற்றுள்ளன. புறப்பாடல்கள் அனைத்துமே அறத்தை வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன.

**கலித்தொகையில் அறச் சிந்தனைகள்**

கலித்தொகையைப் பதிப்பித்த இ.வை. அனந்தராமையர் அதன் இரண்டாம் பாகத்தின் முன்னுரையில் இந்நூலில் கூறப்பட்டுள்ள அறக் கருத்துகள் குறித்து கருத்துரைத்துள்ளார். அதில்,

> “படிப்போர்க்கு இன்பச் சுவையுடன் அந்தணர், அரசர், அமைச்சர், வணிகர், வேளாளர்களும் பிறருமாகிய ஆடவரும் மகளிரும் இளமையிலும் முதுமையிலும் அறிந்துகொள்ள வேண்டிய பலப்பல நீதிகளைக் கற்பித்து நன்னெறிக் காட்டிப் பயன் துய்க்கச் செய்வது”[20]

என்று குறிப்பிட்டுள்ளார். இலக்கிய மரபு என்னும் நூலில் மு. வரதராசன்,

> “புலவர்கள் அறக்கருத்துகளை நேரே வாய்பாடு போல் எடுத்துக் கூறாமல் பாடல்களைக் கற்று அதன் கற்பனையில் திளைத்து உணர்ச்சி வயப்பட்டு ஈடுபடுவோரின் உள்ளத்தில் அந்த அறக்கருத்துகள் தாமே பதியுமாறு அமைத்துள்ளார்கள்”[21]

என்று கலித்தொகையில் அமைந்துள்ள அறக்கருத்துகள் குறித்து கருத்துரைத்துள்ளார். பெ. மாதையன் கலித்தொகையின் சிறப்பு குறித்து,

பின்பழந்தமிழ் இலக்கியமான கலித்தொகை குடும்ப வாழ்வையும் பொருளீட்டலையும் அடிப்படையாகக் கொண்டு இன்ப வாழ்வைப் பெரிதாக எண்ணிப் பொருளை நிலையாமை உடைய ஒன்றாகக் காட்ட முற்பட்டுள்ளது. பாலைக் கலி இந்தச் சிந்தனை மரபை மிக அழுத்தமாகப் பதிவுசெய்கிறது. சமுதாய உருவாக்க வரலாற்றின் அங்கமான இது தமிழிலக்கிய உருவாக்க வரலாற்றில் மிக நுட்பமாகவும் உன்னிப்பாகவும் கருதப்படவேண்டியதாக உள்ளது.[22]

என்று குறிப்பிட்டுள்ளார். கலித்தொகை குறித்து விரிவாக ஆராய்ந்த ராஜ்கௌதமன்,

“கலித்தொகைப் பாடல்களில் அறம், அரசியல், காமியம் வைதீகம், இசை சார்ந்த சொல்லாடல்கள் உரிப்பொருளுக்கு உவமைகளாகும் உத்தி திட்டமிட்ட ஒன்றாகத் தெரிகின்றது”[23]

என்று கருத்துரைத்துள்ளார். இவர் கலித்தொகையில் கூறப்பட்டுள்ள அறங்கள் யாவும் திட்டமிட்டவையே என்பதைத் தம் கருத்தாகக் கொண்டிருக்கிறார்.

**தலைமக்களின் கடமைகள்**

கலித்தொகையில் கூறப்பட்டுள்ள அறங்கள் பற்றிக் காண்பதற்கு முன்பாகச் சங்ககால தலைமக்களுக்குரிய கடமைகள் பற்றிச் சிறிது காணவேண்டியிருக்கிறது.

நற்குடியில் பிறந்த ஆண்மகன் ஒருவன் கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்குவதோடு, அறிவினைப் பெறுவதற்காகச் சான்றோர்களை நாடி பல நாடுகளுக்குச் செல்லவேண்டியிருந்தது. இதுவே அவனது தலையாய கடமையாகும். இல்லறம் செம்மையாக நிகழ்வதற்கு வேலி போன்ற அரசியலிலும் அவன் ஈடுபடவேண்டும். அவன் ஓர் அறிவுடைய அமைச்சனாகவும் அல்லது குறைகெடாது கொடுப்பதும் செய்வதும் ஆகிய தொழிலைச் செய்யும் வணிகனாகவும் இருத்தல் வேண்டும். வேளாண் குடிப் பிறந்தவனாகவும் அல்லது அந்நாட்டுப் படைவீரர்களில் ஒருவனாகவும் அவன் இருக்கவேண்டும். இதுவே ஒவ்வொரு குடிமகனின் கடமையுமாகும். அப்படிப்பட்ட ஒவ்வொரு ஆண்மகனும் தலைவியை அடிக்கடி பிரிந்து அயலூர்

போகவேண்டியவன் ஆகிறான். இவ்வாறு அவன் பிரிந்து போய் ஆற்றும் கடமைகள் எல்லாம் சிறந்த அறங்களாக அமைகின்றன. அவன் அவ்வாறு பிரிவது இல்லறத்தில் நிகழ்த்தவேண்டிய விருந்தோம்பல் முதலிய நல்லறங்களைச் செய்வதற்காகவே ஆகும்.

இவ்வாறு ஆண்மகனுக்குரிய கடமைகளையும் இலக்கியங்கள் வரையறுக்கின்றன. இவற்றைப் போல ஒவ்வொரு கற்புடை மகளிர்க்கும் சில கடமைகள் உள்ளன. இது குறித்து தொல்காப்பியர்,

கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்

மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்

விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்

பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்[24]

என்று கருத்துரைத்துள்ளார். இதையே திருவள்ளுவர்,

தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற

சொற்காத்துச் சோர்விலாள் பெண்.[25]

என்று ஒரே திருக்குறளில் சுருக்கித் தந்துள்ளார்.

தலைவனுக்குப் பாலை ஒழுக்கம் சிறந்த அறமாகக் கூறப்பட்டது போலத் தலைவிக்கு அவன் வருமளவும் தன்னலம் துறந்து மனையில் அவன் பிரிவுத் துயரை ஆற்றி இருப்பதே சிறந்த கடமை எனக் கூறப்படுகின்றது.

தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் பாலைத் திணைப் பிரிவைத் தொல்காப்பியர் ஆறு வகையாகப் பாகுபடுத்துவார்.

ஓதல் காவல் பகைதணி வினையே

வேந்தர்க் கூற்றுழி பொருட்பிணி பரத்தையென்

றாங்க ஆறே அவ்வயிற் பிரிவே.[26]

என்பன அவையாகும். பாலைத் திணையில் பரத்தையற் பிரிவு என்பது மிகவும் அருகியே நிகழ்ந்துள்ளன. ஆனால் இப்பாலைத் திணையில் அறம் கருதிப் பிரியும் பிரிவே மிகுதியாகும்.

கலித்தொகைக்கு விளக்கவுரை எழுதிய பொ.வெ. சோமசுந்தரனார் தொல்காப்பியரின்,

நாளது சின்மையும் இளமையது அருமையும்

தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும்

இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும்

அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்

ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்[27]

எனும் நூற்பாவை எடுத்துக் காட்டி இது தலைவன் பொருளீட்டுதற்கு ஊக்கம் தருகின்ற காரணங்களையும் அவ்வூக்கத்தைத் தடை செய்கின்ற காரணங்களையும் கூறுகின்றது என்கிறார். மேலும்,

> இந்நூற்பாவினால் அப்பேராசிரியர் பெறுதற்கரிய மக்கள் யாக்கை பெற்றவர் அப்பிறப்பிற் கேற்ற நல்ல வாழ்க்கை தொடங்குங்கால் தமது வாழ்நாளில் சிறுமையையும் மனத்தில் கொள்ளக் கடவர் எனவும், வாழ்நாள் வீழ்நாள் படாமல் ஒல்லும் வகையால் ஓவாதே அறவினை செய்யக் கடவர் எனவும், அவ்வறத்திற்கு வேண்டிய பொருளீட்டுதற் கண்ணும் ஊக்கமுடையாராதல் வேண்டுமெனவும், முன்னரே ஊழ்வலியால் பொருள் மிக்குடையவர் நல்வாழ்க்கைக்கு இவையே அமையும் என்னும் அமைதி யுடையவராதலும் வேண்டுமெனவும் தமது வாழ்க்கைத் துணைவியர்பால் வற்றாத பேரன்புடையவராகவும் இருத்தல் வேண்டும் எனவும், உலகிற்கு உணர்த்துகின்றார்; என்று உணர்தல் வேண்டும். எனவே, இப் பாலைக்கலியில் வருகின்ற பைந்தொடி மகளிர் தலைவனைத் தடுப்பது அவன் செயல் மேலே கூறிய அறப் பண்புகளோடு பொருந்தாத பொழுதேயாம் என்று உணர்க.[28]

என்று கருத்துரைத்துள்ளார். இவரது இக்கருத்தின்வழி தலைவியும் தோழியும் தலைவனை இடித்துரைத்து அவனைப் பொருளீட்டச் செல்லவிடாமல் தடுப்பது அறத்தொடு பொருந்தாத பொழுது என்பதை நாம் உணரமுடிகிறது.

கலித்தொகையில் காணப்படுகின்ற அறக்கருத்துகளை, காதல் அறம், உடன்போக்கு அறம், பொருளீட்டல் அறம், இல்லற அறம், நிலையாமை அறம், உயர்ந்தோர் தாழ்ந்தோர் அறம், சான்றோர் அறம், அரச அறம், அஃறிணை உயிர்களின் அறம், நிலையாமை அறம், ஈதல் அறம், மக்கள் அறம் என்னும் வகைமைகளாகப் பாகுபடுத்த முடியும். இந்த அறங்கள் பொருளீட்டச் செல்லக் கருதும் தலைவனுக்கு அறிவுரை வழங்குவதாகவும் நாட்டை ஆளும் மன்னனுக்கு அறிவுரை வழங்குவதாகவும் சான்றோர்களுக்குரிய உயர்ந்த அறங்களையும் உயர்ந்தோர், தாழ்ந்தோர்களுக்குரிய அறங்களையும் வழங்குவதாகவும் அஃறிணை உயிர்களின் அறங்களையும் இல்வாழ்க்கையில் தலைமக்கள் நிகழ்த்துகின்ற அறத்தினையும் வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. இவ்வறங்கள் பற்றிப் பின்வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

**காதல் அறம்**

சங்ககாலத்தில் இளம்பெண்களால் காதல் அறமாகப் கருதப்பட்டிருக்கின்றது. அறத்தொடு நிற்றல் பற்றிய துறைகள் இதற்குச் சான்றுகளாக அமைகின்றன. காதலை ஏற்காத தாயை “அறனில் யாய்”[29] எனவும் “அறனில் அன்னை”[30] எனவும் தலைவியும் தோழியும் பழித்துள்ளனர். அதுமட்டுமல்ல “ஊரோ அறனின்று”[31] என்றும் அவர்கள் ஊரையும் பழித்துள்ளனர். காதலில் முறையாகச் செயல்படாதவனை, “அறனிலோய்”[32], “அறனில்லான்”[33] “அறனில்லவன்”[34] என்றும் பழித்துள்ளனர். தலைவியை உடன்போக்கு அழைத்துச் சென்ற தலைவனை அன்னை, “அறனிலாளனொடு இறந்தனள்”[35] எனச் சாடுகின்றாள். காதலி பார்வையில் அறமாகக் கருதப்பட்ட காதல், தாயின் நிலையில் அறனல்லவாகக் கருதப்பட்டுள்ளமை சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

*களவுக் காலத்து ஒழுகிய தலைமகனுக்குத் தலைமகளை மணமுடித்து வைக்காமல் நொதுமலர்க்குக் கொடுத்தால் இயற்கையும் தன் பயனைத் தராது என்னும் உயர்ந்த அறம் கலித்தொகையில் பேசப்பட்டுள்ளது. இதனை,*

*சிறுகுடி யீரே சிறுகுடி யீரே*

*வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா*

*கொல்லை குரல்வாங்கி ஈனா மலைவாழ்நர்*

*அல்ல புரிந்தொழுக லான்.*[36]

*என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. தலைவியின் பெற்றோர் அறம் பிழைத்தால் வள்ளிக் கிழங்கு நிலத்தில் வீழாது, மலைமேல் தேனீக்கள் கூடு கட்டாது, கொல்லையில் தினைக் கதிர்கள் முற்றி விளையாது என்னும் அறங்கள் இப்பாடலடிகளில் உணர்த்தப்பட்டுள்ளன. இப்பாடலடிகள் குறித்து ராஜ்கௌதமன்,*

> *"குறவர் கூத்துப் பாடலைப் புலவன் கலிப்பாவில் புணர்க்கும்போது தொல்குடிகளின் நம்பிக்கையை – குறிப்பாக வேட்டை விளைச்சல், தேன், கிழங்கு என்னும் வடிவங்களில் எழுந்த செழிப்பு சார்ந்த நம்பிக்கையை, கணவனைத் தெய்வமாகத் தொழும் கற்பின் வல்லமையோடு இணைக்கும் வைதீகச் செருகலை செய்கிறான்"*[37]

*என்று குறிப்பிட்டுள்ளார். மேலும்,*

> *"இதில் புலவன் 'மலைவாழ்நர் அல்ல புரிந்து ஒழுகலான்' என்பதில் 'அல்ல' (தீமை) என்று கூறவருவது அவன் காலத்தில் மேனிலை பெற்ற சமயம் சார்ந்த அறக்கருத்தாகும்"*

> *"வேட்டைக்கும் விளைச்சலுக்கும் கற்பையும், அறத்தையும் புலவன் கற்பித்தது அவன் காலத்தின் வைதீக தரும கலாச்சாரச் சூழலின் தாக்கத்தால் என்பது விளங்கும்"*[38]

*என்று கருத்துரைத்துள்ளார். இவரது இக்கருத்து கலித்தொகைப் பாடல்கள் எழுந்த காலத்தில் வைதீகச் சார்பு மிகுதியாக இருந்ததை வெளிப்படுத்துகின்றது.*

இவற்றின் வழியாகத் தீவினை செய்பவர்கள் நாட்டில் நிலம் முதலிய பஞ்ச பூதங்களும் தத்தம் நலங்களை நல்காது என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

**உடன்போக்கு அறம்**

காதல் முற்றிய நிலையில் பெண் கொடுக்க மறுக்கும் சூழலில் உடன்போக்குச் செல்வது இயல்பு. அப்படித் தலைமக்கள் உடன்போக்குச் செல்வதை எந்தத் தாயும் விரும்புவதில்லை. அது அவளால் அறமல்லவாகக் கருதப்பட்டிருக்கின்றது. ஆனால் கலித்தொகையில் சான்றோர்கள் அந்நிகழ்வை அறமாகக் கருதினர் என்பது தெரிய வருகின்றது.

தலைவி ஒருத்தி தன் காதலனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். அவளைத் தேடிச் செல்லும் செவிலித்தாய் வழியில் வருவோரிடம் இத்தகையோரைப் பற்றிக் கேட்கிறாள். அதற்கு அவர்கள்,

சந்தனம் மலையில்தான் பிறக்கின்றது. அது அணிபவர்களைத் தவிர அந்த மலைக்கு எந்தப் பயனையும் தராது. அதைப் போல, வெண்மையான முத்துகளும் நீரில்தான் பிறக்கின்றன. அது அணிபவர்களைத் தவிர அந்த நீருக்கு எந்தப் பயனையும் தந்துவிடாது. யாழிலிருந்து இனிய இசை பிறக்கின்றது. அது கேட்பவர்களைத் தவிர அந்த யாழுக்கு எந்தப் பயனும் தராது. அதுபோலத்தான் உம் மகளும் என அந்தணர் செவிலித்தாயிடம் கூறுவதாக அமைந்த,

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை

மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யும்

நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை

நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்

தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே

ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை

யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்

*சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே*

*இறந்த கற்பினாற்கு எவ்வம் படரன்மின்*

*சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்*

*அறந்தலைப் பிரியா வாறுமற் றதுவே.*[39]

*என்னும் பாடலில் உடன்போக்கை அறமாக அந்தணர் ஏற்றுக்கொண்டுள்ளது தெரிய வருகின்றது. இது அக்காலச் சமுதாய நிலையாகவும் வெளிப்பட்டுள்ளமை அறிய முடிகிறது.*

*அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்*

*பிறன்பழிப்ப தில்லையாயின் நன்று*[40]

*என்னும் குறட்பாவின் கருத்தைப் பின்பற்றி எழுதப்பட்ட ஒரு அறமாக இது கருதப்படுகின்றது. ஔவையாரும்கூட "இல்லற மல்லது நல்லற மன்று" (ஆத்திச்சூடி பா. 3) என்று கூறி இக்கருத்தினையே வலியுறுத்தியுள்ளார்.*

*உடன்போக்குச் சென்றது அறமே என்று கூறிய அந்தணர் குறித்து ராஜ்கௌதமன்,*

*"கலித்தொகை (9வது பாடல்) காட்டும் அந்தணன், இடம்விட்டு இடம்பெயர்ந்து பயணம்போகிறவனாக, எது அறம் என்று தீர்ப்பிடுகிற சமய-அறவகைப்பட்ட அதிகாரத்தை உடையவனாக, ஆசாரம் தவறாதவனாக அனைவராலும் எற்றுக்கொள்ளப்பட்டவனாக இருக்கிறான்."*[41]

*என்று கருத்துரைத்துள்ளார். அந்தணர் உடன்போக்கு சென்றதை அறம் எனக் கூறுவதற்கு,*

*இந்த உடன்போக்கு 'தருமமா?' என்ற அறக்கவலையால் தோன்றிய கேள்வி சமயம்சார்ந்த அறங்கள் மேலோங்கிய- மாறிய ஒரு சமுதாயத்தில் எழுந்திருப்பதையும், அதனை மதுரைப் புலவர்கள் உருவாக்கிய இலக்கியத்தில் வைதீக பிராமணரைக் கொண்டு அறம் அங்கீகரிப்பதையும் இந்தப்பாடலால் புரிந்துகொள்ளலாம்.*[42]

என்று குறிப்பிட்டுள்ளார். இவர் பார்ப்பனர்களைக் கொண்டு அறக்கருத்துகள் கூறப்பட்டதற்கு வைதீக சமயம் அக்காலத்தில் மேலோங்கியிருந்ததே காரணம் என்று குறிப்பிடுகின்றார். மேலும் இவர்,

> பழந்தமிழ் அகவல்பாடல்களில் பாலைத்தினையில் கயமனார் என்ற புலவர் பாடிய உடன்போக்குத் துறைப் பாடல்களிலும்கூட உடன்போக்கு அறச்சிக்கலுக்குரியதாகவோ, அந்தணரின் தீர்ப்புக்குரியதாகவோ காணப்படவில்லை என்பது கவனத்திற்குரியது. கலிப்பாடல் (9) இது சமயவகைப்பட்ட அறச்சிக்கலாக மாற்றமடைந்திருப்பதை உணரலாம்.[43]

எட்டுத்தொகையில் உள்ள ஏனைய அகநூல்களின் மரபிலிருந்து கலித்தொகை மரபு மாற்றமடைந்துள்ளதை இவரது கூற்று வெளிப்படுத்துகின்றது. மேலும் இவர்,

> பாலைக்கலியில் 25-வது பாடல்வரை அறக்கருத்துக்களும், இதிகாசக் கதைப்பகுதியும் உவமைகளாகக் கொண்டு ஏறத்தாழ பழந்தமிழ் அகவல் மரபின் பாலைத்திணைப் பாடல்களின் பொருண்மையில் பெரிய அளவிற்கு மாற்றமின்றிப் புனைந்துரைக்கப்படுகின்றன. அவ்வாறிருந்தாலும் பல பாடல்கள் பழந்தமிழ் அகவல் மரபின் புதிய புனைவுகளாகவும், வீச்சுகளாகவும் உள்ளன.பலவற்றில் புதுமைகளும் காலத்தால் ஏற்பட்ட மாற்றங்களும் கலந்துள்ளன.[44]

என்று கருத்துரைத்துள்ளார். ஆய்வாளர்கள் பலரும் கலித்தொகையைப் பின்பழந்தமிழ் நூலாகத்தான் கருதுவர். அந்த வகையில் இவரும் இந்நூல் காலத்தால் பிற்பட்டது என்பதற்கு இச்சான்றினைக் காட்டுகின்றார்.

**பொருளீட்டல் அறம்**

கற்பு வழிப்பட்ட வாழ்க்கையில் பொருளீட்டலும் அதனை இல்லாதவர்களுக்கு ஈதலும் சிறந்த அறமாகக் கருதப்பட்ட காலம் சங்ககாலம். கலித்தொகை, குடும்ப வாழ்வையும் பொருளீட்டுதலையும் அடிப்படையாகக் கொண்டு இன்ப வாழ்வைப் பெரிதாக எண்ணிப் பொருளை நிலையாமை உடைய ஒன்றாகக் காட்ட முற்பட்டுள்ளது. பாலைக் கலி இந்த மரபை மிக

அழுத்தமாகப் பதிவுசெய்துள்ளது. சான்றோர்கள் பொருளீட்டும் நல்ல காலம் அறிந்தே செல்வர். அதுமட்டுமல்ல நல்ல நெறியில் நின்றுதான் பொருளையும் ஈட்டுவர். பொருளின் சிறப்பைக் கூறும் திருக்குறள் அப்பொருளீட்டுவதற்குரிய வழியைக் கூறுவதைவிட பொருளை ஈட்டக் கூடாத நெறிகளையே பெரிதும் பேசுகின்றது.

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்

புல்லார் புரள விடல்[45]

எனவும்,

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்

பிற்பயக்கு நற்பா லவை[46]

எனவும்,

சலத்தாற் பொருள்செய்வதே மார்த்தல் பசுமட்

கலத்துணீர் பெய்திரீஇ யற்று[47]

எனவும் கூறித் திருவள்ளுவர் அறிவுறுத்துகின்றார்.

பாலைக்கலியின் முதல் பாடல் பொருளீட்டல் அறம் குறித்து விரிவாகப் பேசுகின்றது.

“தொலைவாகி இரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்

மலையிறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருளாகுமோ”[48]

என்னும் அடிகள் தம்மிடம் இருந்த பொருள்களையெல்லாம் கொடுத்துத் தீர்த்த பின்பு, பொருள் இல்லாதிருக்கும்பொழுது, தம்மிடம் வந்து ஒருவர் இரந்தால் அவர்களுக்குப் பொருள் இல்லை என்று கூறாமல் கொடுப்பதே சிறந்த அறமாகும். அப்படியல்லாமல் இல்லை என்று கூறுவது இழிவாகக் கருதப்பட்டது. இப்பாடலில்,

“இல்லென விரைந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்

கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ”[49]

என்னும் அடிகளும் வருகின்றன. எக்காலமும் எமக்குப் பொருளில்லை என்று கூறி வந்து இரந்தவர்களுக்கு சிறிதும் கொடுக்காமல் இருப்பது இழிவு என்பதை இப்பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. இதே பாடலில்,

“இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்

கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ”[50]

என்னும் அடிகள் வருகின்றன. தம்முடைய இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் இல்லை என்று கூறி வந்து இரந்தவர்களுக்குச் சிறிதும் கொடுக்காமல் இருப்பது இழிவாகும்.

இப்பாடலடிகள் பொருளீட்டல் பொருளல்ல என்பதை வெளிப்படுத்துகின்றன. ஆனால் தலைவியை விட்டுப் பிரியாமையே சிறந்த பொருள் என்பதையும் இந்தப் பாடல் வலியுறுத்துகின்றது. இவை போன்ற அடிகள் கலித்தொகையின் பாலைக்கலியில் பரவலாகக் காணக் கிடக்கின்றன.

தலைவன் தலைவியை விட்டுப் பொருளீட்டச் செல்லக் கருதுகிறான். இதனை உணர்ந்த தோழி அவனுக்கு,

அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்

..... ……….

சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா. [51]

என்னும் அறக் கருத்தை எடுத்துக்கூறித் தடுக்கிறாள். கிடைத்தற்கரிய பொருளை ஈட்டச் செல்ல நினைக்கும் தலைவன் அவன் சென்றவுடன் உடனே, ஓரிடத்தே பொருள் கிடைத்துவிடாது என்பதை இவ்வடிகள் உணர்த்துகின்றன. இது அக்காலச் சமுதாய நிலையை வெளிப்படுத்துகின்றது.

இதற்கும் ஒருபடி மேல் சென்று பொருள் ஈட்டச் செல்வது அருள் அல்ல என்றும் அது ஊழ்வினை பாற்பட்டது என்றும் தோழி தலைவனுக்கு விளக்கும் வகையில்,

பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னும்

அருளில் சொல்லு நீசொல் லினையே

…………………………………………………………

கிழவ ரின்னோ ரென்னாது பொருடான்

பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்[52]

என்னும் கலித்தொகை பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடலடிகள் தலைவியை விட்டுத் தலைவன் பொருள்வழிப் பிரிதல் அருளல்ல என்று கூறுகின்றன. அதோடு தலைவனைப் பார்த்து நீ ஈட்டக் கருதிய பொருள் நீ நினைத்தபடி ஈட்டக் கூடிய தன்மை உடையது அல்ல. அது ஊழ்வினைப் பாற்பட்டது. ஆதலால் ஒருசில நேரங்களில் அம்முயற்சி கைகூடாமல் போனாலும் போகலாம் எனத் தோழி அறிவுறுத்துகின்றாள்.

பொருளீட்டச் செல்வது அருளல்ல என்று கூறியவள், அது நீ நினைத்தபடி ஓரிடத்து கிடைத்துவிடாது என்று கூறியவள், அது ஊழ்வினை பாற்பட்டது என்றும் கூறியவள் அதற்கும் ஒருபடி மேல் சென்று,

செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொரு

ளிம்மையு மறுமையும் பகையாவ தறியாயோ[53]

என்று கூறுகின்றாள். பொருள் தேடும் முறைமையை விட்டு நீங்கி பொருள் தேடுபவர்க்கு அப்பொருள் அவரை நீங்குவதோடு இப்பிறவியிலும் மறுபிறவியிலும் அவர்க்கே பகையாகும் என்பதை நீ அறிவாயோ எனத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

**கற்பு அறம்**

கணவனையே தெய்வமாக வணங்கும் தலைவியின் ஆற்றல் மழையைப் பெய் எனப் பெய்விக்கும் தன்மையுடையது. அப்படிப்பட்ட தலைவியின் மேனியில் தலைவனின் பிரிவால் பசப்பு உண்டாகும் என்று கருதி அவனுடைய முயற்சியை அறக்கடவுள் விரைந்து சென்று விலக்கும் என்று தோழி கூறுகிறாள். இக்கருத்தினை,

செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வர் மாட் டினையன

தெய்வத்துத் திறனோக்கித் தெருமா றேமொழி

வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்

நிறனோடிப் பசப்பூர்த லுண்டென

அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே[54]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. பொருள் தேடிச் செல்லும் தலைவனின் வழிச் செலவில் அறமே பகலனின் வெம்மையை விலக்கும் என்னும் அறக்கருத்து இப்பாடலில் வெளிப்படுகின்றது.

கணவனைத் தெய்வமாக வணங்கும் மனைவியின் கற்புத் திறத்தால் அவள் பெய் என்று கூறினால் மழையும் பெய்யும் என்னும் கலித்தொகை கருத்திற்கு,

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் மழை[55]

எனும் திருக்குறள் கருத்து மூல ஆதாரமாகவும் வலுவூட்டுவதாகவும் உள்ளது. இதே கருத்தினை சிலப்பதிகாரமும்,

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாளை

தெய்வம் தொழும் தகைமை திண்ணமால்[56]

என்று வலியுறுத்துகின்றது. கலித்தொகை, திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்கள் தெய்வத்தைத் தொழாமல் கணவனையே தெய்வமாகத் தொழும் கற்பினரின் சிறப்பையும் இயல்பையும் எடுத்துக் கூறுகின்றன. இது கற்பு அறமாகப் போற்றப்படுகின்றது.

பொருளீட்டச் சென்ற தலைவன் பொருளீட்டியபின் மீண்டு வருவதை உணர்ந்த தலைவி தோழியிடம்,

பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்

வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி[57]

என்று கூறுகிறாள். இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியர்,

பொருள் அளித்தலுந் தெறுதலும் புணர்ச்சியுந் தருமென எண்ணிச்சென்ற காதலரென்க. இதனாற் போந்த பொருள் அருளியோர்க்கு அளித்த அறத்தாலே பேணாரை அழித்துப் பொருளைத் தேடி அப்பொருளாற் புணர்ச்சி பெறுவேனென மூன்றன் பகுதி கூறினானாயிற்று.[58]

என்று விளக்கம் தந்துள்ளார். இக்கருத்திற்கு அரணாக,

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்

ஏனை இரண்டும் ஒருங்கு[59] 760

என்னும் குறட்பா அமைந்துள்ளது.

**நிலையாமை அறம்**

பொருளின் நிலையில்லாத் தன்மை பற்றியும் கலித்தொகை மிகுதியான கருத்துகளைப் பதிவுசெய்துள்ளது. தோழி தலைவனிடம் பொருளின் நிலையாமையை எடுத்துரைத்து தலைவியோடு சேர்ந்து வாழ்கின்ற இல்வாழ்க்கையே சிறந்த பொருள் என அறிவுறுத்துகின்றாள். அப்பொருளில் அமைந்த,

யாழினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ

……………………………………………………………….

திருவினும் நிலையிலாப் பொருளையும் நச்சுபவோ

………………………………………………………………

அரைசினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ[60]

என்னும் பாடலடிகள் யாழிசை, நற்பேறு, அரசு என்னும் மூன்றும் நிலையில்லாதது என்பதை தெளிவுறுத்துகின்றன. நிலையில்லாத இந்தப் பொருளை முறையின்றி ஈட்டுவது, இப்பிறவியில் மட்டுமல்ல மறுபிறவியிலும் பகையாக அமையும் என இப்பாடலடிகளில் அறிவுறுத்தப்பட்டுள்ளது.

**உயர்ந்தோர் தாழ்ந்தோர் அறம்**

இயற்கைக் காட்சிகளை வருணிக்கும் புலவர்கள் அதன் நடுவே சங்ககால மக்களின் இயல்புகளையும் பதிவிட்டுள்ளனர். அதில் உயர்ந்தோர்க்குரிய குணங்களும் உயர்ந்த குணங்களைப் பின்பற்றாத தாழ்ந்தோர்க்குரிய குணங்களும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சான்றோர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று கூற வந்த கலித்தொகை அவர்களின் இயல்புகளை,

முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்

பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்''[61]

என்று வரையறுக்கின்றது. ஒருவர் தாம் துன்பத்திலிருக்கும் காலத்து உதவி செய்தவருக்கு தாமும் உதவி செய்வதைக் கடமையாகக் கொள்வர் பீடுடையாளர் என்னும் அறக்கருத்தை இவ்வடிகள் பதிவுசெய்கின்றன.

அறிவுடையவர்கள் ஒரு செயலை முடிப்பதற்கு அதற்குரிய காலத்தை எதிர்பார்த்து காத்திருப்பர் என்பதைக் கலித்தொகை ''ஆன்றவர் அடக்கம் போல்''[62]என்னும் அடிகளில் சுட்டுகின்றது. இதே பாடலில் நிலையாமையை உணர்ந்தவர்களுடைய கொடை எல்லோருக்கும் பயன்படும் என்பதை ''உணர்ந்தவர் ஈகைப்போல்'' என்னும் அடிகள் சுட்டுகின்றன.

தீது இல்லாதவனுடைய செல்வமும் சோம்பலில்லாதவனுடைய செல்வமும் தழைத்துப் பெருகும் என்னும் மிக உயர்ந்த அறக்கருத்தைக் கலித்தொகை பதிவுசெய்கின்றது. அதுமட்டுமல்ல இளமையிலேயே வறுமைத் துன்பத்தை அனுபவித்தவன் அந்த இளமையினால் கிடைக்கக்கூடிய அனைத்து இன்பத்தையும் இழந்துவிடுகிறான். பிறர் ஒருவருக்கு எந்தப் பொருளையும் கொடுக்க மனமில்லாத சிறியவனுடைய செல்வம் அவனுக்கு மட்டுமல்ல, அவனுடைய சுற்றத்தாருக்கும் எந்தப் பயனையும் தராது என்று கூறியதோடு நில்லாமல் அவர்களுக்கும் அது துன்பத்தையே தரும் என்று கூறுகின்றது. இக்கருத்து அன்றைய சூழலில் மட்டுமல்ல என்றைக்குமே பொருந்துவதாகவே உள்ளது. இதனை,

*வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்*

*சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி*

*யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்*[63]

*என்னும் கலித்தொகை அடிகள் தெளிவுறக் காட்டுகின்றன. இக்கருத்தினை,*

*ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை*

*பெருஞ்செல்வம் உற்றக் கடை*[64]

*எனும் குறட்பாவும் வலியுறுத்துகின்றது.*

*இதன் மறுபுறத்தே வறியவர்களுக்கெல்லாம் வேண்டியபொழுது பொருளைக் கொடுத்து இல்லறமாற்றும் தீவினை இல்லாதவர்களுடைய செல்வம் குறித்தும் கலித்தொகை பதிவுசெய்கின்றது.*

*ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய*

*தீதிலான் செல்வம்போல்*[65]

*என்னும் அடிகளில் தீது இல்லாதவனுடைய செல்வம் பெருகும் என்பதையும் கலித்தொகை சுட்டிக் காட்டுகின்றது.*

*இயற்கைக் காட்சிகளை விளக்கும்போது அறக்கருத்துகளை மிகுதியாகக் கலித்தொகை எடுத்துக் காட்டுகின்றது. தலைவனின் பிரிவைத் தாங்காமல் வருந்தியிருக்கும் தலைவியின் நிலையைக் கண்ட ஊரார் அலர் தூற்றுகின்றனர். இதனைப் பதிவுசெய்யும்போது பாலைப்பாடிய பெருங்கடுங்கோ இழிந்தோர்களுடைய இயல்பையும் பதிவிட்டுள்ளார்.*

*சிறப்புச்செய் துழையராய்ப் புகழ்போற்றி மற்றவர்*

*புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்*[66]

*என்னும் பாடலடிகளில், தம்மிடத்தில் இருக்கும் ஒருவரைப் புகழ்ந்து, வாழ்த்தி அவருக்குச் சிறப்பு செய்து, அவர் இல்லாத பொழுது அவரைப் பற்றிப் பலர்க்கும் புறங்கூறும் உறவு கேடானது என்பதையும்,*

*பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை*

*பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல்*[67]

*என்று பதிவுசெய்கின்றது. மேலும் மனம் பொருந்திய நண்பர் இருவரில் ஒருவர் கூறிய மறைபொருளை அவன் இல்லாத போது பிறர்க்குச் சொல்லும் பெருமையில்லாத உறவு தீங்கானது என்பதையும் கலித்தொகை சுட்டுகின்றது.*

*ஆறல்ல மொழிதோற்றி யறவினை கலக்கிய*

*தேறுகண் நறவுண்டார் மயக்கம்போற் காமம்*[68]

*என்னும் அடிகளுக்கு அறநெறியில்லாத தீயமொழிகளைத் தம்மிடத்தே கொண்டு அறமாகிய தொழில்களைத் தம்மிடத்து கொள்ளாமல் கள்ளையும் நறவையும் உண்டவர்களுடைய உலகியல் கெட்ட மயக்கம் போலே காமம் என்னும் உவமையை வழங்கியுள்ளார்.*

**சான்றோர் அறம்**

*சான்றோர்களின் கடமைகள், அற இயல்புகள் குறித்தும் கலித்தொகை பல கருத்துகளைப் முன்வைத்துள்ளது. அந்த வகையில் சான்றோர்களுக்குரிய கடமைகள் குறித்து,*

*சான்றவிர் வாழியோ சான்றவிர் என்றும்*

*பிறர்நோயும் தந்நோய்போற் போற்றி அறனறிதல்*

*சான்றவர்க் கெல்லாங் கடனானால் இவ்விருந்த*

*சான்றீர் உமக்கென் றறிவுறுப்பேன்*[69]

*என்று கலித்தொகை கூறுகின்றது. நற்குணங்களெல்லாம் அமைந்த சான்றோர்களே! நீவிர் வாழ்வீராக! பிறர்நோயையும் தன்நோய் போலப் பேணி அதனால் பெறும் அறனை அறிந்து செல்லுதல் உலகில் உள்ள சான்றோர்களுக்கெல்லாம் அது முறைமையாகும். அது உமக்கும் முறைமை என்று கருதுகிறேன் எனத் தலைவன் சான்றோர்களுக்குக் கூறுவதாக இப்பாடலடிகள் அமைந்துள்ளன. இதே கருத்தினை வலியுறுத்துவதாக,*

அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்

தந்நோய்போற் போற்றாக் கடை[70] 315

என்னும் குறட்பா அமைந்துள்ளது.

மேலது கலித்தொகை பாடலில்

திங்கள் அரவுறின் தீர்க்கலா ராயினும்

தங்காதல் காட்டுவர் சான்றவர்[71]

எனும் அடிகள் வருகின்றன. இவ்வடிகள், திங்களைப் பாம்பானது சென்று மறைக்கிறது. அப்பொழுது சான்றோர்கள் அதன் வருத்தத்தைத் தீர்க்க முடியவில்லை என்றாலும் அதன் மேல் தமக்கு உள்ள காதலைக் காட்டித் துன்புறுவர். மேலும், சான்றோர்கள் ஒருவர் துன்பத்தால் பொருள் இல்லாத தன் நிலைமையைச் சொன்னவர்க்கு அப்பொருளை அவர்க்குக் கொடுக்க முடியாதபோது தன் உயிரைத் துறப்பர் எனும் உயரிய அறக் கருத்து,

………. இடும்பையால்

இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால்

தன்மெய் துறப்பான்[72]

என்னும் பாடலடிகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. இதே கருத்தினைக் கலித்தொகையின் மற்றொரு பாடல்,

செறாஅது ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலின்

சாதலுங் கூடுமோ மற்று[73]

என்னும் பாடலடிகளும் வெளிப்படுத்துகின்றன.

மேலும் புகழ் வந்து சேரும் பொழுது சான்றோர்கள் தலைசாய்த்து நிற்பர் என்னும் அறக் கருத்தினைத் “தம்புகழ் கேட்டார்போல் தலைசாய்த்து” என்னும் கலித்தொகை அடிகள் வெளிப்படுத்துகின்றன.

நல்ல நெறியினைக் கடைபிடிக்கும் சான்றோர்கள் தாம் பேசும்போது சொற்களைக் கவனமாகக் கையாளுவர். அந்த வகையில் சான்றோர் தாய் உயிர்

பெய்து பெறும் குழந்தையைப் போலத் தம் சொற்களைக் கருத்துடன் பேணுவர். ஒன்றைச் சொல்லிய பின்னர் அதனிலிருந்து விலகுவதும் அதனை மாற்றி வேறு சொல்வதும் சான்றோர்க்குரிய செயல் அன்று. இக்கருத்தினை,

தாய் உயிர்பெய்த பாவை போல்

நலனுடையார் மொழிக்கண் தாவார்[74]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

தவம் செய்தால் கிடைக்கக்கூடிய பயன் குறித்து கலித்தொகை,

அடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்

உடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே[75]

என்று கூறுகின்றது. மனவேட்கை அடங்கிய அரிய விளக்கத்தை உடைய செய்தற்கரிய தவத்தை முயன்றோர் தம் உடம்பை இவ்வுலகிலே போகவிட்டுச் சுவர்க்கத்தை இனிதாகப் பெற்றாற்போல என்னும் உவமையின் வழி மக்கள் அருந்தவத்தைச் செய்தால் சுவர்க்கத்தை அடையலாம் என்னும் அறம் கூறப்பட்டுள்ளது.

**அரச அறம்**

சங்க இலக்கியங்களில் அரசர்களுக்குரிய அறம் என்றால் பலருக்கும் புறநானூறு என்றுதான் நினைவு வரும். ஆனால் அரசர்களுக்குரிய அறம் குறித்து அகநூலாகிய கலித்தொகையிலும் மிகுதியான கருத்துகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

அரசனின் வெண்கொற்ற குடை குடிமக்களுக்கு அறநிழலாகும். செங்கோல் பொய்யாமையை நுவலும், முரசு பாதுக்காபை ஒலிக்கும், மிகுந்த கொடும்போரில் வாள்முனையில் வந்து அகப்பட்டவனை ’என் நிலைக்குத் தகுதியற்றவன் இவன், இவனைக் கொல்லேன்’ என விட்டுச் செல்பவனே உயர்ந்த குணமுள்ள வீரனாவான் என்பன போன்ற அறங்கள் பல கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.

அமைச்சன் முறையறிந்து வரி வசூல் செய்யவேண்டும், அரசன் செங்கோல் மாறாமல் ஆட்சி செய்யவேண்டும் என்பதை,

அலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள்வெஃகிக்

கொலையஞ்சா வினைவராற் கோல்கோடியவனிழ

லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்[76]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.இவ்வடிகள், குடிமக்கள் வருந்தும்படி கொலை தொழிலுக்கு அஞ்சாத அமைச்சரால், நெறியில்லாமல் பொருள்பெறப்பட்டு அதனைக் கொண்டு அரசன் செங்கோல் கொண்டு நாட்டை வழிநடத்தாமல் கொடுங்கோல் முயன்று நாட்டை வழிநடத்தும் அரசனுடைய குடை நிழலில் தங்கிய மக்கள் துன்பத்தையே அடைவர் என்று கூறுகின்றது. அரசன், அமைச்சனின் அறநெறியில்லாத் தன்மை இங்குச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

அரசர்க்குரிய இயல்புகள் குறித்தும் கலித்தொகை பதிவுசெய்துள்ளது. ஒரு அரசன் தன்னைவிட வலிமையுள்ள அரசன் தன்மேல் படையெடுத்து வருவதை அறிந்து அவனிடம் போரிட்டுத் தோற்றுப் போகாமலும் தன் நாட்டுக்கும் குடிமக்களுக்கும் துன்பத்தை உருவாக்காமலும் சாதுரியமான செயல்படவேண்டும் எனக் கலித்தொகை கூறுகின்றது. அதாவது படையெடுத்து வருகின்ற அரசனை நண்பராக்கும் வழியைக் கண்டறிந்து அதனை மேற்கொள்ள வேண்டும் என்பது அதுவாகும். இதனை,

வலிமிகு வெகுளியால் வாளுற்ற மன்னரை

நயனாடி நட்பாக்கும் வினைவலர் போல்[77]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. அரசனுக்குரிய கடமைகளில் மிக முக்கியமானது தன்னாட்டின்மேல் பகையரசன் படையெடுத்து வந்து தன்னாட்டை அழிக்காமல் காப்பதாகும். அத்தகைய துன்பம் வந்தால் மக்கள் என்ன செய்வார்கள் என்பது குறித்து,

பண்புடை நன்னாட்டுப் பகைதலை வந்தென

அதுகைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்

பதிபடர்ந் திறைகொள்ளுங் குடிபோல[78]

கலித்தொகை என்று பதிவுசெய்கின்றது. பண்புடைய நாட்டின்மீது பகைவர் படையெடுத்து வந்தபோது அந்நாட்டை விட்டு அகன்றுபோய், தன் நாட்டைக் காக்கும் அரசனின் குடைநிழலில் குடிமக்கள் தங்குவார்கள். அந்த அரசன் பகைவரை வலி கெடுமாறு செய்தபின் அக்குடிமக்கள் தம் நாட்டிற்கு மீண்டும் வருவார்கள். இதுவே மக்கள் தங்களால் செய்யமுடிந்த செயலாகும். இப்படிப்பட்ட, நாட்டை ஆளும் முறைமை தெரியாத அரசன் கீழிருக்கும் குடிமக்கள் எத்தகைய துன்பத்தை அடைவர் என்பது குறித்தும் கலித்தொகை,

முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு[79]

என்று பதிவிட்டுள்ளது.

அரசன் தன் வலிமைக்கு ஏற்ற அரசனோடு போரிடவேண்டும். மாறாகத் தன் நிலைக்கு ஒப்பாகாதவன் போருக்கு வந்தால் அவனை வெட்டி வீழ்த்தக்கூடாது. அவ்வாறு வீழ்த்துவது வீரமன்று என்பதை,

மீளும் புகர் ஏற்றுத் தோற்றம் காண் மண்டு அமருள

வாளகப் பட்டானை ஒவ்வான் எனப் பெயரும்

மீளி மறவனும் போன்ம்[80]

என்னும் அடிகள் அறிவுறுத்துகின்றன. கொடும்போரில் வாள் முனையில் வந்து அகப்பட்டவனை கொல்லாது விட்டுவிடுவதே வீரம். அதுவே அறம் எனக் கலித்தொகை கூறுகின்றது. ஆனால் இத்தகைய அரசன் யாரிடமும் பொய் கூறாத அருந்தவ முனிவன் போல் விளங்க வேண்டும் என்றும் கலித்தொகை கூறுகின்றது. இதனை,

ஐயந்தீர்ந் தியார்கண்ணும் அருந்தவ முதல்வன்போல்

பொய்கூறா யெனநின்னைப் புகழ்வது கெடாதோ[81]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. இது அரசனுக்குரிய இயல்புகளில் மிக முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. பொய் கூறக்கூடாது என்று கூறிய கலித்தொகை அதற்கும் ஒருபடி மேற்சென்று

வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்

நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த

தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போல்[82]

என்று கூறுகின்றது. அதாவது, பகைவர்மேல் போர் மேற்கொண்டு தன் ஒழுக்கத்தால் அவனை வெல்லும் அரசன்புகழை உடையவன் ஆவான். அவன் நல்ல அற நூல் நெறியால்பல உயிர்களையும் பாதுகாத்துத் தீவினையால் உண்டான நடுக்கம் மனதில் தோன்றாதபடி தான் செய்த பழவினையின் பயனை நுகர்வதற்குச் சுவர்க்கத்தை விரும்பிப் போவான் என்று கூறுகின்றது. கலித்தொகைக்கு விளக்கவுரை எழுதிய பொ.வே. சோமசுந்தரனார் இது குறித்து,

> “விளங்கிய வொழுக்கத்தால் வெல்புகழ் மன்னவன் என மாறி, புகழுக்கு ஒழுக்கத்தை ஏதுவாக்கினார் உரையாசிரியர் (நச்) என்னை? இவரே தொல் – புறத்திணை 2ஆம் சூத்திரவுரையில் “மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையிலும் அறமே நிகழும் என்றற்கு ‘மேவற்றாகும்’ என்றார்.” என ஓதுதலுங் காண்க. எனவே ஈண்டு ஒழுக்கம் என்றது போர் மறவரும் மன்னரும் கடைபிடித்தற்குரிய அறங்களை என்க. அவற்றை “பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற் றக்கால் ஊராண்மை மற்றதன் எஃகு” எனவரும் திருக்குறளானும், ஆவும் ஆனியல் .... பூட்கை மறத்தின்” எனவரும் புறப்பாட்டானும், அழியுநர் புறக்கொடை அயில்வாளோச்சான் என்னும் இன்னோரன்னவற்றாலும் உணர்க”[83]

என்று கருத்துரைத்துள்ளார். அரசர்க்குரிய ஒழுக்கம் என்பது அவர்களுக்குரிய அறத்தைச் சுட்டவந்தது என்பது இங்குப் புலனாகிறது.

இவற்றின்வழியாகக் கலித்தொகையில் அரசனது குடைநிழல் மக்களுக்கு அறத்தைச் செய்யவேண்டும். அவனது செங்கோல் நடுநிலைமை பிழையாது இருக்கவேண்டும். ஒத்தாரோடு மட்டுமே போரிடவேண்டும், பகைவரையே நண்பராக்கும் திறம் அறிந்தவராக இருக்கவேண்டும் என்பன போன்ற அறங்கள்

வலியுறுத்தப்பட்டுள்ளன. இந்நிலையிலிருந்து மாறினால் அந்த அரசன் அழிவதோடு அவனுடன் மக்களும் சேர்ந்து அழியவேண்டிய நிலை வரும் என்பது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**அமைச்சன் அறம்**

அரசன் ஒருவன் செங்கோல் தவறாமல் நாட்டை ஆளவேண்டுமானால் அவன் மட்டும் சிறந்தவனாக இருந்தால் போதாது. அவனைச் சார்ந்த அமைச்சனும் மக்களும் பிறரும் பொறுப்புடையவர்களாகவும் இருக்கவேண்டும். அரசன் சரியாக இருந்து அமைச்சன் சரியாக இல்லையென்றாலும் மக்களுக்கு அது துன்பம்தான். மக்களுக்கு மட்டுமல்ல அரசனுக்கும் அது துன்பத்தையே தரும். ஆகவே அரசரும் அமைச்சனும் மக்களும் பொறுப்புள்ளவர்களாக விளங்கவேண்டும். இதுவே அந்நாட்டைச் செம்மையுடையதாக ஆக்க வழிவகுக்கும்.

அரசனுக்குரிய அறம் குறித்து கலித்தொகை விரிவாகப் பேசுகின்றது. ஆனால் சங்கப் புலவர்கள் அரசர்களுக்குரிய அறத்தை மட்டும் கூறி அமைச்சனுக்குரிய அறம்பற்றிக் கூறாமல் விட்டுவிடவில்லை. இருவருக்கும் உரிய உயர்ந்த கடமைகளையும் பொறுப்புகளையும் அறங்களையும் விரிவாகக் கூறியுள்ளனர்.

நடுவுநிலைமையிலிருந்து விட்டு நீங்கிய அருள் இல்லாத அமைச்சன் சொல்கேட்டு கொடுந்தொழிலைச் செய்த அரசனது கொடுங்கோல் மக்களைச் சுடும் என்னும் உயர்ந்த அறக் கருத்து கலித்தொகையின்,

நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்

கொடிதோர்த்த மன்னவன் கோல்போல[84]

என்னும் பாடலடிகளின் வழியாக உணர்ந்துகொள்ள முடிகிறது. அருள் இல்லாத அமைச்சனால் வரும் துன்பத்தைக் கூறிய கலித்தொகை அந்த அமைச்சனுக்குரிய கடமைகள் குறித்தும் விரிவாகப் பேசுகின்றது. அதாவது அமைச்சன் பலவற்றையும் அறிந்திருக்கவேண்டும், அறிவுள்ளவனாகவும் புத்தி கூர்மையுடையவனாகவும் இருக்கவேண்டும். எதையும் உணர்ந்து கொள்ளும்

ஆற்றலும் பகுத்தறியும் திறனும் இல்லாமல் இருந்தால் எத்தகைய துன்பம் வரும் என்பதை,

பேதையோன் வினைவாங்கப் பீடிலா அரசனாட்

டேதிலான் படைபோல இறுத்தந்த திளவேனில்[85]

என்னும் அடிகளின்வழி அறிய முடிகிறது. அமைச்சன் பேதையனாக இருந்தால் படைவலிமை இல்லாத அரசனது நாட்டில் பகை அரசனின் படை வந்து அழித்துவிடும் என்பதை மேலது அடிகள் புலப்படுத்துகின்றன. ஆனால் அமைச்சன் இந்நிலையில் இல்லாமல் தன் அரசன், தன் நாடு, தன் மக்கள் என்று சிந்தனை உடையவனாக இருந்தால் அவன் என்ன நிகழும் என்பதையும் கலித்தொகை பதிவிட்டுள்ளது. இதனை,

புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை

வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு

மரைசினுந் நிலையிலாப் பொருளையு நச்சுபவோ[86]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. தாம் பெறும் பயனை எதிர்பாராமல் அரசனின் ஆக்கத்திற்கு முயலுகின்ற அமைச்சனை அரசன் கோபித்தால்கூட அவன் தன் காரியத்தைச் செம்மையாகச் செய்வான் என்பதை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

**இல்லற அறம்**

உடன்போக்கு சென்ற தலைமக்களைத் தேடி செல்லும் செவிலித்தாய் வழியில் கண்டோரிடம் இத்தகையாரைக் கண்டீர்களா என வினவுகிறாள். அதற்கு அவர்கள் அவரைக் கண்டோம். அவ்வாறு செல்வது அறம் எனவே கருதி நாங்களும் வந்தோம். நீயும் அவருக்குத் துன்பம் விளைவிக்க வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டனர்.

இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்

சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்

அறந்தலை பிரியா வாறுமற் றதுவே[87]

என்னும் பாடலடிகள் உயந்த கற்பினை உடைய அவள் வருந்துமாறு எதுவும் செய்யாதீர் ஏனென்றால் இதுமுதுகுரவரிலும் சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே போனாள். இந்தப் பிறவியில் இவ்வாறு கற்பு பூண்டு நிகழ்த்தும் இவ்வில்லறமே அறங்களில் தலையாய அறம். இப்பிறவியில் மட்டுமல்ல மறுபிறவியிலும் இவ்விருவரும் நீங்காமல் சுவர்க்கம் செல்லும் வழியும் இதுவே எனக் கூறினர். இக்கருத்தினை,

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்

பிறன்பழிப்ப தில்லையாயின் நன்று[88] (49)

என்னும் குறட்பா வலியுறுத்துகின்றது.

ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை

ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்

ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை[89]

இல்வாழ்க்கையின் உயர்ந்த தத்துவத்தை இப்பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. இதுவே கற்பில் நிகழ்த்துகின்ற உயர்ந்த அறமாகக் கருதப்படுகின்றது.

கற்புடைய மனைவி தன் கணவனையே தெய்வமாகத் தொழுதுவந்தால் அவளுடைய தந்தை விடும் அம்புகள் குறி தப்பாமல் இலக்கைச் சென்றடையும் என்னும் அறமும் கலித்தொகையில் சுட்டப்படுகின்றன.

வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்

தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றம்மையருக்

தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்[90]

என்னும் பாடலடிகள் மேற்குறித்த கருத்தை விளக்குகின்றன. மற்றொரு பாடலில் இல்லற அறம் குறித்த பதிவு சிறப்பாக இடம்பெற்றுள்ளது.

அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்

பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்[91]

அந்தணர்களும் தாபதர்களும் ஆகிய சான்றோர்கள் இல்லறத்தாரைத் தேடி வந்து அவர்களிடம் பொருள் பெற்றுச் செல்வர். தம்முடைய வீட்டிற்கு அருள் காரணமாக வரும் சான்றோர்களுக்கு உணவும் உடையும் உதவுதல் சிறந்த இல்லற அறமாகக் கருதப்படுகின்றது.

தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா

செய்வது நன்றாமோ மற்று[92]

தமக்கு இனிமையாக இருக்கின்றது என்று எண்ணி பிறர்க்கு இன்னாதவற்றை வலிந்து செய்வது இன்பத்தைத் தருமோ என்பது தலைவி தலைவனை நோக்கிக் கூறுகின்ற அறிவுரையாகும். இக்கருத்தினை,

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா

பிற்பகல் தாமே வரும்[93]

என்னும் குறட்பா வலியுறுத்தி நிற்கின்றது,

மையின் மதியின் விளங்கு முகத்தாரை

வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று[94]

அழகு பொருந்திய நிலவை ஒத்த முகத்தை உடைய பெண்ணை வலிதிற் புணர்வது அறமாகாது என்பதையும் கலித்தொகை எடுத்துக் காட்டுகின்றது. இது மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் இராக்கத மணத்தைச் சேர்ந்தது.

**அஃறிணை உயிர்களின் அறம்**

பறவை, விலங்கு ஆகிய அஃறிணை உயிர்களின் வாழ்க்கையை எடுத்துரைக்கும்போது அறக்கருத்துகள் பலவற்றை கலித்தொகை விளக்குகின்றது. பொருளீட்டச் செல்லக் கருதிய தலைவன் கூறிய காட்டின் அருமையைத் தலைவி தோழிக்கு விளக்குவதாக அமைந்த பாடலில்,

அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்

கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுட்

டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே[95]

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. இவ்வடிகள் காட்டின் வெம்மையும் அக்காட்டில் நிகழ்ந்த காட்சிகளையும் விளக்குகின்றன. யானைக் கன்றுகள் காட்டில் சிறிதளவே இருந்த நீரைக் களிறும் பிடியும் உண்ண வேண்டும் என்று கருதாது கலக்கியது. அந்தச் சிறிதளவு நீரை களிறு தான் முதலில் உண்ணாமல் பிடியை உண்ணச் செய்து தான் பின் உண்ணும் சிறப்புடையது.

அதே காட்டில் மற்றொரு இடத்தில் நிகழும் காட்சி ஒன்றும் சிறப்புடையது. காட்டில் உள்ள மரங்கள் அனைத்தும் வெம்மையால் தன்னுடைய இலைகளை இழந்தன. அக்காட்டில் அன்பு கொண்ட ஆண், பெண் புறாக்களில் வெப்பத்தின் கொடுமையைத் தாங்காத பெண்புறாக்களின் துயரினை ஆண் புறா தன் சிறகை விரித்து துன்பத்தை நீக்கும் அன்புடையது என்ற கருத்தில் அமைந்த,

இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்

றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு

ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை

மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே[96]

என்னும் அடிகள் சிறப்புடையன.

அறத்தை வலியுறுத்தும் இன்னொரு கருத்தும் அதே பாடலில் இடம்பெற்றுள்ளது. வெப்பத்தால் மூங்கில் காடுகளெல்லாம் காய்ந்துபோய்விட்டன. அத்தகைய காட்டில் பினைமான் நிழலில்லாது வருந்துகிறது. பிணைக்கு தன் நிழலைக் கொடுத்து அதன் உயிர் போகாது காத்து நிற்கிறது கலைமான். அத்தகைய காடு அறமுடையது என்பதை,

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்

றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு

ளின்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்

தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே[97]

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. இப்பாடலடிகள் தன் இணையைப் பிரியாது சேர்ந்திருக்கும் இல்லறத்தின் சிறப்பைக் காட்டுகின்றன.

கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினந்

திரையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை

இறையுயிர் செகுத்துண்ணாத் துறைவன்[98]

என்னும் பாடலடிகள் கரையைக் கவர்ந்து கொண்டுபோகக் கூடிய கழிமுகத்தின் அழகும் பறவைகளின் சிறப்பும் கூறப்பட்டுள்ளன. பறவைகள் உணவுக்காகச் சண்டை போடும்பொழுது இறந்த புலால் நாற்றத்தை உடைய மீனைத் தின்னுவதல்லது தாம் ஒன்றன் உயிரைக் கொன்று இறையாக அதனை உண்ணாது என்னும் உயரிய அறத்தைக் கலித்தொகை புலப்படுத்துகின்றது.

**நிலையாமை அறம்**

நிலையாமை கருத்துகள் பலவற்றை கலித்தொகைப் பாடல்கள் முன்வைத்துள்ளன. வாழ்க்கை, அழகு, இளமை,பொருள், காமம் ஆகியன நிலையில்லாதது என்பதை சிறந்த உவமைகளின்வழி விளக்கப்பட்டுள்ளன.

நறுநுத னீத்துப் பொருள்வயிற் செல்வோ

யுரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய

வளமையா னாகும் பொருளிது வென்பா

யிளமையுங் காமமு நின்பாணி நில்லா

விடைமுலைக் கோதை குடைய முயங்கு

முறைநாள் கழித லுறாஅமைக் காண்டை

*கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லைப்*

*போற்றாய் பெருமநீ காமம் புகர்பட*

*வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்*

*கூற்றமு மூப்பு மறந்தாரோ டொராஅங்கு*

*மாற்றுமைக் கொண்ட வழி*[99]

*என்னும் அடிகள் அறக் கருத்துகள் பலவற்றை முன்வைக்கின்றன. தலைவனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி காட்டின் அருமையையும் தலைவியின் அருமையையும் கூறி தலைவனைச் செலவு அழுங்குவித்தல் துறையில் இப்பாடல் அமைந்துள்ளது.*

*அழகிய நெற்றியையுடைய தலைவியைவிட்டுப் பிரியக் கருதும் தலைவனே! நீ பொருள்தேடும் ஆவலை உடைய மனத்தினால் பொருளைத் தேடி அதனால் கிடைக்கக் கூடிய இன்பம்தான் உயர்ந்தது எனக் கூறுகின்றவனே! நீ அப்பொருளைத் தேடிவரச் சென்ற கால அளவும் இளமையும் காமமும் உனது கையிடத்து நில்லாமல் நாள்தோறும் அழிந்துபோகும். அதுமட்டுமல்ல உலகத்தில் இறக்கும் நாள் இதுவென்று அறிந்தவரும் இல்லை. காம இன்பம் அழியும்படி பொருளீட்டச் செல்லக் கருதுபவனே! நீ தமக்கு வருகின்ற கூற்றத்தையும் மூப்பையும் மறந்திருப்பவனே! நன்மக்கள் நிற்கின்ற வழியினை நினக்கு வழியாகப் பேணாதவனே! எனக் கூறித் தோழி தலைவனைப் பொருளீட்டச் செல்ல விடாமல் தடுக்கின்றாள்.*

*இப்பாடலடிகளில் இளமையும் காமமும் நாள்தோறும் அழியக் கூடியது, உலகத்தில் இறக்கக் கூடிய நாள் இதுவென்று அறிந்தவர் எவரும் இல்லை என்பன போன்ற அறக் கருத்துகள் சுட்டப்பட்டுள்ளன.*

*கலித்தொகையின் மற்றொரு பாடல் இளமை நிலையாமையை வலியுறுத்துகின்றது.*

வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்

முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த

இளமையுந் தருவதோ இறந்த பின்னே[100]

என்னும் அடிகள் தோழி கூற்றாக அமைந்தது. இவ்வடிகளுக்கு,

> கல்வியாலுண்டாம் வளப்பமோ இவ்விடத்தே யிருந்து நாடோறுஞ் செய்துகொள்ளுஞ் செயலாயிருக்கும்; அக்கல்வி முளையை யொத்த நிரையினையுடைய முறுவலையுடையாளுடைய திரளுள்ளே உயர்த்தாராய்ந்த இவளுடைய இளமை போனபின்பு அவ்விளமையுந் தருவதொன்றோ?[101]

என்று நச்சினார்க்கினியர் விளக்கம் வழங்கியுள்ளார்.

இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்

வளமை விழைதக்க துண்டோ[102]

என்னும் அடிகள் இளமையையும் காமத்தையும் ஒருங்கே பெற்றவர்கள் செல்வத்தை விரும்பத்தக்கதொரு நன்மை அச்செல்வத்திற்கு இல்லை என்னும் பொருளை வலியுறுத்துகின்றன.

இளமை நிலையாமையை வலியுறுத்துவதாக மற்றொரு பாடலும் அமைந்துள்ளது. அதில் தலைவன் ஒருவன் தான் போரில் வென்ற நாட்டைச் சீர்படுத்த எண்ணித் தலைவியை விட்டுப் பிரிகிறான். நீ இவளை விட்டுப் பிரிந்தால் நாள்தோறும் இவளது அழகானது குறைந்துபோகும் என்பதைத் தோழி தலைவனுக்கு எடுத்துரைக்கிறாள். இதனை,

தொல்லெழி றொலைபிவ டுயருழப்பத் துறந்துநீ

வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை

நீள்கதி ரவிர்மதி நிறைவுபோ னிலையாது

நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ[103]

என்னும் பாடலடிகளில் காணலாம். இதே பாடலில் உள்ள "முகைவாய்த்த தடம்போலு மிளமையு நிலையுமோ" *(17:16)* என்னும் அடி இளமை நிலையில்லாதது என்பதை வலியுறுத்துகின்றது. தலைவியின் அழகுகெட பிரிந்து செல்வது அறமாகாது எனத் தோழி இப்பாடலில் வலியுறுத்துகிறாள்.

தலைவன் ஒருவன் தலைவிக்குத் தன் பிரிவை உணர்த்திச் செல்ல நினைக்கிறான். தலைவி தன்னையும் உடன் அழைத்துச் செல்லச் சொல்கிறாள். அதற்குத் தலைவன் காட்டின் அருமையும் தலைவியின் அருமையும் எடுத்துக்கூறி அறிவுறுத்துவதாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்நீ யுணல்வேட்பின்

ஆறுநீ ரிலவென அறனோக்கிக் கூறுவீர்

யாறுநீர் கழிந்தன்ன விளமைநுந் நெஞ்சென்னுந்

தேறுநீ ருடையேன்யான் றெருமந்தீங் கொழிவலோ[104]

என்னும் கலித்தொகை அடிகள் வெம்மை மிகுந்த காட்டில் நீர் வேட்கை எடுத்தால் அங்கு நீர் இல்லை என்பதைத் தோழிக்கு எடுத்துக் கூறுகின்றான். இதனைக் கேட்ட தலைவி தலைவனைப் பார்த்து கழிந்த ஆறுநீர் போலச் சென்ற இளமை திரும்பி வாராது எனக் கூறுகின்றாள். இங்கு இளமை நிலையாமையைத் தலைவி தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

மகளிர் தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்

நீள்சுரம் போகியார் வல்லைவந் தளித்தலும்

ஊழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி

வீழ்வார்கண் தோன்றுந் தடுமாற்றம் ஞாலத்துள்

வாழ்வார்கட் கெல்லாம் வரும்.[105]

என்னும் பாடலடிகள் நிலையாமைத் தத்துவத்தை எடுத்துக்காட்டுகின்றன. மகளிர் தோளைச் சேர்ந்த ஆடவர்கள் அவர்கள் வருத்தம் மிகும்படி பிரிதலும், பின்னர் நீண்ட சுரத்திற்குப் போனவர்கள் விரைந்து வந்து அருள் செய்தலும் ஆகிய இரண்டும் இரவும் பகலும் போலே மாறி மாறி வரும். தலைவனால்

வருகின்ற இன்பமும் துன்பமும் எல்லோருக்கும் வரும் என்னும் அறம் இந்தப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

**ஈதல் அறம்**

பொருளில்லாத வறுமையில் வாடும் ஒருவர் கேட்கும்பொழுது இல்லை என்று கூறாமல் ஈவது சிறந்த அறமாகும். இத்தகைய அறக்கருத்தை விளக்கும்,

ஈதலிரந்தார் கொன் றாற்றாது வாழ்தலின்

சாதலுங் கூடுமா மற்று[106]

என்னும் அடிகள் இரந்தோர்க்கு கொடுக்காமல் வாழ்வதைவிடச் சாவதே மேல் என்னும் அறக்கருத்தை வெளிப்படுத்துகின்றன.

**நீதித் தொகுப்பு**

கலித்தொகையில் ஒரே பாடலில் பல நீதிக் கருத்துகளைத் தொகுப்பாக அமைத்து பாடியுள்ளார் நல்லந்துவனார். அப்பாடலின் ஒவ்வொரு அடியும் ஒரு உயர்ந்த தத்துவத்தை வெளிப்படுத்துகின்றன. பாடல் வருமாறு:

ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்

போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்

அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை

அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்

செறிவெனப் படுவது மறைபிற ரறியாமை

நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை

முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்

பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்[107]

என்னும் அடிகள் நீதிகளின் தொகுப்பாக அமைந்துள்ளன. இந்தப் பாடலடிகளுக்கு நச்சினார்க்கினியர்,

இல்வாழ்க்கை நடத்துதல் என்று சொல்லுவது மிடித்தவர்க்கு யாதானும் ஒன்றை உதவுதலை; ஒன்றைப் பாதுகாத்தல் என்று சொல்லுவது கூடினாரைப் பிரியாதிருத்தலை; மக்கட்பண்பு என்று சொல்லப்படுவது உலகவொழுக்கம் அறிந்தொழுகுதலை; அன்பு என்று சொல்லப்படுவது தன் சுற்றத்தைக் கெடாதிருத்தலை; அறிவு என்று சொல்லப்படுவது அறியாதார் தன்னைப் பார்த்துச் சொல்லுஞ் சொல்லைப் பொறுத்தலை; ஒருவரொடு ஒருவர்க்கு உறவு என்று கூறப்படுவது கூறிய தொன்றைத் தாம் மாறாதிருத்தலை; நிறை என்று சொல்லப்படுவது நமரென்று கண்ணோட்டஞ் செய்யாது அவர் செய்த குறைக்கேற்ப அவர் உயிரைக் கொள்ளுதலை; பொறை என்று சொல்லப்படுவது பகைவரைக் காலம் வருமளவும் பொறுத்திருத்தலை;[108]

என்னும் உரையை வழங்கியுள்ளார். இப்பாடலுக்கு உரையெழுதிய பொ.வெ.சோமசுந்தரனார்

இச்செய்யுளில் ஆற்றுதல் என்பது முதலாக, பொறுத்தல் என்பதீறாக அமைந்த அறவுரைப் பகுதி மாணவர்கள் என்றென்றும் நினைவிற் பதித்து வைத்துக் கோடற்குரியதாம். அலந்தவர் என்பதற்கு மிடித்தவர் எனவரும் உரை வறுமையுற்றோர் என்னும் பொருட்டு. இன்னும் இச்செய்யுட்கு நச்சினார்க்கினியர் வகுக்கும் உரையும் நினைவிற் கொள்ளற்குரியதாம்.[109]

என்று தம் கருத்தைப் பதிவிட்டுள்ளார். கலித்தொகை ஆழ்வாய்வு என்னும் நூலை எழுதிய நா. ஆறுமுகம் இப்பாடல் குறித்து,

அறநெறிக் கருத்துகளை அறிவுறுத்துவதையே முதன்மையான நோக்கமாகக் கொண்ட நீதி இலக்கிய ஆசிரியர்களைப் போன்று நெய்தற்கலி நல்லந்துவனாரும் நல்லியல்புகளின் இலக்கணங்களை யெல்லாம் ஒன்பான் அறவுரைகளாகத் தொகுத்துத் தந்துள்ளார்.[110]

என்னும் கருத்தைப் பதிவிட்டுள்ளார். இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

133 - வது பாடலில் 6 முதல் 14 அடிகளில் ஒன்பது அறக்கருத்துக்கள் ஒரு வாய்ப்பாடாக வரிசையாக ஒப்பிக்கப்பட்டு, இத்தகு அறங்களைத்

தலைவன் அறிந்திருக்கும் பட்சத்தில் அவனை நினைந்து வருந்தும் பெண்ணின் துயரத்தைக் களைய தேரில் குதிரைகளைப் பூட்டுக என்று தோழி அறிவுறுத்துகிறாள். இந்த உத்தி புதியது. அறங்கள் தனி நூல்களாகத் தோன்றிய காலத்தின் தாக்கம் என்று இதனைக் கருதலாம். இம்மாதிரி உத்தியைப் பழைய அகவல் பாடல்களில் காண இயலாது.[111]

என்று கருத்துரைத்துள்ளார்.

ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல் என்னும் அறக் கருத்து இல்வாழ்க்கை நடத்துவது என்பது வறியவர்களுக்கு ஒன்று உதவுதலைக் குறிப்பதாகும். இந்த அறக் கருத்திற்கு மூலமாக,

துறந்தார்க்கும் துவ்வா தவருக்கும் இறந்தார்க்கும்

இல்வாழ்வான் என்பான் துணை[112]

என்னும் திருக்குறள் அமைந்துள்ளது.

பாதுகாத்தல் என்று கூறுவது கூடினாரைப் பிரியாமல் காத்தல் என்பதைக் குறிக்கும். இதனைக் கலித்தொகை "போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை" என்று கூறுகின்றது. இந்தக் கருத்திற்கு,

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்

வல்வரவு வாழ்வார்க் குரை[113]

என்னும் திருக்குறள் சான்றாகவும் மூலமாகவும் அமைந்துள்ளது.

மக்கள் பண்பு என்று கூறப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுவதாகும். இதனைக் கலித்தொகை, பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல் என்று கூறுகின்றது. இக்கருத்திற்கு,

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்

பண்பாற்றா ராதல் கடை[114]

என்னும் திருக்குறள் மூலமாக அமைந்துள்ளது.

அன்பு என்று கூறப்படுவது தன் சுற்றத்தாரைப் பாதுகாப்பதாகும்.

இதனைக் கலித்தொகை, அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை என்று கூறுகின்றது. இந்தக் கருத்திற்குச் சான்றாக,

பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்

மருங்குடையார் மாநலத் தில்[115]

என்னும் திருக்குறள் அமைந்துள்ளது.

எவர் சொல்லிலும் உண்மையைக் கண்டறிவதே அறிவு ஆகும். இதனைக் கலித்தொகை, அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல் என்கிறது. இதனை,

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்ப தறிவு[116]

என்னும் திருக்குறளின் வழியாகவும் நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது.

ஒருவர் கூறிய ஒன்றை மறவாது இருப்பதே சிறந்த உறவு என்பர். இதனைக் கலித்தொகை நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை என்று கூறுகின்றது. இதே கருத்தினைத் திருக்குறள்,

நிறையுடையேன் என்பேன்மன் யானோவென் காமம்

மறையிறந்து மன்று படும்[117]

என்று கூறுகின்றது.

செறிவெனப் படுவது மறைபிற ரறியாமை என்னும் கலித்தொகை அறம் பிறர் அறியாமல் ஒரு காரியத்தை மறைத்து ஒழுகுவதைக் குறிப்பதாகும். இதே கருத்தினைத் திருக்குறள்,

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்

காழி எனப்படு வார்[118]

என்று வெளிப்படுத்துகின்றது.

முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல் என்னும் கலித்தொகை அறம் சுற்றத்தார் என்று பொறுக்காமல் அவர் செய்த குற்றத்திற்கேற்ப அவருக்குத் தண்டனை கொடுப்பதைக் குறிப்பதாகும். இக்கருத்தினை,

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்

தேர்ந்துசெய் வஃதே முறை[119]

என்னும் திருக்குறள் வலியுறுத்துகின்றது.

காலம் வருமளவும் பொறுத்திருந்து பகைவரைத் தண்டிப்பது பொறுமைக்குச் சான்றாகும். இதனைக் கலித்தொகை பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல் என்று கூறுகின்றது. இதே கருத்தினை,

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை

இகழ்வார் பொறுத்தல் தலை[120]

என்னும் திருக்குறள் வெளிப்படுத்துகின்றது. மேற்கண்ட கலித்தொகைப் பாடலுக்கு குறட்பாக்கள் சான்றாக அமைந்துள்ளன என்பதை இவற்றின்வழியாக உணர்ந்துகொள்ள முடிகிறது.

**கற்றல் அறம்**

ஆசிரியரிடம் மாணவர்கள் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பது குறித்தும் கலித்தொகை அறிவுறுத்துகின்றது. கற்றுக் கொடுத்த ஆசிரியருக்குக் கூலி தராமல் கற்ற கல்வி பயன்தராது என்பதை,

கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்

தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்

ஒற்கத்துள் உதவியார்க் குதவாதான் மற்றவன்

எச்சத்துள் ஆயினுமஃ தெறியாது விடாதே காண்[121]

என்னும் அடிகள் சுட்டுகின்றன. தனக்கு ஓர் வருத்தம் வந்தபோது உதவியவர்களுக்கு ஒரு வருத்தம் வந்தால் அவர்களுக்கு உதவாதவன் நூல்

பலவற்றைக் கற்பித்த ஆசிரியன் தன்னிடம் ஒன்றும் பெறாமல் மனம் வருந்த தன்னுடைய கைப்பொருளை அக்கல்விப் பொருட்குக் கைமாறாகக் கொடுத்து உண்ணாதவனாய்த், தான் கற்ற கல்வியில் பிழை செய்தவனுடைய கல்விப் பொருள் நாள்தோறும் தேயும் என்னும் உயர்ந்த அறம் கலித்தொகையில் பேசப்பட்டுள்ளது.

கேளிர்கள் நெஞ்சழுங்க கெழுவுற்ற செல்வங்கள்

தாளிலான் குடியேபோல் தமியவே தேய்மால்

சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்

வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்[122]

பார்ப்பவர் மனதைக் கவரும்படி ஒருவன் சூளுறை செய்கின்றான். ஆனால் அவன் அந்தக் காரியத்தை முடிக்காமல் விட்டுவிடுகிறான். அப்படிப்பட்டவன் தன் சுற்றத்தாருக்கு தன்னிடம் உள்ள பொருளில் எதையும் கொடுக்காமல் ஏமாற்றுபவன் ஆவான். ஆதலால் அவனது குடி அழியும் என்பதை மேலது பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன. இப்பாடல் குறித்து ராஜ்கௌதமன்,

> 149ஆவது பாடல் வரைவு நீட்டித்தபோது தலைவியின் ஆற்றாமையை எடுத்துக் கூறிய தோழி அவனை வரைவு கடாயது என்ற துறையின்படி இயற்றப்பட்டதாகும். இப்பாடலிலும் திட்டமிட்டு அறக்கருத்துகள் உவமையாக வைக்கப்பட்டுள்ளன. இப்பாடலில் அறங்களை உரிப்பொருளுக்கு உவமைகளாக இல்லாமல், 133 – ஆவது பாடலைப் போல் உரிப்பொருட் பகுதியாகவே அமைக்கப்பட்டுள்ளன. பொதுவாகக் கலித்தொகையில், பழைய அகவல் அகப்பாடல்களைவிடப் பொது அறங்கள், அரசின் அரங்கள், வைதீக – பௌராணிகக் கதைப்பகுதிகள் என்ற மூவிதச் சொல்லாடல்கள் அதிக அளவில் இடம்பெறுகின்றன. போகப் போக இந்தச் செல்நெறி காவியம், சிற்றிலக்கியம், பக்திப்பாடல் ஆகியவற்றில் இன்றியமையாத நெறியாக வலுவடைந்ததை அவதானிக்கலாம்.[123]

என்று கருத்துரைத்துள்ளார். இவர் இப்பாடலில் அறக்கருத்துகள் திட்டமிட்டு பதிவுசெய்யப்பட்டுள்ளதாகச் சுட்டுகின்றார். அவ்வாறு சுட்டுவதற்குக் காரணம் பல அறக்கருத்துகள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டதே ஆகும்.

**தொகுப்புரை**

நல்லன எல்லாம் அறம் என்று பொதுவாகக் கூறினாலும் இது காலத்திற்குக் காலம் மனிதர்களுக்கு மனிதர் வேறுபடும் தன்மை கொண்டது என்பதை உணரமுடிகிறது.

ஆடவரும் பெண்களும் தங்கள் வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய, பின்பற்ற வேண்டிய அறங்களைக் கலித்தொகை எடுத்தியம்புகிறது. இந்த அறக் கருத்துகளை இயற்கையோடு இணைத்து கற்பவர் மனஞ்சோராமல் கொடுத்திருப்பது கலித்தொகைக்கே உரிய சிறப்பாக விளங்குகிறது.

களவு, கற்பு வாழ்வில் ஈடுபடும் தலைமக்களுக்குப் பல அறிவுரை வழங்குவதாகக் கலித்தொகைப் பாடல்கள் அமைந்துள்ளன. இந்த அறிவுரைகள் பெரும்பாலும் தோழி தலைவனுக்கு வழங்குவதாக உள்ளன.

சங்ககாலத்தில் இளம்பெண்களால் அறமாகக் கருதப்பட்ட காதல் அவளது பெற்றோர்களால் அறமல்லவாகக் கருதப்பட்டிருக்கின்றது. காதல் கொண்ட தலைமக்கள் உடன்போக்குச் சென்றமையைச் சான்றோர்கள் அறமாகவே கருதினர் என்பது கலித்தொகையின்வழிப் புலனாகின்றது.

இல்வாழ்க்கை மேற்கொண்ட தலைமக்கள் இல்லாதவர் ஒன்று இரக்கும்பொழுது ஈவதே சிறந்த அறமாகும். அவ்வாறு ஈவதற்குப் பொருள் வேண்டும். அந்தப் பொருள் தம்மைத் தேடி வராது. தாம்தான் அதைத் தேடிச் செல்லவேண்டும். ஆதலால் தலைவன் பொருளீட்ட அயல்நாடு செல்வான். இதனைக் கண்ட தோழி, இளமை, யாக்கை, செல்வம் ஆகியன நிலையாமை எனக் கூறி தலைவியை விட்டு நீங்காமையே சிறந்த அறம் எனக் கூறுவாள். இக்கருத்திலமைந்த பாடல்கள் கலித்தொகையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

சான்றோர்களுக்குரிய கடமைகள் குறித்தும் இயல்புகள் குறித்தும் கலித்தொகை விரிவாகப் பதிவுசெய்கின்றது. அவர்கள் அறவாழ்விலிருந்து

விலகாத முறையினையும் கலித்தொகை பதிவுசெய்கின்றது. இதைப் போல இழிந்தவர்களுடைய குணநலங்களும் அவர்கள் ஆற்றவேண்டிய கடமைகள் குறித்தும் கலித்தொகை சுட்டுகின்றது.

மனிதர்கள் வாழ்வில் கடைபிடித்த அறங்களை மட்டும் கலித்தொகை சுட்டவில்லை. அஃறிணை உயிர்களாகிய களிறு – பிடி, கலை – பினை, பெண்புறா – ஆண்புறா ஆகியனவற்றின் அறவாழ்க்கை குறித்தும் கலித்தொகை பதிவிட்டுள்ளது.

அரசர்களுக்குரிய அறம் என்றால் பலருக்கும் புறநானூறு என்றுதான் உடனே நினைவுக்கு வரும். ஆனால் கலித்தொகையும் அந்த அளவுக்கு அறக்கருத்துகளைப் பதிவுசெய்துள்ளது என்பது இவ்வாய்வின்வழிப் புலனாகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப. 23
2. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி, தொ.1, ப.174
3. அ. கவிதாராணி, அறமும் அறநெறிச் சிந்தனைகளும், ப. 5
4. மேலது, ப. 5
5. மேலது, ப. 5
6. பெ. மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப. 238
7. பெ. மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப. 238
8. வாழ்வியல் களஞ்சியம், ப. 45
9. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 132
10. மேலது, ப. 132
11. ராஜ்கௌதமன், தமிழ்ச்சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப. 8-9
12. திருக்குறள் உரைப்பாயிரம் ப. 5 – 6
13. ந. சுப்புரெட்டியார், தமிழ் இலக்கியங்களில் அறம் நீதி முறைமை, ப. 37
14. அ. கவிதாராணி,அறமும் அறநெறிச் சிந்தனைகளும், ப. 8
15. கலைக்களஞ்சியம், தொ.1, ப.
16. தொல்காப்பியர், தொல்காப்பியம், மரபியல், நூ. 638
17. மேலது, களவியல், நூ. 89
18. மேலது, நூ. 89
19. மேலது, களவியல், 111
20. கலித்தொகை இரண்டாம் பாகம் முன்னுரை, ப. 10
21. இலக்கிய மரபு, மு.வ, ப. 50
22. தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப. 249
23. கலித்தொகை விளிம்புநிலை நோக்கு, ப. 44
24. தொல்காப்பியம்,
25. திருவள்ளுவர், திருக்குறள், பா. 56
26. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூ. 27
27. மேலது, நூ. 41

28. கலித்தொகை, பொ.வே, சோமசுந்தரனார், ப. 18
29. அகநானூறு, பா. 60:15
30. குறுந்தொகை,பா. 262: 2
31. நற்றிணை, பா. 63:5
32. மேலது, 277:4
33. கலித்தொகை, 144: 35
34. மேலது, 144:58
35. அகநானூறு, 256: 17
36. கலித்தொகை, (39:11-15)
37. ராஜ்கௌதமன், கலித்தொகை விளிம்புநிலை நோக்கு, ப. 56
38. மேலது, 57
39. கலித்தொகை, பா. 9: 12-23
40. திருவள்ளுவர், திருக்குறள், பா. 49
41. ராஜ்கௌதமன், கலித்தொகை விளிம்புநிலை நோக்கு, ப.37
42. மேலது, 38
43. மேலது, 39
44. மேலது, ப39
45. திருவள்ளுவர், திருக்குறள், பா. 755
46. மேலது, பா. 659
47. மேலது, பா. 660
48. கலித்தொகை, பா. 1:11-12
49. மேலது, பா. 1: 15-16
50. மேலது, பா. 1:19-20
51. மேலது, பா. 18: 1, 5
52. மேலது, பா. 21: 4 -12
53. மேலது, பா. 14:14-15
54. மேலது, பா. 19:17-21
55. திருவள்ளுவர், திருக்குறள், பா. 55
56. சிலப்பதிகாரம்,
57. கலித்தொகை, பா. 67

58. மேலது உரை, ப. 46.
59. திருவள்ளுவர், திருக்குறள், பா. 760
60. கலித்தொகை, பா. 8:11-17
61. மேலது, பா. 34: 4-5
62. மேலது, பா. 32
63. மேலது, பா. 10: 1-3
64. திருவள்ளுவர், திருக்குறள். பா. 837
65. கலித்தொகை, பா. 27, 1-2
66. மேலது, பா. 25: 15-16
67. மேலது, பா. 25:23-24
68. மேலது, பா. 76
69. மேலது, பா. 139: 1-4
70. திருவள்ளுவர், திருக்குறள், பா. 315
71. கலித்தொகை, பா. 140: 17-18
72. மேலது, பா. 43: 25-27
73. மேலது, பா. (61: 11-12)
74. மேலது, பா. 86
75. மேலது, பா. (138:30-31)
76. மேலது, பா. (10: 5-7)
77. மேலது, பா. 46: 7-8
78. மேலது, பா. 78: 4-6
79. மேலது, பா. 34: 14
80. மேலது, பா.
81. மேலது, பா. 100: 7-8
82. மேலது, பா. 118: 1-3
83. மேலது உரை, பா. நெய்தல்கலி, ப 2
84. மேலது, பா. 8: 1-2
85. மேலது, பா. 27: 7-8
86. மேலது, பா. 8: 15-17
87. மேலது, பா. 9:21-23

88. *திருவள்ளுவர், திருக்குறள், பா. 49*

89. *கலித்தொகை, பா. 18:9 – 11*

90. *மேலது, பா. 39:16-18*

91. *மேலது, பா. 45*

92. *மேலது, பா. 62:7-8*

93. *திருவள்ளுவர், திருக்குறள், பா. 319*

94. *கலித்தொகை, பா. 62*

95. *மேலது, பா. 11: 6-9*

96. *மேலது, பா. 11: 10-13*

97. *மேலது, பா. 11: 14-17*

98. *மேலது, பா. 131: 31-33*

99. *மேலது, பா. 12: 9-19*

100. *மேலது, பா. 15: 23-25*

101. *மேலது, பா. உரை ப. 64*

102. *மேலது, பா. 18: 7-8*

103. *மேலது, பா. 17: 5-8*

104. *மேலது, பா. 20:11-14*

105. *மேலது, பா. 145: 13-17*

106. *மேலது, பா. 61: 11-12*

107. *மேலது, பா. 133:6-14*

108. *கலித்தொகை நெய்தற்கலி ப. 53*

109. *மேலது, ப 53*

110. *நா. ஆறுமுகம், கலித்தொகை ஆழ்வாய்வு ப. 166*

111. *ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்பு நிலை நோக்கு, ப.*

112. *திருவள்ளுவர், திருக்குறள், பா. 42*

113. *மேலது, பா.1151*

114. *மேலது, பா. 998*

115. *மேலது, பா. 526*

116. *மேலது, பா.423*

117. *மேலது, பா. 1254*

118. மேலது, பா. 989

119. மேலது, பா. 541

120. மேலது, பா. 151

121. கலித்தொகை, பா. 149: 4-7

122. மேலது, பா. 149: 8-11

123. ராஜ்கௌதமன், கலித்தொகை விளிம்பு நிலை நோக்கு, ப. 163

## *இயல் - 5*

### *கற்பனை நலம்*

*கற்பனை என்னும் சொல்லினை மிகவும் விரிந்த பொருளில் அறிஞர்கள் பொதுவாக வழங்கிவருகின்றனர். இல்லாததை உள்ளதாக உண்டுபண்ணல், நடிப்பு, கட்டளை, கல்வி, கற்பித்தல், சாதுரியம் நிருணயம், பாவனை, புனைந்துரை, விழிப்பு, போதனை, சங்கற்பம், வருணனை, கபடம், அத்தியாயம், அதியுத்தி என்னும் பல்வேறு பொருள்களில் கற்பனை என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி கற்பனை என்னும் சொல்லை, கல் என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த தமிழ்ச்சொல் ஒருவகை, கல்பனா என்னும் பகுதி அடியாகப் பிறந்த வடமொழிச் சொல் மற்றொரு வகை என இருவகையாகப் பாகுபடுத்துகின்றது. இவற்றுள் கற்பனை என்னும் சொல்லுக்கு கல்வி, போதனை என்னும் இருபொருள்கள் வழங்கப்படுகின்றன.*

*திருமூலரின் திருமந்திரத்தில்தான் கற்பனை என்னும் சொல் முதன்முதலில் காணப்படுகின்றது. இலக்கியப் பண்பு என்ற பொருளில் அங்கு ஆளப்படவில்லை. வீண் சிந்தனைகள், விகற்பம், இறைவனின் திருவானை, காரணம் பற்றித் தோன்றும் என்னும் பொருளில் தான் வழங்கப்படுகின்றன. திருவாசகத்தில் கற்பனை என்னும் சொல் பயன்படுத்தப்படுகின்றது. 12ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில் கற்பனை என்னும் சொல் மிக அருகிய வழக்காகவே ஆளப்பட்டுள்ளன.*

*திருத்தொண்டர் புராணத்தில் கற்பனை என்னும் சொல் இடம்பெற்றுள்ளது. "கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி" என்னும் பாடலடிகளுக்கு 'இல்லாததைக் கட்டிச் சொல்லுதல் என்பது பொருளாகும். சி.கே. சுப்பிரமணிய முதலியார் புனைந்துரைத்த கற்பனை கடந்த சோதி என்று இவ்வடிகளுக்கு விளக்கம் வழங்கியுள்ளார்.*

*இத்தகைய இலக்கிய வழக்குகளிலிருந்து 'கற்பனை' என்னும் சொல் புனைந்துரைத்தல் என்னும் பொருளில் சற்றேறக்குறைய பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் வழக்கிலிருந்து வருவதை நாம் அறியமுடிகிறது. சேந்தன் திவாகர நிகண்டிலும், பிங்கல நிகண்டிலும் சூடாமணி*

நிகண்டிலும் கற்பனை என்னும் சொல்லே இடம்பெறவில்லை என்பது இங்குக் கருதத்தக்கதாகும். சிறப்பாகச் சேக்கிழார் காலம் முதற்கொண்டு இச்சொல் பையப்பைய இப்பொருளில் பெருவழக்குற்றதைக் காணலாம்.[1]

என்று கூறியுள்ளார்.

கற்பனை என்னும் சொல்லைச் சங்க இலக்கியத்துள்ளோ சங்கம் மருவிய கால இலக்கியத்துள்ளோ நாம் காணமுடியவில்லை. இதனால் பண்டைத் தமிழ்ப் புலவருக்கு கற்பனை ஆற்றல் இருந்ததில்லையா? அவர்களுடைய பாடல்களில் கற்பனை வளம் கிடையாதா? என்னும் ஐயம் எழலாம்.

தமிழ் மொழியின் வரலாற்றையும் இலக்கிய வரலாற்றையும் ஒருமுறை கூர்ந்து நோக்குவோமானால் ஓர் உண்மை எளிதில் புலனாகும். கற்பனை என்னும் சொல் தமிழ் மொழியில் வழங்கப்பெறுவதற்கு முன்னர் அச்சொல்லிற்குரிய பொருளில் புனை என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த புனைவு, புனைதல் என்னும் சொற்கள் பெருவழக்குற்று விளங்கியமை தெரியவரும். புனை என்னும் வேர்ச்சொல்லே அடையாக அமைந்து கற்பனை என்னும் பொருளை உணர்த்தியதைச் சங்க இலக்கியத்துள் காணப்பெறும் தொடர்மொழிகள் பலவற்றால் நாம் அறிகிறோம்.[2]

என்று க. திருநாவுக்கரசு சங்க இலக்கியங்களில் இடம்பெறும் கற்பனை குறித்து கருத்துரைத்துள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, புனைதல் என்னும் சொல்லுக்கு செய்தல், செய்யுள் அமைத்தல், கற்பித்தல், சிறப்பித்துக் கூறல், ஒழுங்காக அமைத்தல், சூடுதல், கட்டுதல், முடைதல், சித்திரமெழுதுதல், சித்தஞ் செய்தல், அலங்கரித்தல், தரித்தல் என்னும் பொருளை வழங்குகின்றது. இவற்றுள் செய்யுள் அமைத்தல், கற்பித்தல், சிறப்பித்துக்கூறல், சித்திரமெழுதுதல், அலங்கரித்தல் என்னும் ஐந்து பொருள்களும் கற்பனை என்னும் சொல்லின் பொருளை வரையறுத்துக் கூறுவனவாக அமைந்துள்ளன.

*கட்டுரையெனும் சொல் பல பொருள்களில் வழங்கி வருகின்றன. காலந்தோறும் இதனுடைய பொருளில் சிறிது மாற்றமும் திரிபும் உண்டாகியிருக்கின்றன. இச்சொல்லை இரண்டு சொற்களாக நாம் பகுக்கலாம். கட்டு என்னும் வேர்ச்சொல்லோடு உரை என்னும் விகுதி சேர்ந்து கட்டுரை என்னும் சொல் அமைகிறது. கட்டு என்னும் அடிச்சொல்லிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி பத்துவகையான பொருளைத் தருகின்றது. அவற்றுள் பொய்யாகக் கற்பித்துச் சொல்லுதல் என்னும் பொருளே கற்பனையோடு தொடர்புடையதாகும். உரை என்னும் சொல் பல பொருள்களை உடையது. அவற்றுள் உரைத்தல் என்னும் பொருளே நம்முடைய ஆய்விற்கு உறுதுணையாகின்றது. இதனால் இல்லாத ஒன்றை இருப்பதாகப் புலவன் கற்பித்துச் சொல்லுதல் என்னும் பொருளும் கட்டுரைக்குரிய தென்பது தெரியவருகின்றது.[3]*

*கட்டுரையென்னும் சொல்லைப் பொருள் பொதிந்த சொல் என்னும் பொருளிலேயே பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர். ஆயினும் புனைந்துரை என்னும் பொருளில் கட்டுரை என்னும் சொல்லை அவர்கள் அருகிய வழக்காகக் கையாண்டுள்ளார்கள். தொல்காப்பியத்தினுள் கட்டுரை என்னும் சொல் ஈரிடங்களில் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.*

*சங்க இலக்கியத்துள் கட்டுரை என்னும் சொல் வழங்கப்பெற்றுள்ளதா என்று ஆராய்கின்ற பொழுது கலித்தொகையைத் தவிர வேறு எந்த நூலிலும் இச்சொல் இப்பொருளில் இடம்பெறவில்லை என்பது தெரியவருகிறது. கலித்தொகையிலும் சில இடங்களில் மட்டுமே இச்சொல் வழங்கப்பெற்றுள்ளது. 'பல பல கட்டுரை பண்டையின் பாராட்டி' (14:7) இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியர் பலபலவாகிய புனைந்துரைகளாற் பண்டையிற் காட்டிக் கொண்டாடி என்று உரைவகுத்துள்ளார்.*

***அணி இலக்கணத்தில் கற்பனை***

*பாட்டுக்கு உடையாக விளங்கும் கற்பனைத் திறனிலிருந்தே அணிகள் பல தோன்றியுள்ளன. தன் உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளுக்குக் கற்பனை*

என்னும் வண்ணத்தை ஊட்டி நயமிக்க கவிதைகளைப் புலவன் படைக்கின்றான்.

> அணி என்னும் நெய்யினைக் கற்பனை என்னும் வண்ணத்தில் குழைத்து மொழி என்னும் கிழியில் அறிவு என்னும் கோலால் பாட்டென்னும் சொல்லோவியங்களை அவன் தீட்டுகிறான்.[4]

மேலும்

> கற்பனை வளமும் கருத்துச் செறிவும் கொண்ட கவிஞன் தான் கருதிய கருத்துகளுக்கு உணர்ச்சியென்னும் உயிரை ஊட்டி கவர்ச்சிமிகு அழகென்னும் வடிவத்தைக் கொடுக்கின்றான். அவ்வடிவத்திற்கு அழகைத் தருவது அணியாகும். இவ்வணியும் கவிஞனின் கற்பனையை அடிப்படையாகக் கொண்டே எழுகிறது. இதனால் அணியின் இயல்புகளைப் பற்றி ஆராய்ந்த அணியிலக்கண நூலார் அணிக்கு நிலைக்களனாக அமைவது புலவனின் கற்பனைத்திறம் என்னும் முடிவிற்கு வந்துள்ளனர். இவற்றால் அணி இலக்கணத்துக்கு முதுகெலும்பாக இருப்பது கற்பனை என்பது புலனாகின்றது.[5]

அணி இலக்கணத்துள் தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி, பலபடப் புனைவணி என்றூ சிறப்பித்துப் பேசப்பெறும் அணிகள் எல்லாம் கற்பனையின் விளைவேயாகும். பிற அணிகளுக்கும் பின்னணியாக அமைந்திருக்கின்ற கற்பனை இவ்வணிகளுள் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது என்று திருநாவுக்கரசு அணி இலக்கணத்தில் அமைந்துள்ள கற்பனை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**கவிதையும் கற்பனையும்**

கவிதை மலர்வதற்குத் தூண்டுகோலாக இருப்பது உணர்ச்சியே ஆகும். அவ்வுணர்ச்சித் துடிப்பே கவிஞனுடைய உள்ளத்தில் ஒடுங்கியிருக்கும் கற்பனை ஊற்றின் கண்ணைத் திறக்கிறது. உண்மையை உணர்ந்தவாறு வெளியிடுமறு அது கவிஞனைத் தூண்டுகிறது. அதனால் காலத்தையும் இடத்தையும் அவன் எளிதில் கடந்து தான் உணர்த்த விரும்பும் கருத்துகளைக் கவர்ச்சியுடையதாகப் புனைந்துரைக்கின்றான்.

அந்நிலையில் அவற்றை உவமை, உருவகம் முதலியவற்றால் அழகுபடுத்தியும் வெவ்வேறாக உள்ள பொருள்களை இயைபுபடுத்தியும் வாழ்க்கையின் அனுபவத்தை வெவ்வேறான வண்ணங்களால் தீட்டியும் அவன் காட்டுகிறான். அப்பொழுது அது கலை வடிவம் பெறுகின்றது. அந்தக் கலைவடிவம் கற்பவர் உள்ளத்திலும் அதே கற்பனையைப் பதியவைத்து உணர்ச்சியைத் தூண்டுகிறது. இதனால் தான் கற்பனையின் பொங்கலே கவிதை என்று ஷெல்லி கூறியுள்ளார்.[6]

கருத்துகளைச் சொல் நயம், பொருள் நயம் மிக்கதாக அழகு செய்வதற்கு பயன்படும் கருவியே கற்பனை. அதனுடைய உதவியைக் கொண்டு சிந்தனைக்கு விருந்தளிக்கும் வகையில் சிறந்த கருத்துகளை கற்பனை என்னும் வண்ணத்தில் குழைத்து கவர்ச்சிமிகு சொல்லோவியங்களைக் கவிஞன் தீட்டுகிறான். இதனால் கற்பனையை உடல் என்று கூறுவது மிகவும் பொருத்தமுடையதாகும்.

**கற்பனை - வரையறை**

கலைகளின் சிறப்பிற்கு இன்றியமையாப் பண்பாக இருப்பது கற்பனை. கவிதைக்கு அழகூட்டுவது கற்பனை. புலன்கள் நேராக ஒரு பொருளை உணராத சமயத்திலும் அந்தப் பொருளை நினைவிற்குக் கொண்டுவந்து அப்பொருளிடத்து மீண்டும் உணர்த்த வல்லதோர் ஆற்றலாக அமைவது கற்பனை. ஐம்புலன்களால் உணர இயலாத புறச் சார்பான பொருள்களைக் கருத்தியல் வடிவங்களாக மாற்றும் இயற்கை உளச் சார்பே கற்பனை என்றும் நாம் கூறலாம். அது புலன் உணர்வா? அல்லது வெறும் அறிவுத்திறனா? நினைவாற்றலுக்கும் கற்பனைக்கும் தொடர்பு உண்டா? என்பன போன்ற ஐயங்கள் கற்பனையைப் பற்றி எழுகின்றன.

**கற்பனையின் தோற்றம்**

கற்பனை எப்பொழுது தோன்றியது என்பது குறித்த கருத்தும் ஆய்வாளர்களால் முன்வைக்கப்பட்டுள்ளன.

உணர்ச்சியின் பிழம்பாக உள்ள கவிஞன் தான் உணர்த்த விரும்பும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்கு வாயிலாக உள்ள பொருள்களைத்

தன்னுடைய மனக்கண்களால் காண்கிறான். அவற்றை உவமை, உருவகம் முதலிய மலர்களால் பிணைத்துக் கூற முயலுகிறான். வெவ்வேறாக உள்ள பொருள்களைத் தன் வாழ்க்கை அனுபவம் என்னும் கயிற்றால் பிணைத்து அவற்றிடையே புதியதோர் பொலிவை அவன் ஊட்டுகிறான். அதற்காக அவன் பயன்படுத்தும் சொற்கள் இருவகையாகச் செயல்படுகின்றன. படிப்போருடைய உள்ளத்தில் கருத்தியல் வடிவங்களைத் தோற்றுவிப்பதோடு உணர்ச்சி அனுபவத்தையும் அவை ஊட்டுகின்றன. இவ்வகையில் அமைவதே கற்பனை.[7]

கவிதைக்கு மெருகு கொடுக்கும் பணியில் கவிஞன் இவ்வாறு ஈடுபடுகின்ற பொழுது தன் உள்ளத்தின் விருப்பு வெறுப்பிற்கேற்பக் கற்பனையைப் படைக்கிறான். அப்பொழுது கலையழகு கருதி உண்மையைப் பலவாறாக உயர்வுபடுத்திப் போற்றியும் அதன் இயல்பைக் குறைத்து மதிப்பிட்டும் வெளிப்படுத்த அவன் முயலுகின்றான். அம்முயற்சியில் தான் உணர்ந்தவாறு உண்மைகளை எடுத்துரைக்கிறான். தான் கண்டவற்றையும் கருதியவற்றையும் மாற்றியும் திருத்தியும் இணைத்தும் பிணைத்தும் புதுமெருகு கொடுத்தும் அவன் புனைந்துரைக்கின்றான்.

இவ்வாறு புனைந்துரைப்பதையே இலக்கிய உலகில் கற்பனைத் திறன் என்று போற்றுகின்றனர். காலத்தையும் இடத்தையும் கடந்து கற்பனை மனிதனுடைய அகக்கண்ணிற்கும் அகச் செவிக்கும் விருந்து அளிக்கிறது. உள்பொருளும் இல்பொருளும் பருப்பொருளும் நுண்பொருளும் கற்பனைக்கு அடித்தளமாக அமைகின்றன. கவிதைக்கு அழகொளிரும் சொல்லமைப்பும் அறிவூட்டும் பொருளாழத்தையும் இன்பந் தரும் காட்சி நிலையையும் உளமொன்றும் ஓசை நயத்தையும் உணர்வு தரும் நடையோட்டத்தையும் கற்பனை அளிக்கிறது.

பாவலன் ஒருவன் தான் கண்ட காட்சிகளை வருணிப்பது கற்பனையாகாது. அவற்றை அவன் உணர்ந்த முறையில் உணர்த்துகின்ற பொழுதுதான் கற்பனை வெளிப்பட்டு நிற்கிறது. அவன் சில அடைமொழிகளையும் கருத்தியல் வடிவங்களையும் பயன்படுத்துவதன்மூலம் கற்பனைக்கு வடிவம் கொடுத்துவிடுகிறான்.

> அப்பொழுது எல்லையற்ற பரந்நீதுபட்ட உணர்ச்சிகளால் நாம் உந்தப்படுகின்றோம். ஆனால் அவற்றுள் நாம் கண்டறியக்கூடிய சிலவற்றையே கற்பனை விளக்கியுரைக்க முயலுகிறது.[8]

என்ற கருத்தும் திருநாவுக்கரசால் முன்வைக்கப்படுகின்றன.

**கற்பனையின் வகை**

உண்மைக் கற்பனை, வெறுங்கற்பனை என்று கற்பனையை இருவகையாகப் பிரிப்பர். உள்ளதையே சிறப்பித்து உயர்வு நவிற்சியினை அளவாகக் கூட்டிக் கூறுவது உண்மைக் கற்பனை. இல்லதைப் புனைந்து உயர்வு நவிற்சி வரம்புகடந்து சேர்த்துக் கூறுவது வெறுங்கற்பனை. உண்மைக் கற்பனையை இமாஜினேஷன் என்றும் வெறுங்கற்பனையை ஃபேன்சி என்றும் மேல்நாட்டுத் திறனாய்வாளர் கூறுவர். பொறுமையாகப் பொருள்களைக் கூர்ந்து காண்பதால் உண்மைக் கற்பனை உருவாகிறது. மனத்தின் காட்சிகளை மாற்றும் தன் விருப்ப ஆர்வச் செயல்களினால் வெறுங்கற்பனை வடிவம் பெறுகின்றது. ஆனால் இவையிரண்டும் நினைவாற்றலின் இருவேறு வடிவங்களாகும்.

> வேர்ட்ஸ்வெர்த் உண்மைக் கற்பனையை இருவகையாகப் பாகுபடுத்தியுள்ளார். அவற்றை ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை என்று அவர் சுட்டுகின்றார். ஆக்கக் கற்பனை ஆழ்ந்த பொருளும் விரிந்த பயனும் உடையது. நினைவு கற்பனை கவிஞனுடைய நினைவாற்றலைத் தூண்டிப் பழைய அனுபவத்திற்குப் புதிய வடிவம் கொடுக்குமாறு செய்வது.
>
> கற்பனையின் இயல்பு அறிவிற்கு எட்டாதது, சொற்களால் உணர்த்தமுடியாதது. அதனுடைய பயன்களைக் கொண்டே அதனை நாம் அறியமுடியும் என்பது இரஸ்கினுடைய நம்பிக்கையாகும். வேறுபட்ட மூவகைச் செயல்பாடுகளையும் உண்மைக் கற்பனை என்று அவர் குறிப்பிடுகின்றார். அவை, துருவித் துருவி ஆராய்வது, பகுத்துக்காட்டுவது, எட்டிப் பிடித்துவிடுவது என்பனவாகும்.[9]

ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் கற்பனையை பின்வரும் ஆறு வகையாகப் பாகுபடுத்திக் காட்டுகின்றார். அவை,

- உள்ளத்தைக் கவரக்கூடிய வடிவங்களைப் படைக்கும் ஆற்றல்.
- உவமைகளையும் உருவகங்களையும் கொண்டு பொருள்களை உறவுபடுத்திக் காணும் ஆற்றல்.
- பிறருடைய உள்ளங்களில் புகுந்து அவனுடைய மனநிலையைச் சித்தரிக்கும் தன்மை.
- வெவ்வேறாக உள்ள பொருள்களை இயைத்துக் காணுந்திறன்.
- வாழ்க்கையின் அனுபவத்தை வெவ்வேறு வகையாக முறைபடுத்துகின்ற இயல்பு.
- பொருள்களை உள்ளவாறே உணரும்போது ஒன்றோடொன்று மோதுகின்ற பல உணர்ச்சிகளை, முரண்படும் பல கருத்துகளை, ஒரு பெரும் கருத்து அல்லது பேருணர்ச்சியின் ஆட்சிக்குட்படுத்துந்திறன்.[10]

என்பன அவையாகும்.

சி.டி. வின்செஸ்டர் கற்பனையை படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்துவிளக்கக் கற்பனை என மூன்றாகப் பாகுபடுத்தியுள்ளார்.

> பாட்டின் சிறப்பிற்குத் தேவைப்படுவது கற்பனையுணர்வு. கவிஞனுடைய உள்ளவுணர்ச்சிகளோடு அறிவுத்திறனும் கலப்பதனால் கற்பனை நலங்கனிந்த கவிதை பிறக்கிறது. அதில் ஒலிநயமும் பொருள் நயமும் தாமாகவே அமைந்துவிடுகின்றன. ஒலிநயத்தோடு கற்பனையுணர்வு இரண்டறக் கலந்துள்ள உண்மையை நாம் சிறந்த கவிஞர்களுடைய படைப்புகளில் இன்றும் காணலாம். எனவே பலவகைப் பாகுபாட்டுடன் போற்றப்பட்டு வரும் ஒலிநயமே பாட்டுக் கலையின் உயிர். கற்பனை உணர்வே உடல் என்பது புலனாகின்றது. ஆகவே கவிதைக் கலையின் உயிர்வாழ்வு செவிப்புலனை ஒட்டியே அமைகிறது எனலாம். இக்காலத்தில் கவிதைகள் படிக்கப்படுகின்றன; பாடப்படுவதில்லை. இதனால் செவிப்புலக் கற்பனையின் சிறப்பு

*குன்றிவிடவில்லை. இழூம் எனும் ஒலிநயம் வாய்க்கப்பெறாத கவிதைகள் உயிரற்ற உடலாகவே புறக்கணிக்கப்படுகின்றன.*[11]

*என்று திருநாவுக்கரசு கருத்துரைத்துள்ளார்.*

*இதுவரை கற்பனை – சொல் விளக்கம், கற்பனை குறித்து அறிஞர்கள் கருத்துகள், கற்பனை வரையறை, கற்பனை தோற்றம் குறித்து விரிவாக விளக்கப்பட்டது. இனி, கலித்தொகையில் அமைந்துள்ள கற்பனை நலன்களை எடுத்துரைக்கப்படுகின்றன.*

### ***பாலைக்கலியில் கற்பனை***

*பாலைத்திணையில் இடம்பெறும் பாடல்கள் அனைத்திலும் கற்பனை நலம் மிளிர்வதைக் காணமுடிகிறது. தலைவியைப் பிரிய நேரும் தலைவனுக்குப் பல நிலைகளில் தலைவியின் துயரினை எடுத்துரைத்து பாலை நிலங்களில் இடம்பெறும் புல், பூண்டு, வறண்ட நிலம், தாவரம் விலங்கின் நிலை என அனைத்தையும் காரணம் காட்டி நீ பிரிவதனால் தலைவியின் நிலை அதனைப் போன்று அழிந்துபோகும் எனத் தலைவனுக்கு அறிவுறுத்தப்படுகின்றது. பாலைத்திணையில் உரிப்பொருளுக்கு ஏற்ப தலைவன் தலைவியைப் பிரிதல் வாழ்வு பாடல்கள் முழுதும் விரவிக் கிடக்கின்றது. இந்த நிலை பெருங்கடுங்கோவின் கற்பனைத் திறனில் விவரிக்கப்படுகின்றது.*

*தலைவன் தன் கடமையின் காரணமாக தலைவியைப் பிரிய நேருகிறது. தன்னைப் பிரிந்து தலைவன் செல்லும் வழியின் கொடுமைகளை நினைத்துத் தலைவனுக்கு ஏதாகிலும் ஊறு நேருமோ என்று வருந்த அவனைத் தடுத்து நிறுத்த நினைத்த தோழி அவனுக்குப் பாலை வழியின் கொடுமைகளையும் அங்கே அழிந்து கிடக்கும் இயற்கையின் நிலையை எடுத்துரைத்துப் புலவரின் கற்பனைத் திறனுக்குத் தக்க சான்றாக அமைகிறது.*

*செல்லுநீள் ஆற்றிடை சேர்ந்தெழுந்த மரம்வாட*

*புல்லு விட்டு இறைஞ்சிய பூங்கொடி – தகைப்பன.*

*பிணிபு நீ விடல் சூழின் பிறழ்தரும் இவள் என*

பணிபு வந்து இரப்பவும் பல சூழ்வாய் ஆயினை

துணிபு நீ செலக் கண்ட ஆற்றிடை அம்மரத்து

அணிசெல வாடிய அம்தளிர் தகைப்பன.[12]

தலைவனை அணுகி நீ பிரிந்தால் தலைவி உயிர்வாழமாட்டாள் என்று தோழி சொல்கின்றாள். அப்பொழுதும் அவள் சொற்களைத் தலைவன் பொருட்படுத்தவில்லை. பின்னர் தலைவனை நோக்கி நீ தலைவியை விட்டுப் பிரிவதனால் தலைவிக்கு ஏற்படும் துன்பங்களை உனக்குப் பலவாறாகப் பணிந்து கூறியும் என் உரையை நீ ஏற்காமல் காட்டு வழியைக் கடந்து செல்ல முற்படுகின்றாய். செல்லும்பொழுது அவ்வழியிலே நீர் வற்றிய சுனையைக் காண்பாய். இலையோடு சேர்ந்து மலர்களும் வாடிக்கிடப்பதைக் காண்பாய். நிலம் வறண்டு பொரிந்து கிடப்பதைக் காண்பாய். அதுபோல நின் தலைவியும் ஆகிவிடுவாளோ என்று நீ நினைப்பாய். அதனால் அச்சுனை நீ மேலும் செல்வதைத் தடுத்து, உனக்கு அறிவுரை கூறும் அதையும் மதியாது நீ மேலும் செல்வதைத் தடுத்து உனக்கு அறிவுரை கூறும். அதையும் மதியாது நீ உன் பயணத்தைத் தொடர்வாயானால் பட்டுப் போன மரமும் அதனைத் தழுவி வாழ முடியாத பூங்கொடிகளும் உனக்கு அறிவைத் தரும். அப்பொழுதும் நீ தெளிவுபெறாவிடின் அவ்வழியில் நீ முன்பு சென்றபோது அழகாக இருந்த மரம் அழகழிந்து நிற்பதையும் அதன் தளிர்கள் வாடிக் கிடப்பதையும் காண்பாய். அவை உனக்கு அறிவூட்டி உன் தலைவியை நினைவுபடுத்தும் என்று தோழி கூறினாள்.

இதனைப் போன்றே பொருள் தேடித் தலைவியைப் பிரிய நேரும் தலைவனுக்குத் தோழி கூறும் உவமை கற்பனை வளம் நிறைந்ததாக அமைகின்றது. இந்தப் பாடலில் இடம்பெற்ற உவமைகள் பெருங்கடுங்கோவின் புலமையைப் பரந்து விரிந்த அவரின் சிந்தனை வளத்திற்கு சான்று பகர்கின்றது.

கல்லெனக் கவின் பெற்ற விழவு ஆற்றுபடுத்த பின்

புல்லென்ற களம் போலப் புலம்பு கொண்டு அமைவாளோ?

ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோல்

பாழ்பட்ட முகத்தோடு பைதல் கொண்டு அமைவாளோ?

ஓர் இரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்

நீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ?[13]

தலைவனோடு தலைவி ஒருங்கே கூடியிருக்கும் காலங்களில் தலைவி கலகலப்பாகவும் கவின் மிக்கவளாகவும் காணப்படுவாள். தலைவனைப் பிரிந்தால் தலைவி எப்படி ஆவாள் என்பதை ஓர் உவமை மூலம் தோழி தலைவனுக்கு உணர்த்துகிறாள். திருவிழா நடக்கும்பொழுது அவ்விடம் ஆரவாரம் மிகுந்து அழகொடு மிளிரும் என்பதையும், விழா முடிந்தபின் தோற்றம் கெட்டொழியும் என்பதையும் சுட்டிக்காட்டி தலைவன் உடனிருத்தலை திருவிழா நடக்கும் காலத்துக்கும் தலைவன் பிரிதலை விழா முடிந்துபோல காலத்துக்கும் தோழி ஒப்பிடுகிறாள்.

தலைவன் தலைவியைப் பிரிய நேரும்போதெல்லாம் தோழி அவனுக்கு அறிவுரை புகட்டி தலைவியைப் பிரியாதிருக்க முயற்சிக்கிறாள். தோழியின் வாயிலாகக் கூறப்பெறும் கருத்துகள் யாவும் கற்பனையின் உச்சமாகத் திகழ்கிறது. தலைவன் வெளியூர் செல்ல விரும்புகிறான். பாலை வழியில் செல்வதற்கான கருவிகளைத் தயார் செய்கிறான்.அவன் அம்புகளை ஆராய்ந்துகொண்டிருந்த போது தலைவியின் கண்கள் நீர்நிலைகளில் இருக்கும் நீல மலர்கள் தண்ணீர் சொரிவதைப் போல கண்ணீரைச் சொரிகின்றன. மற்றொரு நாள் தலைவன் தன் சக்கரப் படையினைத் துடைப்பதைக் கண்ட தலைவியின் வளையல்கள் வேகமாக வீசும் காற்றில் காம்பறுந்து வீழ்ந்த காந்தள் மலர்கள் போலக் கழன்று வீழ்ந்தன. இதனைக் கண்ட தோழி தலைவியின் நிலையைப் புரிந்துகொள்கிறாள். மேலும் தலைவன் வில்லினைச் சரிசெய்யும்போது தலைவியின் முகம் மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரனைப் போன்று ஒளியிழந்து காணப்படுகின்றது. இதனைப் பெருங்கடுங்கோ,

நீயே செய்வினை மருங்கில் செலவு அயர்ந்து யாழநின்

கைபுனை வலிவில் ஞாண் உளர்தீயே

இவட்கே செய்வுறு மண்டிலம் மையாப்பதுபோல்

மைஇல் வாள்முகம் பசப்பு ஊரும்மே[14]

என்று எடுத்துரைக்கின்றார். இந்தப் பாடல் மூலம் தலைவியின் நிலை நல்ல உவமையின் மூலம் வெளிப்படுகின்றது.

ஒருநாள் தலைவன் தன் கையாலேயே செய்த வலிய வில்லினை எடுத்து நாண்பூட்டி வீட்டிலேயே சரியாக வில் செயலாற்றுமா என்பதை ஆராய்ந்து பார்க்கிறான். இதைக் கண்ணுற்ற தலைவியின் முகத்தைத் தோழி கவனிக்கிறாள். மேகத்தால் மறைக்கப்படும் சந்திரன் எப்படி ஒளியிழந்து போகுமோ அப்படித் தலைவியின் முகம் மங்கிப் பசலைப் படந்து அழகும் கெடுகிறது. இதன் காரணம் என்ன என்று தலைவியைத் தோழி கேட்கிறாள். தலைவன் வெளியூர் செல்ல எண்ணியதால்தான் வில்லைச் சரிபார்க்கிறான் என்றும் தலைவனைப் பிரிந்து எப்படி தன்னால் இருக்கமுடியும் என்றும் தோழியிடம் தலைவி கூறுகிறாள். தலைவியின் மனநிலையைத் தோழி புரிந்துகொள்கிறாள்.

**வெம்மை நிலை**

பாலைத்திணைப் பாடல்களில் பிரிவால் வாடும் தலைவியின் நிலையை கதிரவனின் வெம்மை, நீர்நிலை வறண்ட பாதைகள், வாடி வதங்கி காணப்பெறும் தாவரங்கள் என அனைத்தையும் உதாரணம் காட்டி உணர்த்தப்படுகின்றது. பாலை நிலத்தில் கதிரவனின் வெம்மையை பெருங்கடுங்கோ நல்லதொரு உவமையின் மூலமாக எடுத்துக்காட்டுகின்றார்.

நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினை வாங்க

கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல ஞாயிறு

கடுகுபு கதிர்முட்டிக் காய்சினம் தெறுதலின்[15]

நடுநிலைமை தவறிய கருணையில்லாத அமைச்சனின் சொற்கேட்ட அரசன் கொடுமையான செயல்களைச் செய்தால் அவனது கொடுங்கோலாட்சி எவ்வண்ணம் மக்களைக் கொடுமைக்கு உள்ளாக்குமோ அவ்வண்ணம் கதிரவன் கடும்வெயிலைச் செலுத்தி வழிப்போக்கர்களைக் கொடுமையான துன்பத்திற்கு உள்ளாக்குகிறான்.

வறண்ட நீர் நிலை

பாலைத்திணையில் வெம்மையைப் பாடுவதில் பெருங்கடுங்கோ தனித்த சிறப்புடையவராகத் திகழ்கிறார். அவர் காண்கிற காட்சிக்குப் பெருங்கடுங்கோ வடிவம் தருகிறபோது அதன் தீவிரத் தன்மை நன்கு உணரமுடிகிறது. பாலை நிலத்தில் வாழும் பல்வேறு உயிரினங்களின் வாழ்வும் அவை ஒவ்வொன்றுன் ஒன்றுக்கொன்று காட்டும் அன்பும் பாலை நிலத்தில் பசுமை தழைக்கச் செய்யும் நயத்தோடு வெளிப்படுத்துகின்றார். காட்டு வெளியில் காணக்கிடைக்கும் துளி நீரை குட்டி கலக்கிவிட களிறும் பிடியும் அன்போடு அதைப் பருகும் பாங்கினை இந்தப் பாடல் மூலம் காட்சிப்படுத்துகின்றார்.

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்

கடியவே கனங்குழாஅய் காடு என்றார் அக்காட்டுள்

துடி அடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே[6]

காட்டுவழியில் யானைக் கன்று கலக்கிய நீரை ஆண் யானை தான் முதலில் அருந்தாமல் தன் பெண் யானையை அருந்தச் செய்து மகிழுமாம். கன்று கலக்கிவிட்டதே என்ற கவலையன்றி அதன் தாயும் தந்தையும் ஆகிய பிடியும் களிறும் மகிழ்ந்து அருந்தின. ‘அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ்’ என்னும் திருக்குறள் கருத்தைத் தலைவி எண்ணினாள். தன் தலைவனை அந்தக் களிறாகவே கருதுகிறாள் தலைவி.

**பிரிவு துயரம்**

பிரிவின் துயரம் இழை இழையாக விவரிக்கும்போக்கு கடுங்கோவிற்கு சிறப்பாகக் கைவரப் பெற்றிருக்கின்றது. பிரிந்து செல்லும் தலைவனைத் தடுத்து நிறுத்த தோழிக்கு அறிவுறுத்தப்படுகிறது. அவளும் பலவாறு தலைவனைத் தடுத்து நிறுத்த முனைகிறாள். அது முடியாமல் போகிறது. தலைவன் தலைவியைப் பிரிவதில் உறுதியாக இருக்கிறான். அதனால்தான் அவன் காலம் தாழ்ந்து எழுகிறான் என்பதை இந்தப் பாடல் மூலம் உணர்த்துகிறார்.

வெறிநிரை வேறாகச் சார்ச்சாரல் ஓடி

நெறி மயக்குற்ற நிரம்பா நீடு அத்தம்

சிறுநனி நீ துஞ்சி ஏற்பினும் அஞ்சும்

நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்

உரனுடை உள்ளத்தை செய்பொருள் முற்றிய[17]

இவ்வாறு இந்தப் பாடலில் தலைவன் தலைவியைப் பிரியும் அந்தக் காட்சி மிக நுண்ணிய முறையிஒல் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

தலைவனைச் செலவழுங்குவிக்க எண்ணிய தோழி தலைவனை நோக்கி, உன் மனைவியைப் பற்றி நான் கூறித்தான் நீ தெரிந்துகொள்ளவேண்டிய அவசியமில்லை. நறிய நுதலையுடையவளாகிய நின் தலைவியும் நீயும் துயில்கொண்ட காலத்தில் தலைவி எழுந்த பின்னும் நீ சற்று நேரம் துயின்றாய். அதற்கே தலைவி அஞ்சினாள். அவள் அஞ்சியதன் காரணத்தை நீ அறிந்திருக்க மாட்டாய். நீ தூங்குகின்றபோது சிறிது நேரம் விழித்திருந்து தலைவியைப் பிரிவது பற்றி எண்ணிக் கொண்டிருந்தாய் என்றும் அதனால்தான் எழவேண்டிய நேரத்தில் எழாது காலந்தாழ்ந்து எழுந்தாய் என்றும் தலைவி கருதி அஞ்சினாள். அத்தகைய மென்மைப் பதிவு கொண்ட தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்லும் நீ மிகுந்த மனவலிமை கொண்டவனாகத்தான் இருக்கவேண்டும்.

எல்வளை எம்மொடு நீவரின் யாழநின்

மெல் இயல் மேவந்த சீறடி தாமரை

அல்லிசேர் ஆய் இதழ் அரக்குத் தோய்ந்தவை போல்

கல் உறின் அவ்வடி கறுக்குந அல்லவோ?[18]

அப்பொழுது தலைவன் தலைவியை நோக்கி ஒளியுமிழும் வளையணிந்து விளங்குபவளே மென்மை மிகுந்த உன் சிறிய பாதங்கள் தாமரை மலரின் உள்ளிதழ் போன்றவை. அவை பாலை நிலக் கற்களிலே தோய்ந்தால் இங்குலிகம் தோய்ந்த தாமரை இதழ்கள் போலக் கன்றிக் கருத்துவிடும். அதை நான் எவ்வண்ணம் பொறுத்துக் கொள்ள இயலும்.

**தலைவிக்குப் பாலையின் கொடுமையை உணர்த்தல்**

தலைவனின் பிரிவைத் தடுக்க முயலும் தலைவிகளுக்கு நடுவில் பாலை வழியே தன்னுடன் பயணிக்க நினைக்கும் தலைவிக்கு பாலையின் கொடுமையைக் கற்பனை நயத்துடன் விளக்கும் பாடலாக இந்தப் பாடல் அமைந்துள்ளது. முதலில் பாலை சுரத்தின் வழிகள் எத்தகைய கொடுமைகள் நிறைந்தது என்பதை புலப்படுத்துகிறார். போர் செய்வதில் ஆற்றலுள்ள தலைவன் பகை நாட்டினைத் தீமூட்டி அழிப்பான். அவ்வாறு அழிக்கப்பட்ட நாடு போன்று கரிக்கட்டையாக அந்தக் காடு இருக்கும் என்று அறிவுறுத்துகிறாள்.

இதனைக் கேட்ட தோழி இத்தகைய கொடும் பாலையில் கொடும் வழியாகப் பயணித்து துயருறும் தலைவியின் அழகை நீ ஈட்டிவரும் பொருள் மீட்டுத்தருமா என்றும் கேள்வியெழுப்புகிறாள்.

புரிபு நீ புறம் மாறி போக்கு எண்ணி புதிது ஈண்டிப்

பெருகிய செல்வத்தான் பெயர்த்தரல் ஒல்வதோ

செயலை அம் தளிர் ஏய்க்கும் எழில் நலம் அந்நலம்

பயலையால் உண்ணப்பட்டுப் பண்டை நீர் ஒழிந்தக்கால்

போய் அற்ற கேள்வியால் புரையோரைப் படர்ந்துநீ

மை அற்ற படிவத்தான் மறுத்தரல் ஒல்வதோ

*தீம்கதிர் மதி ஏய்க்கும் திருமுகம் அம்முகம்*

*பாம்புசேர் மதிபோல் பசப்பு ஊர்ந்து தொலைந்தக்கால்*[19]

*காட்டின் வழிக்கொடுமைகளை விளக்கிய தோழி தலைவனை நோக்கி "நீ புறப்பொருளை விரும்பி அகப்பொருளை இழக்க எண்ணுகிறாய்; உன் மனைவியை வாட்டமுறச் செய்தால் அவளது அசோகின் இளந்தளிர் போன்ற அழகையெல்லாம் பசலைப் பற்றிக் கொள்ளும். இவளது எழிலை நீ ஈட்டிக் கொண்டு வரும் பொருள் மீட்டுத் தராது.*

*உன் தலைவியின் முகம் சந்திரனைப் போன்று அழகுடையது. நீ பிரிந்தால் கிரகணம் பிடித்த திங்களைப் போன்று பசலை படர்ந்து அழகழிந்து வாடும். தலைவியைப் பிரிந்து சென்று சான்றோர் பலரைச் சந்தித்து மாசற்ற மனமுடையவனாக நீ வந்தாலும் என்ன பயன்? உன்னுடைய மாசு நீங்கிய மனம் உன் தலைவியின் அழகை மீட்டுத் தரும் வல்லமையுடையதோ? நீயே எண்ணிப்பார்.*

**தலைவி வேண்டுதல்**

*தலைவன் எவ்வளவு வேண்டியும் தலைவியைப் பிரிந்து பொருள் தேடிச் செல்வதில் உறுதியாக இருக்கிறான். அவன் செல்லும் பாலை நிலம் மிகவும் கொடியது. கதிரவன் தன் வெம்மையை ஒளிக்கற்றைகளால் இந்த உலகையே கொதிக்கவைத்துக் கொண்டிருக்கிறான். தன் நிலையையும் பொருட்படுத்தாது என் அன்பைத் துறந்து செல்பவனின் பயணமானது நன்றாக இருக்கவேண்டும் என்று இறைவனை வேண்டத் தொடங்குகிறாள்.*

*ஒளியிழாய் ஈங்கு நாம் துயர் கூறப் பொருள்வயின்*

*அளி ஒரீஇக் காதலர் அகன்று ஏகும் ஆரிடை*

*முளிமுதல் மூழ்கிய வெம்மை தீர்ந்து உறுக என*

*வளிதரும் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ*[20]

*ஆனால் இவ்வாறு வேண்டுவதும் நல்லதொரு கற்புத் தன்மைக்கு அடையாளமாகத் திகழாதே என்று வருந்துகின்றாள். இவ்வாறு இயல்பாக வெளிப்படும் இயற்கையின் சீற்றங்களையும் தம் நிலைக்குப் பொருத்திப்*

பார்க்கும் தலைவியின் சூழல் நல்ல கற்பனைத் திறனுக்குச் சான்றாக அமைகின்றது.

தலைவிக்குத் தனிமைத் துன்பத்தைத் தந்து பொருளே சிறந்தது என்று கருதி போகுமிடம் பகைப்புலம் என்றும் எண்ணாமல் செல்லுதற்கு அரியவழியில் சென்று கொண்டிருக்கிறான். கதிரவனின் வெம்மையால் நிழல் தரும் மரக் கொம்புகளும் வாடிக் கிடக்குமே எனத் தலைவி வருந்துகிறாள். தலைவன் செல்லும் வழியில் நிழல் கிடைக்கச் செய்ய, கதிரவனைத் தம் வெம்மையைக் குறைத்துக் கொள்ளுமாறு வேண்டத் தலைவி எண்ணுகிறாள். ஆனால் அதுவும் தன் கற்புக்குச் சிறந்த வழியல்லவே என்று கலங்குகிறாள்.

**ஊறு நேரும்**

தலைவியைப் பிரிந்துசெல்ல நினைக்கும் தலைவனை தடுத்து நிறுத்த தோழி நினைக்கிறாள். தோழி தலைவனுக்கு இயற்கையின் எழில் நலத்தையெல்லாம் எடுத்துக் கூறி நீரின்றி போனால் இயற்கையின் வளம் குன்றுவதைப் போல நீயின்றிப் போனால் தலைவி தன் உடல் வளம் இழப்பாள் என அறிவுறுத்துகிறாள்.

தோற்றம் சால் தொகு பொருள் முயறிமன் முயல்வளவை
நாற்றம் சால் நனி பொய்கை அடை முதிர் முகையிற்குக்
கூற்று ஊழ்போல் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ
வகையெழில் வனப்பு எஞ்ச வரைபோக வலித்து நீ
பகையறு பயவினை முயறிமன் முயல்வளவை
தகைவண்டு புதிதுண்ணத் தாது அவிழ் தண்போதின்
முகைவாய்த்த தடம்போலும் இளமையும் நிலையுமோ[21]

என்பதை உணரவேண்டும் என்று தெரிவிக்கின்றாள். இத்தகைய தலைவிக்கு நேரும் ஊறு களைய உன் பயணத்தை நீ நிறுத்த வேண்டும் எனக் கூறுகின்றாள்.

நீ பிரிவதால் இவளுக்கு ஏற்படும் காமநோய் இவளது எழில்நலம் யாவற்றையும் அழித்துவிடும் என்பதை நீ அறியமாட்டாயா? பொய்கையில்

தோன்றிய தாமரை மொட்டின் மலர்ச்சியே அதற்குக் கூற்றுவன் ஆயினாற்போல நீ பகைவரை வென்று அவரை வாழவைக்கும் முயற்சியே நின் தலைவியின் அழகு அழிவதற்குக் காரணமாயிற்று என்பதை நீ உணர்வாயோ! அப்படிப்பட்ட நீயே இவளை மகிழ்ச் செய்யாமல் மடிய செய்யலாமோ? பிறர் புகழப் பொருள் தேடிப் பகை நாடு செல்லுவதால் உனக்கும் உன் தலைவிக்கும் ஊறு நேரும் என்பதை உணரவேண்டும்.

மேலும் தலைவி, இந்த உலகத்தில் மனைவியைப் பிரிந்துசென்று பொருள் தேடாதவர்களும் இன்பமாக வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். அவ்வாறு பொருள் தேடிச் செல்லாதவர்கள் யாரும் உண்ண உணவின்றி மாய்ந்து விடுவதில்லை. இளமையையும் மனைவியோடு தாம் கொண்டிருக்கும் இன்ப நுகர்ச்சியை ஒருங்கே பெற்றவர்கள் பொருளை ஒரு பொருட்டாக கருதமாட்டார்கள். இல்லறத்தில் நிகழும் இன்ப வாழ்க்கையைவிட சிறந்த தன்மை செல்வத்திடம் இல்லை என்பதைக் கூறி அறிவுறுத்துகிறாள்.

ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோ ஒகை

ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்

ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதரோ

சென்ற இளமை தரற்கு[22]

என்று கூறி தலைவனின் பயணத்திற்கு தடைபோடுகிறாள்.

ஓர் ஆடைய இரு கூறாக்கித் துண்டுபட்ட சிறிய ஆடையை உடுத்துமளவுக்கு வறுமையுற்று வாழ்பவரேயாயினும் அது பற்றிக் கவலையுற்று வாழ்வதே இன்ப வாழ்வாகும் என்று தோழி கூறித் தலைவனைச் செலவு அழுங்குவித்தாள். இப்பாடலுக்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கவுரையில் நுண்பொருள் கூறல் பெண்மைக்கு இயலாது என்னும் ஆணாதிக்கத் தத்துவத்தைக் கூறி, இப்பாடலில் தோழி தலைவன் பண்டு கூறிய செய்திகளை அவனுக்கு நினைவூட்டினாள் என்று கூறியிருப்பது தேவையற்றது.

## *இல்லறச் சிறப்பு*

*எத்தகைய வறுமை வந்தாலும் இணைபிரியாது உயிர் வாழ்தலே சிறந்த இல்லறத்திற்கு எடுத்துக்காட்டாகும். ஒவ்வொரு நாளும் இளமையானது அழிந்துகொண்டே போகும். பொருள்மேல் ஆசைவைத்து செல்வத்தை ஈட்டுவதற்காகத் தலைவியைப் பிரிந்துசெல்வது இல்லற நெறி ஆகாது எனக் கூறுகின்றாள்.*

*மாணெழில் வேய்வென்ற தோளாய் நீவரின் தாங்கும்*

*மாண் நிழல் இல ஆண்டை மரம் எனக் கூறுவீர்*

*நீள் நிழல் தளிர் போல நிறன் ஊழ்த்தல் அறிவேன் நும்*

*தாள் நிழல் கைவிட்டு யான் தவிர்தலைச் சூழ்வலோ*

*எனவாங்கு*

*அனையரும் வெம்மைய காடு எனக் கூறுவீர்*

*கணை கழிகல்லாத கல்பிறங்கு ஆரிடை*

*பணை எருத்து எழில் ஏற்றின் பின்னர்ப்*

*பிணையும் காணீரோ பிரியுமோ அவையே*[23]

*என்று அந்தப் பாலையில் வாழும் மானினத்தின் இணைபிரியா வாழ்க்கையை எடுத்துக் கூறி தன்னையும் உடன் அழைத்துச் செல்லவேண்டும் என்று வற்புறுத்துகிறாள்.*

*தலைவி: நிழல் பற்றி நீர் கூறுகின்றீர். நான் நிழலிலே வளரும் தளிர்பற்றிக் கூறுவதையும் சற்று கேட்பீராக. நிழலுக்கு அடியில் வளரும் தளிர் நன்றாக வளராது என்பதை நீர் அறியமாட்டீரா? அந்தத் தளிர் பசலையுற்று நிறம் வாடிவிடும். ஆனால் உம்முடைய தாள் நிழல் நீள் நிழல் போன்றதன்று. பேரருள் புரியும் தன்மையுடையது. அதனை அறிந்தவளாகிய நான் உம்மைவிட்டு அகல நினைக்கவும் மாட்டேன். உம்மைவிட்டுப் பிரிந்து வாழவும் மாட்டேன். சுரத்து வழிச் செல்லும் தலைவரே நான் இவ்வளவு கூறிய பின்னரும் செவிமடுக்காது, சுரத்தின் தன்மையை மட்டுமே எடுத்துரைத்து*

அங்கு நான் வர இயலாது என்று மீண்டும் மீண்டும் கூறுகின்றீர். அந்த வழியிலே உள்ள பாறைகள் பற்றியும் நான் நன்கு உணர்ந்தவள்தான். கற்பாறைகள் நெருங்கியுள்ளதால் எய்யும் அம்புகள் மேலும் செல்லாதவாறு தடுத்து நிறுத்தும் தன்மை உடைய வழிதான் நீர் செல்லப் போகும் வழி என்பதையும் நான் அறிவேன். அத்துடன் வேறொன்றையும் நான் அறிந்து வைத்துள்ளேன். அச்சுரத்தின்கண் பருத்த கழுத்துடைய பார்ப்பதற்கு அழகான கலை மானுடன் அதன் பெண்மானும் செல்லும் என்பதையும் நான் அறிந்துள்ளேன். அவை எக்காரணம் கொண்டும் பிரியாமல் எப்பொழுதும் இணைந்தே வாழ்கின்றன என்பதை நீரும் உணர்ந்து என்னையும் உம்முடன் அழைத்துக் கொண்டு போகுமாறு வேண்டுகிறேன்.

மேலும் தோழி, இந்தப் பூவுலகில் வாழும் பலரும் உறவுகள் தம்மோடு இருக்கும்போது சிறப்பாகப் பேசுவதும் தங்களைப் பிரிந்துசெல்லும்போது பழித்துப் பேசுவதும் இயல்பு. அதனைப் போன்று தலைவியின் கண்கள் நீ அருகில் இருக்கும்போது மகிழ்ச்சியுடன் ஒளி வீசுவதும் நீ பிரிந்துபோகும்போது கலங்கி கண்ணீர் விடுவதும் இயல்பாக உள்ளது. மேலும் நீ பிரிந்துபோகும் பாதை கொடுமையானது. அந்தப்பாதையில்,

ஏழுறழ் தடக்கையின் இனங்காக்கும் எழில்வேழம்

அழுவம் சூழ் புகை அழல் அதர்பட மிதித்துத் தம்

குழுவொடு புணர்ந்துபோம் குன்றழல் வெஞ்சுரம்

இறத்திரால் ஐய! மற்று இவள் நிலைமை கேட்டீமின்[24]

என்று கூறி அறிவுறுத்துகிறாள். வெம்மையால் உலர்ந்திருந்த மூங்கில்கள் தீப்பற்றி எரிந்துகொண்டிருக்கும் மலைச்சாரலில் வாழ்ந்த ஆண் யானைகள் தங்கள் பெண்யானைகளுடன் புதர்கள் அழியும்படியாக நடந்துவந்து தம்மைச் சூழ்ந்த தீயினின்று தப்பித்துக் கொள்ளும் தகைமையை உடைய கொடிய காட்டின்வழியே தலைவன் செல்வதை எண்ணி தலைவி வருந்துவாள் எனத் தோழி கூறினாள்.

**இயற்கையெழில்**

இளவேனில் காலத்தில் தலைவன் திரும்பி வந்துவிடுவதாக உறுதி கூறிச் சென்றான். இளவேனில் காலம் வந்தபிறகும் தலைவன் வராதது கண்டு தலைவி வருந்துகிறாள். இந்தப் பாடலில் புலவர் கற்பனையின் உச்சத்திற்கே சென்றுள்ளார். ஆற்றங்கரையில் உள்ள மரங்கள் அனைத்தும் பூத்துக் குலுங்குகின்றன. அதனைப் பார்க்கும்போது அறநெறியோடு பொருள் ஈட்டுபவனின் செல்வம் வளர்கிறது. முல்லைக்கொடிகளில் பூத்துக் குலுங்கும் அரும்புகள் மனங்கவருவதும் பெண்மானின் மருண்ட பார்வையையும் பெண்களின் புன்முறுவல் போலக் காட்சியளிக்கின்றன. இத்தகைய இயற்கையின் எழில் சூழ்ந்து விளங்கும் இளவேனில் காலத்தில் தலைவன் வராதது தலைவிக்கு எத்தகைய வருத்தத்தை உருவாக்கும் என்பதை கற்பனை நயத்தோடு விளக்குகிறாள்.

நிலம்பூத்த மரமிசை நிமிர்பு ஆலும் குயில் எள்ள
நிலம்பூத்த நிறம் சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ்செய்ய
புலம்பூத்து புகழ்பு ஆனாக் கூடலும் உள்ளார்கொல்
கல்மிசை மயில் ஆல கறங்கி ஊர் அலர் தூற்ற
தொல் நலம் நனி சாய நம்மையோ மறைந்தைக்க
ஒன்னாதார்க் கடந்து அடூஉம் உரவுநீர் மாகென்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்[25]

நிலம்பொலிவு பெற விளங்கும் மரங்களில் உள்ள குயில்கள் என்னை எள்ளி நகையாடுவது போலக் கூவுகின்றன. நன்மைதரும் நமது நிறம் அழியுமாறு நம்மைத் தலைவர் மறந்துபோய்விட்டாரோ? நம்மை மறந்து பிறமகளிரோடு மகிழ்ச்சியுறும்பொழுது அவரின் பொய்மைக்குணம் கண்டு உண்மை அன்பு மிகுந்த நமது கலவியின்பத்தை எண்ணி நம்மை நாடி வரமாட்டாரா?

இளவேனில் வந்ததும் ஆடி மகிழும் மயில்கள் நம் சாயலை வென்று நகைக்கின்றன. ஊரார் அவரது வாராமையைப் பார்த்து அலர் தூற்றி மகிழ்கின்றனர். பகைவரை வெற்றிக் கொள்பவனும் கடலிலே மரமாகி நின்ற சூரபதுமனை வேல்கொண்டு வென்றவனும் ஆகிய முருகனுக்குத் திருப்பரங்குன்றில் விழா எடுக்கின்றதைக் காண்பதற்காகவாவது அவர் வரமாட்டாரா?

அன்பு இல்லாமல் என் மலர் போன்ற கண்களில் மயக்கத்தை மட்டுமே தந்து என்னிடம் இன்பமுற்ற தலைவர் நம்மை மறந்தே போய்விட்டாரோ? இந்த இளவேனில் காலத்தில் வைகறையாற்றில் நடக்கும் விழாவில் பரத்தையர்கள் கூடி ஆடி மகிழ்வர். நம்மைப் பார்க்க வராவிட்டாலும் அப்பரத்தையர்களைக் கண்டு மகிழவாவது வரமாட்டாரா? என்று கூறிக் கலங்கினாள்.

**தலைவியின் புலம்பல்**

இளவேனில் தொடங்கிய காலம் இயற்கையெழில் சூழ்ந்த காலமாக இருக்கிறது. இந்தக் காலம் தொடங்குவதற்கு முன் திரும்ப வந்துவிடுவதாகக் கூறிச் சென்ற தலைவன் அந்தக் காலம் தொடங்கிய பிறகும் தலைவன் வரவில்லை. தலைவியின் நிலை இளவேனில் காலத்தோடு ஒப்பிடப்படுகின்றது. தலைவி வாழ்ந்து வரும் ஊரில் வைகை ஆற்றங்கரைகள் இருபுறங்களிலும் உள்ள மரங்கள் பூத்துக் குலுங்குகின்றன. அந்த மரங்கள் தலைவியைப் போன்று கண்ணி சூடிய மகளிரை நோக்கி, நீங்கள் சுனையில் பூக்கும் பூக்களைத் தேடி ஓட வேண்டியதில்லை. சிறந்த நறுமணமுள்ள பூக்களை நாங்களே கொடுக்கிறோம் என்று கூறுவதுபோல தங்கள் மரக்கிளைகளைத் தாழச் செய்து பூங்கொத்துகளோடு பொலிவுற்று காட்சி தருகின்றது. மேலும் இந்த இளவேனில் காலம் குறித்து தலைவி தன் தோழியிடத்தில் மொட்டுகள் தம் இதழ்களை விரித்து மலர்களாகின. குயில்கள் தம் இணையைக் கூவி அழைக்கின்றன. ஆனால் நம் தலைவன் அழைக்கும் நிலையில் இல்லை என்று தெரிவிக்கிறாள். மேலும் இந்த இளவேனில் எழில் குறித்து,

புதலவை மலராயின் பொருங்கரின வண்டாயின்
அயலதை அலராயின் அகன்று உள்ளார் அவராயின்
மதலை இல் நெஞ்சொடு மதனிலல் என்னாது
நுதல் ஊரும் பசப்பாயின் நுணங்கிறை அளி என்னோ
தோயின அறலாயின் சுரும்பு ஆர்கமும் சினையாயின்
மாவின தளிராயின் மறந்து உள்ளார் அவராயின்
பூ எழில் இழந்த கண் புலம்ப கொண்டு அமையாது
பாயல் நோய் மிகுமாயின் பைந்தொடி அளி என்னோ
என ஆங்கு[26]

சிறு சிறு புதர்களில் கூட பூக்கள் நிறைந்து காட்சியளிக்கின்றன. மலர்ச் சோலைகளில் வண்டினங்கள் ஆரவாரிக்கின்றன. அயலார் பலரும் நம்மை அலர் தூற்றுகின்றனர். இந்நிலையிலும் நம் தலைவர் நம்மை எண்ணியதாகத் தோன்றவில்லை. என் நெற்றியிலே பசப்பும் படர்ந்துவிட்டது. யான் அதனைத் தாங்கும் வலிமையற்றவள் என்று அந்த பசப்புகூட என்னிடம் இரக்கம் காட்டவில்லை. நம் தலைவர் நம் மீது காட்டும் அன்புதான் எத்தகையதோ?

ஆற்றுநீர் மணலில் தோய்ந்து செறிந்து காணப்படுகின்றது. மலர்களிலே வண்டுகள் தேனுண்டு மகிழ்கின்றன. மாமரத்தில் இளந்தளிர்கள் துளிர்த்து விளங்குகின்றன. நம் தலைவரோ நம்மை மறந்தே போய்விட்டார். என் மலர் போன்ற கண்கள் தனிமைத்துன்பத்தால் உறங்காதுள்ளன. காமநோயோ மிகுதியாகின்றன. பசிய வளையல் அணிந்த என் தோழியே நம் தலைவர் நம்மிடத்துக் காட்டும் அருள்தான் எத்தகையதோ? என்று கூறிப் புலம்பினாள்.

**குறிஞ்சிக் கலியில் கற்பனை**

குறிஞ்சிக் கலியில் கபிலர் கற்பனை வளத்தோடு பல பாடல்களைப் புனைந்துள்ளார். தலைவன் தலைவியின் காதல், இயற்கை எழில் சூழ்ந்த காட்சி, மலையும் நிலமும் என அந்த நிலத்தின் அழகை தன் கற்பனை மூலம் இனிய முறையில் படம் பிடித்துள்ளார். இரவு நேரத்தில் தலைவியைச் சந்திக்க வரும்

தலைவன் பல இன்னல்களுக்கிடையில் மலைகளைக் கடந்து வருகின்றான். தலைவன் நாடு மலைகள் நிறைந்தது. தலைவன் தன் சொல்லைக் கூர்ந்து கவனிக்கவேண்டும் என்ற காரணத்தால் அவனின் நாட்டுவளம் உரைக்கப்படுகின்றது. இந்தப் பாடலில் மலையும் அங்கு உலவும் யானைக் கூட்டங்களும் அதன் செய்கைகளும் கற்பனை நயத்துடன் விளக்கப்பட்டுள்ளது. மேலும் தலைவனைக் காணும் தலைவி மழையைக் கண்ட விளைநிலம் போல அழகு பெறுகிறாள் எனக் கூறுகின்றாள்.

ஆரிடை என்னாய் நீ அரவஞ்சாய் வந்தக்கால்

நீர் அற்ற புலமேபோல் புல்லென்றாள் வைகறை

கார்பெற்ற புலமே போல் கவின்பெறும் அக்கவின்

தீராமல் காப்பது ஓர் திறனுண்டேல் உரைத்தைக் காண்[27]

இத்தகைய வளமான மலை நாடனாகிய தலைவனை நோக்கிய தோழி மலைநாட்டு வளங்களைக் கொண்ட தலைவ, நான் கூறுவதைக் கேட்பாயாக! நீரில்லாத பயிர் வாழ்வது போல நீ இல்லாது வாடும் தலைவி நின்னைக் கண்டதும் பொலிவுற்று விளங்கும் இயல்பைக் கண்டவள். வருவதற்கரிய வழியென்று எண்ணாமல் பாம்புகள் இருப்பினும் அஞ்சாமல் தலைவியைக் காண நீ வருகின்றாய். நீ வந்து திரும்பும் விடியற்காலத்தில் உன்னைக் காணும் தலைவி மழையைப் பெற்ற விளைநிலம் போல வளம் கொண்ட அழகைக் கொண்டு நிற்பாள். ஆனால் நீ பிரிந்ததும் அந்த அழகு நிலையாமல் குலைந்து போய்விடும். எனவே தலைவியின் அழகு குலையாமல் காப்பது உன் கடமையல்லவா? என்று கூறி அவளுடைய அழகைப் பேணிக்காக்க வேண்டியது உன்னுடைய கடமைகளுள் ஒன்றாகும் என்று பதில் தருகிறாள்.

குறிஞ்சிக் கலியில் பெரும்பாலும் தலைவனின் நாடு மிகுந்த வருணனையுடன் கற்பனை நயத்தோடு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. பேராபத்தில் சிக்கியிருக்கும் தலைவியைக் காப்பாற்றுகிறான் தலைவன். இதனால் இருவருக்கும் காதல் மலருகிறது. இரவுக்குறியில் சந்தித்து இருவரும் இன்பம் துய்க்கின்றனர். இந்தக் காதல் நிறைவேற தோழி பாடுபடுகின்றாள்.

அவனும்தான் ஏனல் இதணத்து அகிற்புகை உண்டு இயங்கும்

வானூர் மதியம் வரை சேரின் அவ்வரை

தேனின் இறால் என ஏணி இழைத்திருக்கும்

கான் அகல் நாடன் மகன்[28]

அவனும் சாதாரணமானவன் அல்லன். அவனது நாட்டில் தினைப்புனங்கள் நிறைந்துள்ளன. அவற்றில் இடப்பட்ட பரண்களில் புகைக்கப்படும் அகிற்புகை மேலோங்கிச் சென்று சந்திரனையே ஒளிகுன்றச் செய்யும். ஒளிகுன்றிய சந்திரன் அவன் நாட்டு மலையின் உச்சியில் தோன்றும்பொழுது அது ஒரு தேனடை போலக் காணப்படும். அந்த மலையிலே உள்ள மூங்கில்கள் தேன்கூட்டை அடைய செய்யப்பட்ட கணுக்களையுடைய ஏணியைப் போல் தோற்றமளிக்கும். அத்தகைய மூங்கில் காடுகளைக் கொண்ட மலைநாட்டுத் தலைவனின் மகனே நம் தலைவிக்கு மணாளனாக வாய்த்துள்ளான் என்று கூறினாள் என்று அவன் நாட்டின் பெருமைகளைக் கூறி அவர்கள் காதல் நிறைவேற கருவியாய் இருக்கின்றாள்.

**தலைவன் பண்பு**

தலைவனின் பண்பு நலன்களை குறிக்கும் வகையில் பல்வேறு விதமான கற்பனையோடு பாடல்களைப் புனைந்துள்ளார் கபிலர். தலைவன் குளிர்ச்சி மிகுந்த மலைப்பகுதியில் பூத்த பூக்களில் தேனை உண்ட வண்டுகள் அவற்றை விட்டு நீங்கி விடுவதனைப் போல பெண்களின் அழகினை நுகர்ந்துவிட்டு தலைவியைத் துறந்துவிடும் பண்புள்ளவனாக தலைவன் இருக்கிறான் என்பதை இந்தப் பாடலின்மூலம் வெளிப்படுத்துகின்றார். மேலும் தலைவனின் குணநலன்களைக் குறிக்கும் விதமாக வள்ளைப்பாட்டு பாடுவதில் தலைவியும் தோழியும் தலைவனைப் போற்றியும் தூற்றியும் பாடி வருகின்றனர்.

ஆய்நுதல் அணிகூந்தல் அம்பணைத் தடமென் தோள்

தேன் நாறு கதுப்பினாய்! யானும் ஒன்று ஏத்துகு

வேய் நரல் விடரகம் நீ ஒன்று பாடித்தை

கொடிச்சியர் கூப்பி வரை தொழுகைபோல்

*எடுத்த நறவின் குலை அலங்காந்தள்*

*தொடுத்த தேன் சோர தயங்கும் தன் உற்றார்*

*இடுக்கண் தவிர்ப்பான் மலை*[29]

*இவ்வாறு தலைவனை இழித்தும் பழித்தும் பாடும் பாடல்களில் தலைவனின் மலையும் அங்கிருக்கும் இயற்கையின் எழிலும் பலவகையாலும் பாடப்படுகின்றது. தலைவனின் மலையின் அழகினைப் போற்றிப் பாட தோழி தலைவியிடம் வேண்டும்பொழுது தலைவியின் அழகு தோழியால் கற்பனை நயத்தோடு வெளிப்படுத்தப்படுகின்றது. பொலிவுற்ற நெற்றி, அழகுபடுத்தப்பெற்ற கூந்தல், மூங்கிலைப் போன்ற பருத்த தோள்கள், மலர் மணம் கமழும் கூந்தல் எனத் தலைவியைப் புகழ்வதில் கற்பனை வளம் நிறைந்திருக்கிறது.*

*தலைவி பாடாமல் இருந்ததால் தோழியே பாடலானாள். மலைவாழ் பெண்கள் மலைக்குத் தெய்வமான முருகனை வணங்கும்போது தம் இருகைகளையும் கூப்பி வணங்குவர். அவர்களின் கூப்பிய கைகளைப் போன்று தேன்சொரியும் காந்தள் மலர்க்கொத்துகள் சேர்ந்து விளங்குகின்ற மலை நம் தலைவனுடையது. அம்மலை தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பத்தை நீக்கும் ஆற்றல் பெற்றது'' என்ற பொருள்படப் பாடித் தலைவனை இயற்பட மொழிந்து தோழி புகழ்ந்தாள்.*

*தலைவனைத் தோழி புகழ்ந்ததைப் பாடிக் கேட்ட தலைவி ''உற்றார் இடுக்கண் தவிர்க்கும் தலைவன் என்றாய். கலவியறிவில்லாத ஆண்குரங்கு, தன் இனத்தொடு கூடிச்சென்று, மெல்லிய விரல்களையுடைய பெண் குரங்கைத் தனக்கு மனம் செய்துவைக்கவேண்டும் என்ற தன் குரையை எடுத்துரைக்கும் சிறந்த பண்பைக் கொண்ட அம்மலைக்குத் தலைவன் தன்னைப் புணர்ந்தவருடைய எழில்நலம் குறைந்தபோது துன்புறுவர் என்பதை அறிந்தபோது அவரையும் விட துன்புறுவான்'' என்று பொருள்தரக்கூடிய வள்ளைப் பாடலைப் பாடினாள். மந்தியை விரும்பும் கடுவன்கூட பெண்பேச வரும் மலையையுடைய தலைவன் தன்னைப் பெண்பேச வரவில்லையே என்ற ஏக்கத்தைத் தலைவி தெரிவித்தாள்.*

தலைவியின் ஏக்கத்தை உணர்ந்திருந்த தோழி தலைவியை நோக்கி "கட்டவிழ்த்து இதழ் விரித்த மகரந்த தாதுக்கள் கொண்ட பூக்கள் செறிந்து தாழ்ந்துள்ள கிளைகளில் காணப்படும் தளிரைப் போன்று அழகு மிகுந்த நம் மேனியின் எழில் குலையுமாறு துன்பம் கொடுத்த அந்தத் தலைவனின் அரிய மலையின் பக்கங்களைப் பழித்தே பாடி இனி இயற்பட மொழிதலைத் தவிர்ப்போம்" என்று கூறினாள்.

**தலைவனின் இசைவு**

களவுப்புணர்ச்சியை நீட்டிக்க விரும்பிய தலைவன் தலைவியின் இடித்துரைத்தலாலும் தோழியின் வள்ளைப்பாட்டின் வேண்டுதலாலும் அதனை நீட்டிக்க விரும்பாமல் தலைவியை உடனடியாகத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறான். தலைவனுக்குரிய மலைநாட்டுக் குன்றுகளின் வளங்களைப் பற்றிப் போற்றி உணர்வுகுன்றாமல் பாடுவதற்கு தலைவியைத் தோழி அழைக்கிறாள். தலைவனின் மலைநாட்டில் மழைபெய்யும்போது இரவுப்பொழுதில் கொடி படர்வதுபோன்ற மின்னல்களையும் இடிகளையும் மேகங்கள் தோற்றுவிக்கும் என்று குன்றையும் அங்கும் நிகழும் இயற்கை நிகழ்வுகளையும் கற்பனை வளத்தோடு புனையப்பட்டுள்ளது. மேலும்,

இடி உமிழ்பு இரங்கிய விரவுபெயல் நடுநாள்
கொடிவிடுபு இருளிய மின்னுசெய் விளக்கத்து
பிடியொடு மேயும் புன்செய் யானை
அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை ஏறி
கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கை ஒள்வீசிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிரா
தேன்செய் இராஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி

*குலையுடை வாழைக் கொழுமடல் கிழியா*

*பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனைப்*

*பாடுகம் வாழிதோழி தோழி! நல் தோழி! பாடுற்று*[30]

எனவே சங்கப்பாடல்கள் வெற்றுப் புனைவுகளுக்கு இடந்தராமல் இயற்கையுடன் ஒட்டுமொத்த அழகையும் அள்ளித்தருகின்ற கற்பனைக் குவியலாக விளங்கியிருப்பதைக் காணமுடிகிறது.

பலா மரங்களில் பரண் அமைத்துப் புனங்காக்கும் கானவன் யானைகளின் அடியோசை கேட்டுப் பரண்மீது ஏறி கவணையில் கல் வைத்து வேகமாக எறிவான். அவன் எறிந்த கல் பிளவுபட்ட பாறைகளில் வளர்ந்த வேப்பமரத்தில் பட்டுப் பூக்களை உதிர்த்து சிதறச் செய்யும். ஆசினிப் பலாமரத்தில் பழுத்துக் கனிந்த மென்மையான பலாப் பழங்களைக் கீழே வீழ்த்தும். வீழ்த்திய அந்தக் கல் வண்டுகளால் கட்டப்பட்ட தேனடைக் கூடுகளைக் துளைத்துக் கொண்டு ஊடுருவிச் செல்லும். பின்னர் நல்ல மாவடுகளைக் கொண்ட மாமர கொத்துகளை உதிர்க்கும். தாரை ஈன்ற வாழையின் வளமான இலைகளைக் கிழித்துக் கொண்டு சென்று இறுதியாக பலாப்பழத்துள் நுழைந்து தங்கும். இத்தகைய செழிப்பு மிக்க மலைக்குரிய நாடனைப் பாடிப் புகழ என் தோழியே பாட வருவாயாக! என்று கூறித் தன் தலைவியைத் தோழி அழைத்தாள். கவணைக்கல் மேலிருந்து சிறிது சிறிதாகத் தாழ்ந்து வருவதைக் குறிப்பாகப் புலப்படுத்திய புலவரின் இயற்கையறிவு பாராட்டத்தக்கது.

தலைவன் சில வேளைகளில் களவுக்காலத்தை நீட்டிக்க விரும்பி மணநாளை தள்ளிவைத்துக் கொண்டே இருக்கிறான். இதனை விரும்பாத தலைவி, தலைவன் வெகுவிரைவில் தன்னை ஊரறிய திருமணம் செய்துகொள்ள முன்வரவேண்டும் என்று விரும்புகிறாள். அதனை உணர்ந்த தோழி தலைவனின் கனவு நிறைவேற வள்ளைப்பாட்டுப் பாட அழைக்கிறாள். தலைவியே, புலியை வென்ற மதங்கொண்ட புள்ளி வாலையுடைய யானையின் கொம்புகளான தந்தங்களாலும் வண்டினம் ஒலித்துக்கொண்டே தேன் உண்ணும் சந்தன மரங்களாலும் செய்யப்பட்ட உலக்கைகளைக் கையிலேந்தி

ஐவனமென்னும் நெல்லை மலைப்பாறையில் செதுக்கப்பட்ட உரலிலிட்டு குத்திக்கொண்டே வள்ளைப்பாட்டு பாடலாம் என்று அழைக்கிறாள்.

வெருள்பு உடன்நோக்கி வியலறை ஊகம்
இருள் தூங்கு இறுவரை ஊர்பு இழிபு ஆடும்
வருடை மான் குழவிய வளமலை நாடனை
தெருள் தெரியிழாய்! நீ ஒன்று பாடித்தை
நுண்பொறி மான் செவிபோல வெதிர்முளைக்
கண்பொதி பாளை கழன்று உகும் பண்பிற்றே
மாறுகொண்டு அற்றார் எனினும் பிறர் குற்றம்
கூறுதல் தேற்றாதோன் குன்று[31]

போன்ற வரிகள் கபிலரின் கற்பனை வளத்திற்கு சான்று பகர்கின்றன.

தோழி கேட்டுக் கொண்டதற்கிணங்க "பகைமை கொண்டு துன்பங்களைக் கொடுப்பதைப் பொறுக்கமாட்டாத பண்புடையவன் எனினும், பிறரிடம் காணப்படும் குற்றங்களை எடுத்துக் கூறும் பண்பு இல்லாதவன். அவனது மலையில் வாழும் புள்ளிமான்களின் செவியைப் போன்ற பாளை மூங்கில் முளையின் கணுவை மூடி நின்றது. அந்த மென்மை மிகுந்த தோல் போன்ற பாளை கழன்று வீழும் நிலையில் உள்ளது" என்ற கருத்துள்ள பாடலைத் தலைவி பாடினாள்.

தலைவி பாட்டில் அமைந்துள்ள உள்ளுறை நுட்பமானது. மூங்கிலில் முளைத்த கணுக்களைக் காத்திடவே அவற்றைப் பாளைகள் மூடி நின்றன. அப்பாளைகள் கண்களுக்கு தேவையற்றபோது கழன்று வீழ்ந்துவிடும். தலைவியுடன் தனக்கிருக்கும் களவுக்காதலை தேவையான காலம் வரை மறைத்துக் காத்துக் காலம் கனிந்த வேளையில் வெளியிட்டுத் தலைவியை மணம்புரிய எண்ணுபவன் தலைவன் என்ற கருத்தை உள்ளுறையாகத் தலைவி உரைத்தாள் என்க.

**இயற்கையும் மலையும்**

குறிஞ்சித்திணைப் பாடல்கள் அனைத்திலும் மலையின் தோற்றம் அழகிய உவமைகளால் புனைந்துரைக்கப்பட்டுள்ளன. பெருமலைகள் மட்டுமன்றி சிறிய சிறிய குன்றுகளும் கற்பனை நலத்துடன் புனையப்பட்டுள்ளது. தலைவனது மலை, அந்த மலையில் தொடங்கும் அருவி, அந்த மலையில் மலர்ந்துள்ள மலர்களின் எழில் கொஞ்சும் காட்சி, பசும்புல்களாலும் மரஞ்செடி கொடிகளாலும் மலர்களாலும் அந்த மலை போர்த்தப்பட்டிருக்கும் காட்சி அழகுற வடிக்கப்பட்டுள்ளது. இதனை இரா. மாயாண்டி,

> மலைச்சுனைகளைப் பற்றிய கற்பனைகள் குறிஞ்சி நிலப் புனைந்துரைகளில் குறிப்பிடத்தக்கவை. ஆழமான நீருடைய சுனையில் குவளை மலர்ந்திருக்கும்'' [32]

என்று மலையும் சுனையும் மலரும் கற்பனை நயத்தோடு புனையப்பட்டுள்ளது. குறிஞ்சிக் கலியில் கபிலர்,

> கதிர்விரி கனை சுடர்க் கவின் கொண்ட நனஞ்சாரல்
>
> எதிரெதிர் ஓங்கிய மால் வரை அடுக்கத்து
>
> அதிர் இசை அருவி தன் அம் சினைமிசை வீழ
>
> முதிர் இணர் ஊழ் கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை
>
> வரிநுதல் எழிவேழம் பூ நீமேல் சொரிதர
>
> புரிநெகிழ் தாமரை மலர் அம்கண் வீறு எய்தி
>
> திரு நயத்து இருந்தன்ன தேம் கமழ் விறல் வெற்ப [33]

என்றுரைக்கிறார்.

தலைவனின் நாடு எதிரெதிரான மலைகளையும் மலைச் சாரல்களையும் உடையது. காலையில் தோன்றிய கதிரவன் தன் கதிர்களை மலைச்சாரலில் பரப்பிக் கொண்டிருக்கிறான். அவ்வொலி பட்ட மலைகள் மாணிக்கப்பாறைகள் போல் அழகுடன் திகழ்கின்றன. மலை உச்சியிலிருந்து

இழிந்து வரும் அருவி அதிர்கின்ற ஓசை இசையாகி மகிழ்விக்கின்றது. அந்த அருவி ஓடி வரும் மலைச்சாரல்களில் முழவு போன்ற அடிமரத்தோடு கூடிய வேங்கை மரங்கள் உள்ளன. அதன் கிளைகள் பூத்துக் குலுங்குகின்றன. அதிர்ந்தோடி வரும் அருவி நீர் அக்கிளைகளைத் தாக்குகின்றன. கிளைகளில் முற்றிய பூங்கொத்துகள் கீழே வீழ்கின்றன. வேங்கைப் பூக்கள் நெருப்பைப் போன்ற ஒளியோடு காணப்படுகின்றன. அப்பக்கம் வரும் புள்ளிகளையுடைய அழகான யானைகள் மலரோடு கூடிய நீரை தம் துதிக்கைகளால் முகந்து பக்கத்திலே மலரும் நிலையில் விளங்கும் தாமரைப் பூக்களில் சொரிகின்றன. தாமரை மலர்கள் வீறுடன் மலர்ச்சி கொண்டு திருமகள் விரும்பி வீற்றிருப்பது போலக் காட்சி தருகின்றன. அத்தகைய சிறப்புடைய நாட்டில் தேன்மணம் கமழ்கின்றது என்று இயற்கையின் அத்தனை அழகையும் மலையும் அந்த மலையில் பட்டொளிக்கின்ற கதிரவனின் கரங்களும் அந்த மலையில் ஓடிவரும் அருவி, இலைகள், பூங்கொத்துகள் என ஒரு அழகு மிகுந்த காட்சிகளாக விவரித்துக் காட்டுகின்றார்.

மேலும் மேலும் மலைகள் பற்றிய காட்சிகள் அழகிய கற்பனையோடு படமாக்கப்பட்டுள்ளது. அந்த மலையில் காந்தள் மலர்கள் பூத்துக் குலுங்கி பொய்கையுள் நீர்மேல் தெரியும் காட்சி பாம்பு நீர் அருந்துவதைப் போன்று இருப்பதாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது.

விடியல் வெங்கதிர் காயும் வேய் அமல் அகல் அறை

கடிசுனை கவினிய காந்தள் அம் குலையினை

அருமணி அவிர் உத்தி அரவு நீர் உணல் செத்து

பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கனல் பெயல்

உருமுக் கண்ணுறுதலின் உயர் குரல் ஒலி ஓடி

நறுவீய நனஞ்சாரல் சிலம்பலின் கதுமென

சிறுகுடி துயில் எழூஉம் சேண் உயர் விறல் வெற்ப[34]

தலைவனின் மலைநாடு அகன்ற மலைப்பாறைகளைக் கொண்டது. அங்கே வளர்ந்த மூங்கில் மரங்கள் காலையிலேயே வெம்மையைப் பரப்பும் கதிரவன்

வெம்மையை மறைத்து நிழலைத் தருகின்றன. அந்த நிழலிலே ஓடும் சுனையின் நீர் குளிர்ந்துள்ளது. குளிர்ந்த நீரில் அழகுமிக்க காந்தள் மலர்கள் கொத்து கொத்தாகப் பூத்துக் குலுங்குகின்றன. காந்தள் மலர்கள் நீரின்மேல் தெரிவது அரிய மாணிக்கக் கற்களை ஒளிவிடும் வரிகளை உடைய பாம்புகள் நீர் அருந்துவன போலத் தோன்றுகின்றது. பாம்பைக் கண்டால் மேகம் இடி இடிக்கும் என்பர். அதற்கேற்ப மேகங்கள் இடிகளை முழங்கின. பெருமலைகளையும் புரட்டக் கூடிய அளவுக்கு காற்று வீசியது. கடுமழையும் பொழிந்தது. அந்த இடியொலி நறுமண மலர்கள் நிறைந்த அகன்ற மலைச்சாரல்களைத் தாக்கவும் அச்சாரலில் எதிரொலி எழும்பியது. அந்த எதிரொலி ஓசையைக் கேட்ட சிறுகுடி மக்கள் திடீரென தூக்கத்தினின்றும் எழுகின்றனர். இத்தகைய நீண்டுயர்ந்த மலைகளையும் வெற்றியையும் உடையவன் மலைநாடன்.

**மலையும் விலங்கினங்களும்**

தலைவியைத் தலைவன் விரைந்து மணக்க வேண்டி தோழி பலவகையாலும் முயற்சிக்கிறாள். அது முடியாமல் போகவே தலைவியின் காதல் வீட்டிற்குத் தெரிந்துவிடுகிறது. அதனால் தலைவி வீட்டைவிட்டு வெளியில் வரமுடியாத அளவுக்கு தாளிடப்படுகிறாள். இதனைத் தலைவனிடத்தில் தோழி, நல்ல மலைநாட்டிற்கு உரியவனே உன்னைக் காதலித்த குற்றத்திற்காகவாவது தலைவி வீட்டை விட்டு வரமுடியாமல் தவிக்கிறாள். உன்னைப் பார்க்கமுடியாமல் தவிக்கும் அவள் ஏக்கத்தின் காரணமாக இளைத்து, அவளின் கைவளையல்கள் கழண்டு கீழே விழுகின்றன. அவ்வாறு ஒளியை உடைய வளையல்கள் கீழே கழன்று விழும் ஓசை உன் மலைச்சாரல்களில் மலர்ந்துள்ள காந்தள் மலர்கள் முற்றியபின் கீழே விழும்போது ஏற்படும் ஓசையை தலைவிக்கு நினைவுபடுத்துகின்றன என்று கூறுகிறாள். இளவேனில் காலத்தில் உன் சோலையில் ஒளியிழந்து காணப்படும் தளிர்களைப் போல தலைவியின் நிறம் ஒளியற்று விளங்குகிறது என இயற்கையில் பூக்கள் விழுவதையும் சோலை தளர்வுற்று விளங்குவதையும் உவமையாகக் காட்டுவது தலைவியின் நிலையைக் கற்பனைத் திறத்தோடு வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது. மேலும்,

ஆம் இழி அணிமலை அலர்வேங்கைத் தகைபோல

தேமுசு நனை கவுள் திசைகாவல் கொளற்கு ஒத்த

வாய் நில்லா வலி முன்பின் வண்டு ஊது புகர்முகப்

படுமழை அடுக்கத்த மாவிசும்பு ஓங்கிய

கடிமரத் துருத்திய கமழ் கடாம் திகழ்தரும்

பெருங்களிற் றினத்தோடு வீங்கு எருத்து எறுழ் முன்பின்

இரும்புலி மயக்குற்ற இகல்மலை நல் நாட![35]

யானைகளின் முகத்தில் உள்ள புள்ளிகளை மலர்கள் என்று கருத வண்டுகள் தேன் குடிக்கப்பாயும் நாட்டிற்கு உரியவனே என்று மலை, யானை, வண்டுகள் என அனைத்தும் வருணனையோடு விளக்கப்பட்டுள்ளன.

தலைவனைக் கண்ட தோழி அவனுடைய நாட்டின் பெருமைகளையெல்லாம் போற்றிப் புகழ்ந்தாள். மலையின் உச்சியிலிருந்து நீர் அருவியாக இரங்கி வரும் அழகைக் கொண்டது தலைவனின் மலைநாடு. அருவிநீர் ஓடும் மலைப் பகுதியில் வேங்கை மலர்கள் மலர்ந்துள்ளன. அவற்றைச் சுற்றித் தேனுண்ண வண்டுகள் மொய்த்துக் கொண்டுள்ளன. இந்தச் சிறப்பான காட்சியைப் போல அம்மலையில் உள்ள யானைகளின் மதநீர் நனைந்த கன்னங்களை வண்டுகள் மொய்த்துக் கொண்டுள்ளன. அந்த யானைகள் உலகின் எட்டுத்திக்கும் காவல் காக்கும் வலிமை கொண்டவை. அவற்றின் வலிமை கண்டு மற்ற விலங்குகள் எதிர்நில்லாது அஞ்சி ஓடும். அந்த யானைகளின் முகங்களில் உள்ள புள்ளிகளை மலர்கள் என எண்ணிய வண்டுகள் அந்த முகங்களையும் மொய்த்துக் கொண்டிருக்கும். கடுமையான மழைபொழியும் மலைச்சாரலில் வெள்ளம் பெருகி ஓடும் அருவிகளில் ஆற்றிடைக் குறை போன்று விளங்கும் திட்டுகள் பல உண்டு. அவற்றில் வானளாவ வளர்ந்து உயர்ந்துள்ள மரங்கள் செறிந்து காடுகளாக விளங்கும். அங்கே மணம் கமழும் மதநீர் ஒழுகுகின்ற ஆண் யானைகள் தம் பெண் யானைகளோடு வாழ்கின்றன. பெருத்த கழுத்துகளையும் மிக்க வலிமையையும் கொண்டுள்ள பெரும் புலிகளும் அங்கே வாழ்கின்றன. யானைகளும் புலிகளும்

தம்முள் மாறுபட்டு கொண்டு போரிட்டுக் கொண்டிருக்கும். இத்தகைய நல்ல மலைகளுக்குரியவனாகிய தலைவன் என்று அவனைத் தோழி பாராட்டுகின்றாள்.

மேலும் தலைவியின் அழகைப் புகழ்ந்துரைக்கும் தோழி தலைவனின் மலையோடும் அங்கே பூத்துக் குலுங்கும் மலர்கள் சிறுகுன்றுகள் அனைத்தையும் அழகு பொதிந்த காட்சிகளோடு பொருத்திப் பார்க்கப்பட்டுள்ளது. குறிஞ்சிக் கலியில் பெரும்பான்மையான பாடல்கள் மலையையும் மலைபோன்ற யானைகளும் பெருமளவில் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளன. இரவு நேரங்களில் தலைவியைக் காணவரும்போது வானத்தில் தோன்றும் மின்னலும் இடியும் மழையும் தலைவனுக்கு ஊறு விளைவிக்குமோ என்ற அச்சம் நயத்தோடு கற்பனை செய்யப்படுகிறது. இருட்டைப் போன்று கருத்த கூந்தல் எனத் தலைவியின் கூந்தல் வருணிக்கப்பட்டுள்ளது.

மேலும் குறிஞ்சிப் பாடல்களில் யானையும் புலியும் போர்செய்வது யானை மறத்தைப் புலியாகக் கற்பிதம் செய்து போர்செய்து அதனை வேரோடு பிடுங்கி எறிந்துவிட்டு பின்பு நாணுவது போன்ற காட்சிகள் அழகுற உவமையோடு வருணிக்கப்பட்டுள்ளது.

கொடுவரித் தாக்கி வென்ற வருத்தமொடு

நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை

நனவில் தான் செய்தது மனத்தது ஆகலின்

கனவில் கண்டு கதுமென வெரீஇ

புதுவதாக மலர்ந்த வேங்கையை

அது என உணர்ந்து அதன் அணி நலம் முருக்கி

பேணா முன்பின் தன் சினம் தணிந்து அம்மரம்

காணும் பொழுதின் நோக்கல் செல்லாது

நாணி இறைஞ்சும் நல்மலை நல்நாட[36]

நல்ல நாடு என்று தலைவனின் நாடு புகழ்ந்துரைக்கப்பட்டுள்ளது. “இந்தப் பாடலில் புலியை வென்று துயிலும் யானை அலரை நீக்கித் துயில்கொள்ளும் தலைவிக்கும் கனவில் கனவில் வந்த யானை கனவிலும் அலரை எண்ணி அஞ்சியெழும் தலைவிக்கும் வேங்கைமரம் களவொழுக்கம் கொள்ள தலைவனுக்கு உதவி செய்த தோழிக்கும் வேங்கை அழிபெற்றது. தலைவியால் தூற்றப்பெற்ற தோழிக்கும் சினந்தமை தவறாகத் தோழிக்கு கொடுமை செய்துவிட்டதாகத் தலைவி கருதியமைக்கும், யானை வேங்கையைக் காண நாணுவது, தலைவி தோழியைக் காண நாணுவதற்கும் உள்ளுறை உவமமாக வந்துள்ளன என இரா. மணியன் எடுத்துரைக்கின்றார்.

அப்பொழுது தோழி தலைவனின் மலைநாட்டுச் சிறப்பினை எடுத்துரைக்கின்றாள். அவனது மலைச்சாரலில் ஒரு யானை நின்றது. அப்பொழுது வளைந்த வரிகளையுடைய புலி ஒன்று யானையைத் தாக்கியது. இரண்டும் போரிட்டன. மிகுந்த முயற்சியினால் யானை புலியை வென்றது. பின்பு போர் செய்த களைப்பினால் அந்த நெடிய மலைப்பகுதியிலேயே தூங்கிவிட்டது. அப்பொழுது யானை ஒரு கனவு கண்டது. அக்கனவில் மீண்டும் புலி தன்னைத் தாக்கவருவதாகத் தோன்றியது. திடுமெனக் கண் விழித்து அஞ்சி தன் எதிரே காணப்பட்ட பூத்த வேங்கை மரத்தை புலி என்று எண்ணி அதனோடு போரிட்டு அம்மரத்தைச் சிதைத்து தன் அடங்காத தோன்றிய வெகுளியைத் தணித்துக் கொண்டது. அதன்பின் தான் சிதைத்தது புலியன்று. வேங்கை மரமே என்பதை நனவில் கண்டதும் அம்மரத்தைக் காணும்பொழுதெல்லாம் தன் பார்வையை மரத்தில் செலுத்தாது நாணித் தலைகுனியும். அத்தகைய நல்ல மலைச் சாரல்களைக் கொண்டது தலைவனின் நல்ல நாடு.

**தலைவனின் புகழ்ச்சி**

குறிஞ்சித் திணைப் பாடல்களில் தலைவன் தலைவியைப் புகழ்ந்துரைக்கும் போக்கு நிறைந்துள்ளது. சோலை வழியில் தனியாகச் செல்லும் தலைவியை வழிமறித்த தலைவன்,

> வளைந்து வியக்கத்தக்கதாய் உன் நெற்றி உள்ளது. இதற்கு உவமையாக பிறைச்சந்திரனைக் கூறலாமென்றால் அது தேய்ந்தும் வளர்ந்தும் வருவதால் அதைக் கூறமுடியாது. களங்கமில்லாத உன் முகத்துக்குக்

*களங்கமுடைய முழுமதியையும் உவமை கூற இயலாது. உன் தோளை மூங்கிலாகச் சொன்னால் உன்னை மூங்கிலைத் தோற்றுவிக்கும் மலையாகவன்றோ கொள்ள வேண்டியிருக்கும். உன் கண்கள் மலர் போன்றவை என்று கூறலாமென்றால் நீ சுனையாக இல்லையே! நீ மென்மையான சாயல் கொண்டவள் ஆயினும் உன்னை மயில் என்று கூறமுடியாதே![37]*

*என்று பலவாறாகப் புகழ்ந்துரைக்கின்றார். தலைவன் தலைவியை இவ்வாறாகப் புகழ்ந்துரைப்பது கற்பனை வளமிக்கதாக வருணனை நிறைந்ததாக உள்ளது. அதே வேளையில் தலைவி தன் சொல்லைக் கேட்பதற்காகத் தோழியிடம் கூறுவதும் கற்பனை வளம் செறிந்ததாக உள்ளது.*

*மின்னொளிர் அவிர் அறல் இடை போழும் பெயலேபோல்*

*பொன் அகை தகை வகிர் வகை நெறி வயங்கிட்டு*

*போழ் இடை இட்ட கமழ் நாறும் பூங்கோதை*

*இன்னகை இலங்கு எயிற்று தேமொழி துவர்செவ்வாய்*

*நன்னுதால் நினக்கு ஒன்று கூறுவாம் கேள் இனி[38]*

*என்று கூறுகின்றார்.*

*தலைவி தோழியை நோக்கி நல்ல நெற்றியை உடைய என் தோழியே! நின் கூந்தல் கருமேகங்கள் போல் உள்ளது. அதனைச் சுருள், குரல், அளகம், துஞ்சுகுழல், கொண்டை என்னும் ஐந்து வகைப்படுத்திக் கொண்டிருக்கிறாய். அத்துடன் மணங்கமழும் புதுமாலையையும் புனைந்துள்ளாய். இனிய புன்னகை உன் முகத்திலே மிளிர்கிறது. உன் பற்கள் வெண்மையாகவும் வரிசையாகவும் அழகுறத் திகழ்கிறது. உன் சொற்களோ தேன் போன்று இனியவை. உன் வாய் பவளம் போன்ற செம்மை கொண்டது. இத்தகைய எழில் நலங்கொண்ட நீ என் சொற்களை இனி கேட்பாயாக!*

**மருதக்கலியில் கற்பனை**

*நீர்வளமும் பசுமையும் நிறைந்த மருதத்திணையும் இயற்கையெழில் சூழ்ந்த இடமாகும்.*

*“தாமரைப் பொய்கைகளும் தண்ணறுங் கழனிகளும் சங்கப் புலவர்களின் மருத நிலப் புனைந்துரையில் இடம்பெற்றுள்ளன. நீர்நாய், யானை, சிரல், வராஅல், வாளை முதலியனவும் புலவர்தம் கற்பனையில் இடம்பெற்றுள்ளன. தாமரை, ஆம்பல் ஆகிய மலர்களைப் பற்றியும்...”* [39]

*விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தாப்*

*புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி*

*வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுட்*

*டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார*

*வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு*

*கனிவிரைந் தளித்தலி னகுபவன் முகம்போலப்*

*பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்*

*தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர்* [40]

*காலை நேரம் கதிரவன் தன் ஒளிக்கற்றைகளைப் பரப்பத் தொடங்கினான். கீழ் வானத்தில் உலா வருகின்றான். தடாகங்களிலே இருந்த தாமரை மொட்டுகள் மலரத் தொடங்கின. ஒரு வண்டு ஒவ்வொரு மலருக்கும் சென்று தேனுண்டு களிக்கின்றது. தாமரை இதழ்களுக்கு இடையே நின்ற ஒரு தாமரை மொட்டு இன்னும் மலரத் தொடங்காதிருந்தபோது கதிரவன் வானின் மேல் எழுந்தான். அவன் ஒளிபட்டு பனித்துளி நீங்கி அந்த மொட்டு மலரத் தொடங்கியது.*

*அந்த மகிழ்ச்சி எப்படிப்பட்டது என்பதை ஓர் உவமை மூலம் காமக்கிழத்தி விளக்குகின்றாள். ஒரு பெண் காதலனைப் பிரிந்து கண்ணீர் மல்க வருந்திக் கொண்டிருந்தபோது பிரிந்து சென்ற காதலன் திரும்ப வந்து தன்னைப் பொறுத்தருளுமாறு அப்பெண்ணை வேண்டியபோது அவன் முகம் சற்று மலர்ச்சியுற்றது. அத்தகைய மலர்ச்சி போன்று கதிரவனின் ஒளிபட்டு தாமரை மலர் ஒன்று மலர்ந்து நிற்கும் தன்மை கொண்ட ஊரைச் சார்ந்தவன் தலைவன் என்று காமக்கிழத்தி கூறினாள்.*

மேலும் மருதத்திணைப் பாடல்களில் பொய்கைகளில் பூத்துக்குலுங்கும் காட்சி பெண்களின் உடலோடு பொருத்திப் பார்க்கப்பட்டுள்ளது. அதனை,

இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பட் பிறிதியாதுந்

துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்

திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கினைபவ

ளரிமதர் மழைக்கண்ணீ ரலர்முலைமேற் றெறிப்பபோற்[41] (ம.கலி, 12)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. மருதத்திணைப் பாடல்கள் முழுவதிலும் இத்தகைய வருணனைகளைக் காண முடிகிறது. இத்திணைப் பாக்களில் பாலியல் சார்ந்த சிக்கல்களும் தலைவன் தலைவி உறவு நிலைகளும் கற்பனை நயத்தோடு நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. மருதநிலத்தில் வாழும் மகளிரது ஆடல்பாடல்களைப் புலவர்கள் அழகியல் உணர்வோடு கற்பனை செய்து பாடியுள்ளனர். மகளிர் அணியும் அணிகலன்கள் வருணனை செய்யப்பட்டுள்ளன. பெண்களும் குழந்தைகளும் புகழ்ந்துரைக்கப்பட்டுள்ளனர். தாய் தன் குழந்தையை வருணிக்கும்போது,

தலைவனின் ஊரில் உள்ள பொய்கையில் இரண்டு தாமரைகள் மலராமல் மொட்டுகளாகக் காட்சி தருகின்றன. அந்த இரண்டு மொட்டுகளும் எல்லா வகையிலும் ஒத்து விளங்குகின்றன. அவற்றின் நடுவில் இன்னொரு மொட்டு மலர்ந்து விளங்கியது. அதன்மீது பறவைகள் வந்து தாக்கிய போது, அம்மலர் சற்று சாய்ந்தது. அம்மலருள் தங்கியிருந்த நீர் அந்த இரு மொட்டுகளின் மேல் விழுந்து காணப்படும் காட்சியைத் தலைவி ஓர் உவமை மூலம் அறிவுறுத்துகிறாள். ஒரு பெண் தன் கணவன் பிரிந்து சென்றதை எண்ணி அழும்போது அவளது கண்ணீர் அவளுடைய இரண்டு முலைகளின் மேல் விழுவது போல அந்தத் தாமரை மொட்டுகளின் மேல் மலர்ந்த பூவின் நீர் விழுவதாக உவமை உள்ளது.

ஒரு பாலால் பலகைமேல் பொருத்தப்பட்ட பொம்மை யானையை இழுத்துக்கொண்டு நீ விளையாடுகிற காட்சி இரண்டு யானைகள் தம்முன் மோதுவன போல் உள்ளது. நீ காலில் சதங்கை அணிந்திருக்கிறாய் அது தவளை போல் ஒலிக்கிறது என வருணிக்கிறார். மேலும் ஒரு தாய் தன் குழந்தையை,

*சூடின இருங்கடன் முத்தமும் பன்மணி பிறவுமாங்*

*கொருங்குடன் கோத்த உருளமை முக்காழ்மேற்*

*சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூலாக*

*வரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்*

*சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலை*[42]

*என்று பாடுகிறார். நீ சூடியிருக்கும் மாலை கருங்கடலில் கிடைக்கும் முத்துகள் பதிக்கப் பெற்றுள்ளது. பலவகை மணிகளையும் கொண்டுள்ளது. மூன்று வடமாக இணைக்கப்பட்டுள்ளது. கருநீல மலரும் தலைகுனியுமாறு அழகுற விளங்குகின்ற கருநீல மணிகள் கோர்க்கப்பட்டுள்ளது. இதனைக்கண்டவர் வியப்பர்.*

*நாண் குறிப்பிட்ட அணிகலன்களை விடவும் அழகாகத் தோன்றுபவன் நீ. உன் பாதங்களில் உள்ள விரல்கள் மிகவும் மென்மையானவை. அவற்றுடன் நீ சிறுதேர் உருட்டி நீண்ட நேரம் விளையாடினால் அவை நொந்துபோகும். எனவே நீ தேர் உருட்டுவதை விடுத்து மெல்ல என்னிடம் வந்து சேர்.*

***தலைவனின் மனம்***

*மருதக்கலிப் பாடலில் தலைவன் மீது வீசும் மனத்தினை வைத்தே அவன் பரத்தையர் இல்லம் சென்று வந்த போக்கு காமக்கிழத்தியராலும் தலைவியாலும் கண்டுபிடிக்கப்படுகிறது. ஆனாலும் தலைவன் அதற்கு மறுப்புரைப்பது புலவரால் நல்ல கற்பனை வளத்தோடு பதிவுசெய்யப்படுகிறது. தலையனை போன்ற மென்மை பொருந்திய தோளினைக் கொண்டவளே என்று தலைவன் பாராட்டியுரைத்து மறுமொழி கூறுகிறான். ஆனாலும் அதனை ஏற்க மறுக்கும் காமக்கிழத்தி நீ கூறுவதைப் பொய் என்பதை உன் உடலில் சினங்கொண்ட பரத்தையர் தம் தொடியிலிட்ட வருக்கம் காட்டும் என்றும் உன்னுடைய சிதைந்த மாலையும் கலைந்த சந்தனமும் உன் நிலையை எடுத்துக்காட்டும் என்று கூறுகிறாள். மேலும் அவள்,*

*அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்*

*புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த*

*தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்*

*பொருமுரண் சீறச் சிதைந்து நெருநையி*

*னின்றுநன் றென்னை யணி*[43]

*என்று கூறி தன்னிடம் வந்து நின்ற தலைவனை நோக்கிய காமக் கிழத்தி நேற்று நீ என்னைவிட்டுப் பிரிந்த நிலையிலே இருந்த உன் தோற்றத்தைவிட இப்பொழுது என் முன் நிற்கும்பொழுது காணப்படும் தோற்றம் மிக நன்றாகவே உள்ளது. நீரில் மலர்ந்த அழகிய நீலப்பூவுடன் நறவம்பூ, அனிச்சம்பூ, முறுக்கவிழ்ந்த முல்லைப்பூ ஆகியவற்றால் புனையப்பட்ட நறுமணங்கொண்ட மாலையையும் கண்ணியையும் நீ அணிந்திருந்தாய். உன் பரத்தையரின் சினத்துக்கு ஆளாகி அவை சிதைந்து காணப்படும். உன் அலங்காரம் நேற்றைவிட இன்று அழகாகவே உள்ளது. அது என்னுடைய பார்வைக்கு நல்ல அழகாகவே படுகிறது என்று கூறி தலைவனிடம் ஊடல் கொண்டாள்.*

**தலைவனின் சிலேடை**

*தலைவன் பரத்தையர் இல்லம் செல்வதும் இன்பம் துய்ப்பதும் அதனால் தலைவன் தலைவியரிடையே ஊடல் நிகழ்வதும் இயல்பாக உள்ளது. தலைவி தலைவனிடத்தில் அழகிய மாண்பையுடையவளே, உன் தோற்றம் நீ எங்கே சென்று வந்துள்ளாய் என்பதைக் காட்டிக் கொடுத்துவிடுகின்றது. உன் ஆடை மார்புகள் விரிந்து கரை நைந்து போயுள்ளது. உன் தோளில் கிடக்கும் மாலை நிறம் மாறிக்காணப்படுகிறது. ஆனாலும் உன்னைக் கேட்கும்போது குதிரையேற்றம் சென்று வந்ததாகக் கூறுகின்றாய். நீ பயணித்த குதிரை எத்தகையது என்பதை நான் அறிவேன்.*

*பால்பிரியா வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவன்*

*மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை*

*நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்*

*ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை*

*மத்திகை கண்ணுறை யாகக் கவின்பெற்ற*

*வுத்தி யொருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி*

*நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்*

*தார்மணி பூண்ட தமனிய மேகலை*

*நூபுரப் புட்டி லடியோ டமைத்தியாத்த*

*வார்பொலங்க் கிண்கிணி யார்ப்ப வியற்றிநீ*

*காதலித் தூர்ந்த நின் காமக் குதிரையை*

*யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து*

*ளாதிக் கொளீஇய வசையினை யாகுவை*

*வாதுவன் வாழிய நீ*[44]

*நிற்கின்றாள் என்றாள். தலைவி தலைவனை நோக்கி நீ ஏறிய குதிரை எத்தகையது என்பதை என்னால் உணர முடிகின்றது. அந்தக் குதிரைக்குக் கூந்தல் உள்ளது. அந்தக் கூந்தலும் ஐவகையாக வகிர்ந்து அழகுபடுத்தப்பட்டுள்ளது. அந்தக் கூந்தல் கத்தரித்து விடப்பட்டுள்ளது. கூந்தலின் உச்சியிலிருந்து தாழ்ந்துவரும் மயிர்முடிப்பாகிய சிகழிகை என்னும் தலைமாலையைக் கொண்டது. நீல மணிகளைத் தோலில் வைத்துத் தைத்துக் கட்டப்பட்ட கழுத்து வடமாகிய வல்லிகையை அணிந்தது. கீழாகத் தொங்கும் புல்லிகை அணி என்று கூறப்படுகின்ற சாமரையாகிய காதணியைக் கொண்டுள்ளது. ஒரு வடமாகத் தொங்கும் சுட்டியணியையும் கண்ணுக்கு அச்சம் தரக்கூடிய சம்மட்டி அணியையும் நூலால் ஆக்கப்பட்ட குசை என்னும் கடிவாளத்தையும் மணிகளாலாகிய கட்டுவடமாகிய கண்டிகையையும் பொன்னாலான மேகலை சதங்கைகளையும் அணிந்துள்ளது. இத்தகைய அணிகள் கொண்ட குதிரையின்மீது தானே ஏறிப் பழகினாய்! அதுவும் நிலா முற்றத்திலே நேரே ஓட்டம் கொள்ளும் நிலையிலே சவாரி செய்து இந்தக் கோலத்தோடு என்முன் நிற்கின்றாய் என்றான்.*

## முல்லைப் பாடல்களில் கற்பனை

முல்லைத்திணைப் பாடல்கள் பெரும்பான்மையும் ஆயர்குல மக்களின் வாழ்வியல் மற்றும் கால்நடைகள் அவை மேய்க்கச் செல்லும் புராதான புல்வெளிகள் என அனைத்தின் அழகியலும் கற்பனை நயத்தோடு பதிவுசெய்யப்பட்டுள்ளன. காட்டையும் காடு சார்ந்த இடங்களையும் வாழ்வியல் களங்களாகக் கொண்ட ஆயர்குல மக்களின் வீரம், உறுதி, ஆற்றல், மாண்பு ஆகியவற்றை நல்லுருத்திரன் சிறப்பாகப் பாடியுள்ளார். ஆயர்குலத்தின் வீரர்கள் பல்வேறு வகைப்பட்ட மலர்களால் தொகுக்கப்பெற்ற மலர் மாலைகளை அணிந்துள்ளனர். அம்மலர்களில் பிடவம்பூ, செங்காந்தள் பூ, காயாம்பூ ஆகியன காணப்படுகின்றன. அந்தப் பிடவம் மழைக்காலத்தில் அரும்புகளை ஈன்று முல்லை நிலமெங்கும் அழகு செழிக்கச் செய்கின்றது. செங்காந்தள் மலரானது தீக்கடைக்கோலால் கடைந்து உண்டாக்கப்பட்ட நெருப்பைப் போல ஒளிவிட்டுக் கொண்டிருக்கிறது. அந்தப் பூவின் அரும்பானது வளைந்த துடுப்பைப் போன்று உள்ளது. அந்தப் பூ காற்றில் அசைவது கள்ளுண்டு மகிழ்ந்தவன் அசைந்தாடுவது போன்று இருக்கின்றது. இத்தகைய அழகிலும் கற்பனை நலம் மிகுந்ததாக முல்லைத்திணைப் பாடல்கள் அமைந்துள்ளன.

> முல்லைக்குரிய செம்மண் நிலம் புலவர்களால் அழகுற கற்பனை செய்யப்பட்டுள்ளது. முல்லை மலர்கள் நிறைந்துள்ள செந்நிறப் பெருநிலம் செக்கர் வானத்தின் அழகைப் பெற்றிருந்ததாகக் கற்பனை செய்யப்பெற்றுள்ளது”[45]

மேலும் முல்லைநிலத்தின் அழகினைப் பாடும்போது மோர் கடையும் சத்தமும் அதில் காதில் கேட்கும் தூரமும் கற்பனையோடு வெளிப்படுகின்றன. விரைவாக வீட்டிற்குச் செல்லவேண்டும் என்று கேட்கும் தலைவியிடம் தலைவன்,

> வெண்ணெய்த் தெழிகேட்கு மண்மையாற் சேய்த்தன்றி
>
> யண்ணணித் துராயி னன்பகற் போழ்தாயிற்
>
> கண்ணோக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை

*மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன*

*வெயிலோ டெவன்விரைந்து சேறி யுதுக்காண்*

*பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்*

*றடிகண் புரையுங் குறுஞ்சுனை யாடிப்*

*பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்*

*தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்*

*பனிப்படச் செல்வாய் நும் மூர்க்கு*[46]

*நீ உன் இல்லத்துக்குச் சென்றுவிட்டாய் என்று கூறுகின்றான். அவன் நீ விரும்பியதையெல்லாம் செய்ய என் நெஞ்சம் காத்துக் கிடக்கின்றது. உன் ஊர்மிக அண்மையில்தான் உள்ளது. நீ மோர் கடைந்தபின் அந்த மோரை உன் கையால் அலைக்கும்போது எழும்பும் ஓசையாகிய தெழி இந்த இடத்தில் கேட்குமே! அவ்வளவு அண்மையில் உள்ள ஊர்க்கு இப்பொழுதே போகவேண்டுமா என்ன? இது உச்சிப் பொழுதாக உள்ளது. பொழுது சாய்ந்தபின் இந்த இடத்தைவிட்டு புறப்பட்டாலே போதுமே. உன் அழகைக் கண்ட கண் வேறு ஒன்றையும் பார்க்க விரும்பாது. அத்தனை அழகுடன் கூடிய பெண்மை உன்னிடத்தில் உள்ளது. மயில் கழுத்தின் நிறம் கொண்ட மாயோள் நீ. உச்சி வெயிலில் செல்லக் கூடாது. அதோர் பார் காயாம்பூவைக் கொண்ட சோலையை. பக்கத்திலே பாறை உள்ளதல்லவா! அப்பாறை பெண்யானை உறங்குவது போலல்லவா இருக்கிறது. அந்தப் பாறையினூடே காணும் சுனையைப் பார். அது பனை நுங்கின் கண்ணிலிருந்து வரும் இளநீரைப் போன்றுள்ளதே! அந்தக் குளர்ச்சியால் ஆடிய பின்னர் செம்முல்லை, வெண்முல்லை பூக்களைச் சூடிக்கொண்டு என்னுடன் தங்கிச் செல்லலாமே! பொழுது சாய்வதற்குள் நீ உன் இல்லத்துக்குச் சென்றுவிடலாம்.*

## நெய்தல் நிலக் கற்பனை

*சங்கப் பாடல்களில் நெய்தல் நிலப் பாடல்களில் கற்பனை என்பது பெரும்பான்மையும் பிரிவால் வருந்துகிற தலைவியின் துயரமாகவே உள்ளது. கடற்பரப்பில் எழுகின்ற திரையினை ஏற்று அருகில் அருகில் வளர்ந்திருக்கின்ற*

தாழை போன்றவை நயத்துடன் பதிவுசெய்யப்பட்டுள்ளன. கடற்கரைக் காட்சிகள் பலவும் சங்கப் புலவர்களால் மிகச் சிறந்த முறையில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. கடல்சார்ந்த நிலத்திலுள்ள சுழிகளைப் பற்றிய கற்பனைக் காட்சிகளையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. நெய்தல் நிலத்தில் பூத்துக் குலுங்குகிற நெய்தல் மலர்கள் மகனின் கண்கள் போன்று விளங்குவதாகப் பாடப்பட்டுள்ளன. நெய்தல் நிலத்தின் அத்தனை அழகினையும் மீறி தலைவியின் பிரிவாற்றாமை இயற்கையின் சூழல்களுக்கேற்ப தற்குறிப்பேற்றம் செய்யப்பட்டுள்ளன. இவ்வாறே தலைவனால் பிரிந்து வாழும் தலைவி நெஞ்சம் உணர்ந்தவளாகிப் புலம்பித் தவிப்பதாக இப்பாடல் புனையப்பட்டுள்ளது.

மாலை நீ தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்

பையென்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்

செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்

பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்

மாலைநீ தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்ப

பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்

தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை

முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்[47]

மாலை நேரம் வந்தால் மாடுமேய்க்கும் கோவலர்கள் குழல் ஊதி இசையொலி எழுப்புவர். அந்த இசை கேட்டுத் தலைவி வருந்தும் நெஞ்சம் உடையவளாகிறாள். அப்படி வருந்துகின்றவளின் வருத்தத்தைப் போக்க முற்படாமல், இந்த மாலை அதிக வருத்தத்தை உண்டாக்குகிறதே என்று தலைவி நெஞ்சம் கலங்குகிறாள். அதே வேளையில் யாழில் செவ்வழிப் பண் இனிமை தருவது போன்ற இனியமொழி பேசித் தம் கணவருடன் கூடி மகிழும் மங்கையரின் எழில் நலத்தை இந்த மாலை அதிகமாக்குகின்றதே என்றும் மாலையிடம் கோபம் கொள்கிறாள் தலைவி.

மாலை நேரம் வந்தவுடன் மரக்கிளைகளில் பறவைகள் வந்து தங்கித் தத்தம் இனத்துடன் கூடி மகிழ்வதைப் பார்த்த தலைவி, தன் தலைவன் தன்னுடன் கூடி மகிழ வரவில்லையே என்று நெஞ்சம் கலங்குகிறாள். தன் நெஞ்சு கலங்குவதைப் பார்த்து மாலை நேரம் மகிழ்வதாகவும் கணவருடன் கூடி மகிழும் மங்கையரைக் கண்டு மகிழ்வதாகவும் தலைவி கூறி மாலை நேரத்தின் முரண்பட்ட நிலையை வெளிப்படுத்துகிறாள். மகிழும் மங்கையரின் புன்முறுவல் எப்படியுள்ளது என்பதைத் தலைவி ஒரு உவமை மூலம் விளக்குகிறாள். தழைத்துள்ள கொடிகளில் நல்ல மணமுள்ள முல்லை மொட்டுகள் மலர்ந்து விரிவது போல கூடி மகிழும் மங்கையரின் புன்னகை விளங்குவதாகத் தலைவி கூறுகின்றாள்.

**தலைவியின் ஏமாற்றம்**

தலைவன் வருவதாகக் கூறிச்சென்ற மாலைநேரம் வந்துவிட்டது. அவன் வராதது கண்டு வருத்தமுற்ற தலைவி தோழியிடம் தன் சூழலை விளக்குகிறாள். அந்த விளக்கம் ஒரு நாள் முடிவதையும் மாலைப்பொழுதில் ஏற்படும் தலைவியின் துயரத்தையும் அழகிய நிலையில் படம்பிடிப்பதாக உள்ளது. இந்நிலையை,

> தலைவன் வரவில்லையே எனத் தலைவி அவனை யெண்ணுங்கால் நெஞ்சமும் அவனோடு அவன்பால் செல்கிறதாம். அவன் வரும் வழி ஏதம் தருவதாகும். அவன் உயிருக்குத் தீமை ஏதும் வந்து விடக்கூடாதே என்று அவள் கவலுங்கால் அவன் நெஞ்சமும் அவளோடு வந்து கலந்து கவல்கிறதாம்![48]

என்று முத்துச்சாமி கண்ணப்பன் தெரிவிக்கின்றார். ஆனால் இந்தத் தலைவி கதிரவன் மறைவதும் இருள் சூழ்வதும் இரவு வருவதும் இன்னல் தருவதும் என மாலைப் பொழுதின் மயக்கத்தினை தோழியோடு பகிர்ந்துகொள்கிறாள்.

> அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகத்
>
> பகனுங்கி யதுபோலப் படுசுடர் கல்சேர
>
> விகன்மிகு நேமியா னிறம்போல விருளிவர

*நிலவுக்காண் பதுபோல வணிமதி யேர்தரக்*

*கண்பாயல் பெற்றபோற் கணைக்கால மலர்கூம்பத்*

*தம்புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச*

*முறுவல் கொள் பவைபோல முகையவிழ்பு புதனந்தச்*

*சிறுவெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் திம்மெனப்*

*பறவைதம் பார்ப்புள்ளக் கறவைதம் பதிவயிற்*[49]

*இசையொலி போல இருந்தது எனத் தெரிவிக்கிறாள். அந்த இருளைப் புறமுதுகிட்டு ஓடுமாறு செய்து தன் நிலவொளியைச் சந்திரன் உலகில் பரப்புகிறான். சந்திரனைக் கண்ட தாமரை மலர்கள் கூம்பின. அவ்வாறு கூம்பிய மலர்கள் மகிழ்வோடு உறங்கும் மங்கையர்களின் கண்கள் போலக் காட்சி தந்தன.*

*கதிரவனின் வெப்பம் குறைந்து நிலாவின் குளிர்ச்சி எழுந்ததும் மரங்கள் அசைவற்றுத் துயில் கொள்ளத் தொடங்கியது போலத் தலைசாய்ந்து நின்றன. அவ்வாறு நின்ற காட்சி தம் புகழைப் பிறர் சொல்லக் கேட்ட சான்றோர் தலைகுனிந்து காணப்படுவது போன்று திகழ்ந்தது.*

*மரங்களுக்குப் பக்கமாக வளர்ந்திருந்த சிறுசிறு புதர்களின் மொட்டுகள் மலரத் தொடங்கின. அக்காட்சி கணவனை எண்ணி துன்புறும் மகளிரை இகழ்ந்து முறுவலிப்பது போன்றிருந்தது.அம்மலர்களில் தேனுண்ண வந்த வண்டுகள் ஒலி எழுப்பி ஆரவாரித்தன. அந்த ஒலி மூங்கிலாலான குழலில் எழுப்பப்படும் இனிய இசையொலி போல இருந்தது.*

*மேலும் தலைவி இந்த மாலை நேரம் ஒரு மரத்தினை எப்படி பொலிவிழக்கச் செய்கிறது என்று கூறுவதன்மூலம் தலைவன் இல்லாத இந்த இரவு நேரம் எனக்கும் அப்படிப் பொலிவிழக்கச் செய்யும் காலமாக மாறிவிட்டதே என்றும் பாடுகின்றாள்.*

*யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்*

*கரப்பவ நெஞ்சம்போற் மரமெல்லா மிலைகூம்பத்*

தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதி யெயிறாக

நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்

கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை[50]

மாலையே! நீ தோன்றியவுடன் இயற்கையாக தோன்றிய மரங்கள் கூட பொலிவிழந்து காணப்படுகின்றன. அக்காட்சி எப்படியுள்ளது என்று தெரிந்துகொள்வாயாக! ஒருவன் வறுமையால் வாடினான் அப்படி வாடினும் யாரிடமும் இரந்து தன் வறுமையை நீக்கிக் கொள்ளக்கூடாது என்று எண்ணினான். ஆனால் வறுமையின் கொடுமை எல்லை கடந்தபோது தன்னியல்பழிந்து பிறரிடம் இரந்து வாழ முற்பட்டான். அப்பொழுது அவனது நெஞ்சம் எத்துணையளவுக்கு அழிந்து பொலிவற்றுக் காணப்படுமோ அந்தளவுக்கு இந்த மரங்கள் உன்னைக் கண்டு பொலிவழிந்து போயின.

**நெய்தற்காட்சி**

தலைவி களவொழுக்கத்தில் ஈடுபடுகிறாள். இதையறிந்த ஊர்மக்கள் அலர் தூற்றுகின்றனர். அதன் காரணமாகத் தலைவன் தலைவியைச் சந்திப்பதை நிறுத்திக் கொள்கிறான். தலைவன் ஊரார் அலர் தூற்றுவதை யெண்ணி விரைவாக மணமுடிப்பாள் என்று நினைத்த சூழலில் தன்னைச் சந்திப்பதை நிறுத்திக் கொண்ட தலைவனை எண்ணித் தலைவி வருந்துகிறாள். தலைவியின் வருத்தத்தை உணர்ந்த தோழி தலைவனுக்கு இந்தச் சூழலை விளக்க அவன் இல்லம் செல்கிறான். இந்தச் சூழல் உள்ளுறை உவமமாக கற்பனை நயம் பொருந்திக் காணப்படுகிறது.

வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்

காரிருட் டுணையாகி யசைவளி யலைக்குமே

கமழ்தண்டா துதிர்ந்துக வூழுற்ற கோடல்வீ

யிதழ் சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு

இன்றுணை நீநீப்ப விரவினுட் டுணையாகித்

தன்றுணைப் பிரிந்தயாஅந் தனிக்குரு குசவுமே

யொண்சுடர் ஞாயிற்று விளக்கத்தா னொளிசாம்பு

நண்பகன் மதியம்போ னலஞ்சாய்ந்த வணியாட்கு[51]

என்பதும் புலனாகின்றது. கதிரவன் மலையில் சென்று மறைந்ததாகக் கூறியது தலைவன் தன் தலைவியைச் சந்திக்காமல் தனது இல்லத்திற்குச் சென்று தங்கிவிடுவதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அப்படி மறைந்திருப்பது களவொழுக்கம் மற்றவருக்குப் புலப்படாது போய்விட்டது என்பதைக் குறிக்கும். சந்திரன் தோன்றி நிலாவொளியைப் பரப்பியது தலைவி தலைவனைச் சந்திக்காதவாறு காவல் மிகுந்தது என்று கொள்ளலாம். கடலின் ஆரவாரம் குறைந்ததும் துயில்வது போல உள்ளதும் அலர் தூற்றும் ஊரார் தூற்றாது அடங்கினர் என்பதை உணர்த்துவதாகக் கொள்ளலாம். இப்படி கொள்வதை உள்ளுறை உவமமாகக் கூறுவர் உரைகாரர்கள். இது பாடிய புலவனின் பெருமையை உணர்த்தும் என்பதும் புலனாகின்றது.

நெய்தற் திணைப் பாடல்களில் புன்னை மரங்களும் அந்தக் கிளைகளில் பூத்துக் குலுங்கும் மலர்களும் அந்த மலர்களில் தேனுண்ண வரும் வண்டுகளும் ஏராளமாக இடம்பெற்று அந்தச் சூழலுக்கு வளம் சேர்க்கின்றன. அதனை,

கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறுஞ்

சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி யிழைபூத

வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ

டரும்பொருண் மரபின்பால் யாழ்கேளாக் கிடந்தான்போற்[52]

என்ற பாடல்மூலம் அறியமுடிகின்றது. இதனைப் போன்றே,

> கடற்கரையில் ஞாழல் மரங்கள் மிகுந்திருந்தன. அவற்றையடுத்து கழிகளிலே நெய்தல் பூக்கள் பூத்துக் கிடந்தன. ஊதைக்காற்று ஓங்கி வீசியது. அரும்புகள் முதிர்ந்த ஞாழல் மரத்தின் கொட்டைகளைப் போன்ற திரண்ட மலர்கள் உதிர்ந்து நெய்தலினது கரிய மலர்களில் வீழ்ந்து நிரம்பிவிட்டன. ஊதைக் காற்று ஞாழல் மலரை நெய்தலில் பெய்தது போலத் தோன்றியது"[53]

கடற்கரையில் ஞாழல் மரங்களும் நிறைந்திருப்பதைக் காணமுடிகிறது.

அந்தக் கானலில் கரிய நிறக் கொம்புகளைக் கொண்ட புன்னை மரங்கள் உள்ளன. அந்த மரங்களில் சிறிய கிளைகளில் மலர்கள் காணப்படுகின்றன. அந்த மலர்கள் மலர்கின்ற நேரம் பார்த்து ஆரவார ஒலியுடனே கூடிய வண்டுகள் தேனுண்டு மகிழ்கின்றன. அந்த வண்டுகளின் ஒலி யாழிசை போன்று இருந்தது. அந்த இசைக்கேட்டுக் கடல் உறங்குவதாகவும் அந்தக் காட்சி இசைக்கேட்டுத் துயிலும் திருமாலைப் போன்றிருந்ததாகவும் தலைவி கூறுகிறாள்.

நெய்தல் திணைப் பாடல்களில் மாலைக்காலம் அதிக அளவில் வருணிக்கப்பட்டிருக்கின்றன.

பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்

தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்

செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை

முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ[54]

என்பதன் மூலம் மாலைப்பொழுது எங்ஙகம் உரைக்கப்பட்டுள்ளது என்பதை உணரமுடிகிறது. அந்த மாலைக் காலத்தை வருணிக்கும்பொழுது பகலெல்லாம் ஒளியைத் தந்து உலகை மகிழ்வித்த கதிரவன், மலைப்பக்கம் சாய்வதையும் மாலைக்கால ஞாயிற்றின் ஒளியில், அம்மலை பொன்போன்ற நிறங்கொண்டு அழகுற காட்சி தருவதையும் அந்த நேரத்தில் வானமே சிவந்து நிற்பதாகவும் அப்பொழுது சந்திரன் தோன்றி மக்களை மகிழ்விப்பதாகவும் தம் ஆரவாரத்தைக் கைவிட்டு அடங்கி ஒடுங்கி நாரைகள் நிற்பதாகவும் கூறி அத்தகைய கடற்கரைக்கு உரிய நெய்தல் நிலத் தலைவன் என்று தோழி உரைக்கின்றாள்.

**தலைவியின் குமுறல்**

நெய்தல் திணைப் பாடல்கள் முழுவதும் தலைவியின் மனக்குமுறலை கற்பனை வளத்துடன் அறியமுடிகிறது. தலைவனைப் பிரிந்து தவிக்கும் தலைவி தன் உள்ளம் படும் பாட்டினை இந்தப் பாடல் மூலம் விவரிக்கிறாள்.

இம்மாலை

ஐய ரவிரழ லெடுப்ப வரோவென்

*கையறு நெஞ்சங் கனன்றுதீ மடுக்கும்*

*இம்மாலை*

*இருங்கழி மாமலர் கூம்ப வரோவென்*

*னரும்படர் நெஞ்சமழிவொடு கூம்பும்*

*இம்மாலை*

*கோவலர் தீங்குழ லினைய வரோவென்*

*பூவெழி லுண்கண் புலம்புகொண் டினையும்*[55]

*மாலைக்காலம் எவ்வாறெல்லாம் துன்புறுத்துகிறது என்பதைக் கூறிய தலைவி அந்த நேரத்தில் எத்தனை துன்பத்தினைத் தான் அடைந்ததாகத் தெரிவிக்கின்றாள்.*

*இந்த மாலை நேரத்தில் அய்யர்களான துறவியர்கள் தீயை உண்டாக்கி அதில் ஆவுதி சொரிந்து இறைவனை வழிபடுவர். அந்தத் தீயினைப் போன்று என் நெஞ்சம் கொதிக்கின்றது. என் காமத்தீ கொழுந்துவிட்டு எரிகின்றது.*

*இந்த மாலை நேரத்தில் கடற்கரை கழிகளில் பெரும் மலர்கள் குழுமி நிற்கும். என் நெஞ்சத்திலும் அம்மலர்கள் போன்ற துன்பமலர்கள் படிந்து வருத்தத்தை உண்டாக்கும்.*

*இந்த மாலை நேரத்தில் மாடுமேய்க்கும் ஆயர்கள் தம் குழலை ஊதி என் வருத்தத்தை அதிகமாக்கிப் பூப்போன்ற என் கண்கள் புலம்புமாறு செய்கின்றனர் என்று வருணிக்கின்றார்.*

*மேலும் தலைவியின் இன்னலை அறிந்த தோழி தலைவனை நல்லவன் என்று பாராட்டுகின்றவர்களைப் பழிக்கின்றாள்.*

*மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்*

*கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்*

*சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த*

*நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்*

*பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்*[56]

*எனவே தோழி தலைவனிடத்தில் என் தலைவியில் துன்பங்களைத் துடைப்பாயாக! அவள் வருத்தத்தைப் போக்க விரைந்து அவளைத் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்று வேண்டுகோள் வைத்து தலைவனின் மனதை மாற்ற முயற்சிக்கின்றாள்.*

*கடற்கரைச் சோலையில் கரிய மலர்கள் உள்ள கழிமுள்ளியும், தில்லைமரங்களும் செறிந்து கடற்கரையை அழகுபடுத்தும் மணல் மேடுகளில் காணப்பட்டன. ஆல மர நிழலில் சீர் மிகுந்த சிவபெருமான் எனக் கருதப்பெறும் தட்சிணாமூர்த்தி கொண்டு வந்து வைத்திருந்த புண்ணிய கலசம் போன்ற பழங்கள் தாழை மரத்து மடல்களில் தொங்கிக் கொண்டிருந்தன. தாழை மடலில் கடல்நாரை ஒன்று அமர்ந்திருந்த காட்சி தாழை மலர் பூத்தது போலிருந்தது. இத்தகைய கடற்றுறைக்கு உரியவன் தலைவன் என்பதைத் தோழி குறிப்பிட்டாள்.*

> *இவ்வாறு கூறியதில் ஓர் உள்ளுறை உவமம் உள்ளதாகக் கொள்ளலாம். கழிமுள்ளியும் தில்லை மரங்களும் சூழ்ந்த சோலையை அலர் தூற்றும் மகளிர் வாழும் இடமாகவும் மடல்மேல் அமர்ந்துள்ள நாரையைத் தலைவனாகவும் கொள்ளவேண்டும். பிற உயிர்களைக் கவரும் நாரை எவ்வண்ணம் அவற்றைத் துன்புறுத்துகின்றன என்பதை அறியாதவர்கள் நாரையைப் போற்றிப் புகழ்வர். அதுபோலத் தலைவன் தலைவியைத் துன்புறுத்துவதை அறியாதோரே தலைவனை நன்மகன் எனக் கூறுவர்.*[57]

*என்பதனை இரா. மணியன் கூற்றுமூலம் அறியமுடிகிறது.*

***மடல் ஏறுதல்***

*தலைவன் தன் காதல் நிறைவேறாதது கண்டு மடல் ஏறித் தன் காதலை அடைய முயற்சிக்கிறான். காதலில் தடை ஏற்படுவது அதனை முயற்சித்து முறியடித்து வெற்றி காண்பது தலைவனின் இயல்பாகும். இந்தக் காதல் காதல் நிறைவேறாது போகவே தலைவன் துயத்தின் உச்சத்திற்குச் செல்கிறான். என்*

மனதிற்கு மகிழ்ச்சியளித்து மின்னலைப் போன்று மறைந்து சென்றவளே! நான் என்று விடேன்.

சுடர்விடும் ஆபரணங்களை அணிந்தவளும் என்னால் காதலிக்கப்பெற்றவளும் இத்திரைச் சீலையில் ஓவியம்போல் தீட்டப்பெற்றவளுமான என் காதலி இப்போது எனக்குத் துன்பத்தைப் பரிசாக அளித்து மறைந்து போயிருக்கிறாள். உப்பளத்துப் பாத்தியில் உப்புக் குவியல் மழைத்துளிகளை வரைந்துபோவது போல என் உயிர் அவள் நினைவில் கரைந்து கொண்டிருக்கிறது. மூங்கிலைப் போல தோளைப் பெற்ற என் காதலி எனக்களித்தது பூவை மலரும் பொன்னிற ஆவிரை மலர்களுமேயாகும் என்று வருந்துகிறாள். மேலும் தலைவன் மடலேறி காதலை நிறைவேற்றுவதே என உரைத்தது கற்பனை வளம் செறிந்ததாக உள்ளது.

எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்

றொழின்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்

கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு

வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்

மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி

யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்

தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொலோ

மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை

யணிப்பூளை யாவரை யெருக்கொடு பிணித்தியாத்து[58]

என்று கூறிப் பாடத் தொடங்கினாள். எழில் வாய்ந்த கொம்பையுடைய அழகிய யானை மதம் கொண்டதால் பாகனுக்கும் அங்குசத்துக்கும் கட்டுப்படாமல் போனதுபோல என் அறிவும் அறிவால் ஏற்படும் அடக்கமும் நாணமும் என்னைவிட்டு நீங்கின; அதனால் பிறர் என்னை எள்ளி நகையாடினர். இதன் காரணம் மின்னலைப் போலும் கனவைப் போலும் தோன்றி என் நெஞ்சைக் கவர்ந்து சென்ற என் காதலிதான்.

நான் விரும்பிய அவளை அடைவதற்கு ஒரு வழியை மேற்கொண்டேன். மணி போன்ற நிறம் கொண்ட மயில்தோகையையும் பூளை, எருக்கம், ஆவிரம் ஆகிய பூக்களையும் நூலில் மாலையாகத் தொடுத்து அதனை மடல் மாவின் மீது கட்டினேன். அதனை ஊர்மன்றில் நிறுத்தி ஊராரோ இந்தக் குதிரையைப் பாருங்கள், என் குறையைக் கேளுங்கள். யாருக்காக நான் இந்த நிலைக்கு ஆளானேன் என்பதை உணருங்கள் என்று கூறிப் பாடத் தொடங்கினேன்.

நெய்தல் திணைப்பாக்கள் தலைவன் கடல் பயணம் மேற்கொள்வதும் அவன் வருகையை நோக்கித் தலைவி காத்திருத்தலுமாக பல பாடல்கள் இடம்பெற்றிருந்தாலும் சில பாடல்கள் காதலை ஏற்க மறுத்த காதலியிடம் தலைவன் மடல் ஏறி தன் காதலை உணர்த்துதலுமாக இடம்பெற்றுள்ளன.

தேன் போன்ற இனிய மொழியைப் பேசும் அந்தப் பெண் என்னைக் காமக்கடலில் தத்தளிக்க விட்டுவிட்டுத் தன் காமம் கொள்ளாமற் போய்விட்டாள். இரவாக இருந்தாலும் பகலாக இருந்தாலும் நான் தூக்கம் வராமல் தவிப்பதால் என் காதலை நிறைவேற்ற நான் மடலேறும் சூழல் ஏற்பட்டது என்று தலைவன் விவரிக்கிறான். மேலும் தலைவன்,

காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ

னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு

மாணிழை மாதரா ளேஎரெனக் காமன

தாணையால் வந்த படை[59]

இந்த மடல்மா என்று கூறுகின்றான். சிறந்த மாட்சிமை கொண்ட அணிகலன்களை அணிந்துவந்த அவளின் அழகை அழகென்று கூறுவதைவிட காமமானது கையிலிருந்து ஏவப்பட்ட மலரம்பு என்றே கூறவேண்டும். அந்தக் காமனின் அம்பு என் ஆண்மை என்னும் மதிற்சுவரை இடித்து புறப்பகுதியை மட்டுமின்றி உட்பகுதியையும் அழித்துவிட்டது. காமன் என்னும் கடிய பகையின் காரணமாக நான் துன்புற்றதனால் எனக்கு ஏற்பட்ட நிலைமைதான் இது. என் காமத்தைப் போக்க அவள் எனக்குத் துணையாகத் தந்ததே இம்மடல்மா ஆகும்.

***தலைவியின் ஏக்கம்***

*காதல் கூடாமல் தவிக்கும் தலைவனைப் போன்றே தலைவியும் தவிக்கும் போக்கு காணப்படுகின்றன. தன் கணவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள் தலைவி. அவன் வராமல் போகவே கதிரவனிடத்தில் நீ மாலை நேரத்தில் மலைப்பகுதியில் மறையும்போது உன் ஒளி கொண்டு தேடி என் தலைவனை என் கையில் உன் கைகளால் ஒப்படைத்துவிடு. அப்படி நீ செய்தால் என் உயிர் திரியாகவும், என் உடல் அகலாகவும் நினைத்து எரிகின்ற என் காமத்தீ குறைந்து நான் உயிர் வாழ ஏதுவாக இருக்கும் என்று கூறுகிறாள். இரவு நேரம் வந்ததும் கனவிலே தலைவனைக் காணலாம் என்று எண்ணாது புலவரின் கற்பனைத் திறனுக்குச் சான்றாக அமைகின்றது.*

*கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று*

*நாடுவென் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே*

*யாடையான் மூஉ யகப்படுப்பேன் சூடிய*

*காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று*

*மாண்மலர்க் கொன்றை யவன்*[60]

*தலைவி கூடலிழைத்தபோது கோடு கூடாத நிலையில் அது பிறைச் சந்திரனைப் போன்றிருந்தது. வானத்துச் சந்திரன் தன் இல்லத்து வந்துவிட்டதோ என்று எண்ணித் தலைவி தன் ஆடையால் மூடினாள். மூடியதும் அவளுக்கு ஓர் எண்ணம் உதித்தது. நீல நிறக் கழுத்தை உடையவனும் கொன்றை மலரைச் சிறப்புற அணிந்தவனுமாகிய சிவபெருமான், தன் தலையிலே இருக்கும் பிறைச்சந்திரனைக் காணாமல் திரிவானோ என்று எண்ணினாள். பின்னர் சிவபெருமான் தன்னை வருத்துவானோ என்று எண்ணினாள். பின் அவன் வருந்தாவிடினும் அவனுக்கு இப்பிறைச்சந்திரனை அளித்து உபகாரியாக இருக்கலாம் என்று எண்ணினாள். பின்னர் ஒரு தெளிவுக்கு வந்து அவர் வந்தால் நான் எனக்கு இழைத்த கொடுமை கூறி அவருக்கு உடன்படாது அவரை இகழ்வேனோ! என்று எண்ணிக் கொண்டிருந்தபோது ஊர்காவல் மிகுந்த இராக்காலம் தோன்ற அவள் சற்று உறங்க அவள் தலைவன் அவளது கனவிலே தோன்ற அவனைத் தழுவிக் கொண்டதாக எண்ணி விழிக்க அவனைக் காணாது*

கண்டது கனாவே என எண்ணி வருந்தினாள். பகலில் காணலாம் என்று எண்ணியிருந்தாள்.

> வினைக்கொண்டேன் காமநோய் நீக்கிய வூரீ
>
> ரெனைத்தானு மெள்ளினு மெள்ளலன் கேள்வ
>
> னினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று மனைத்தற்கே
>
> யேமரா தேமரா வாறு
>
> கனையிருள் வானஞ் கடன்முகந் தென்மே
>
> லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
>
> நிறைவளை கொட்பித்தான் செய்த துவரா
>
> லிறையிறை பொத்திற்றுத் தீ[61]

இங்ஙனம் கூறிய தலைவி வானத்தில் ஓடும் மேகங்களைக்கண்டு ஏ மேகங்களே! என்னுடைய காம நோயை உண்டாக்கி என் வளையல்கள் என் தோளிலிருந்து கழலுமாறு என்னை மெலியச் செய்து என் உடலின் மூளை முடுக்குகளிலெல்லாம் காமத்தீயை மூட்டிய என் தலைவன் என்னிடம் வரும்வரை என் உயிர் போகாதவாறு எனக்குள் உண்டாகியுள்ள வெப்பத்தைத் தணிக்கவேண்டியுள்ளது உங்கள் கடமை என்று எண்ணுங்கள். எண்ணிக் கடலுக்குச் சென்று நீரை முகந்துவந்து என்மேல் தெளியுங்கள் என்று வேண்டினாள்.

**தொகுப்புரை**

கற்பனை என்னும் சொல்லுக்கு அதிகராதிகள் பலவும் பல்வேறு விளக்கங்களை வழங்கியுள்ளன. இச்சொல் முதன்முதலில் திருமூலரின் திருமந்திரத்தில்தான் இடம்பெற்றுள்ளது என்பதை அறியமுடிகின்றது. பின்னர் திருவாசகத்திலும் திருத்தொண்டர் புராணத்திலும் இச்சொல் இடம்பெற்றுள்ளது. ஆக இச்சொல் சமய இலக்கியங்களில் வெகுவாக ஆட்சிபெற்று வந்துள்ளதை அறியமுடிகின்றது.

சங்க இலக்கியத்தில் கற்பனை என்னும் சொல் இடம்பெறவில்லை. ஆனால் கற்பனையைக் குறிக்கக்கூடிய புனைவு என்னும் சொல் ஆட்சிபெற்றுள்ளது என்பதை அறியமுடிகின்றது. கட்டுரை என்னும் சொல் புனைந்துரை என்னும் பொருளில் சங்க இலக்கியத்தில் கலித்தொகையில் வழங்கி வந்துள்ளதை அறியமுடிகிறது.

பாலைத்திணைப் பாடல்கள் அனைத்திலும் கற்பனை நலம் மிளிர்வதைக் காணமுடிகிறது. தலைவியைப் பிரிய நேரும் தலைவனுக்குப் பல நிலைகளில் தலைவியின் துயரினை எடுத்துரைத்து பாலை நிலங்களில் இடம்பெறும் புல், பூண்டு, வறண்ட நிலம், தாவரம் விலங்கின் நிலை என அனைத்தையும் காரணம் காட்டி நீ பிரிவதனால் தலைவியின் நிலை அதனைப் போன்று அழிந்துபோகும் எனத் தலைவனுக்கு அறிவுறுத்தப்படுகின்றது. இப்பாடல்கள் பெருங்கடுங்கோவின் கற்பனைத் திறனில் மிளிர்வதைக் காணமுடிகிறது.

குறிஞ்சிக் கலியில் கபிலர் கற்பனை வளத்தோடு பல பாடல்களைப் புனைந்துள்ளார். தலைவன் தலைவியின் காதல், இயற்கை எழில் சூழ்ந்த காட்சி, மலையும் நிலமும் என அந்த நிலத்தின் அழகைத் தன் கற்பனை மூலம் இனிய முறையில் படம் பிடித்துள்ளார். இரவு நேரத்தில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் பல இன்னல்களுக்கிடையில் மலைகளைக் கடந்து வருகின்றான். தலைவன் நாடு மலைகள் நிறைந்தது. தலைவன் தன் சொல்லைக் கூர்ந்து கவனிக்கவேண்டும் என்ற காரணத்தால் அவனின் நாட்டுவளம் உரைக்கப்படுகின்றது. இந்தப் பாடல்களில் மலையும் அங்கு உலவும் யானைக் கூட்டங்களும் அதன் செய்கைகளும் கற்பனை நயத்துடன் விளக்கப்பட்டுள்ளன.

மருதக்கலியில் தாமரைப் பொய்கைகளும் கழனிகளும் சங்கப் புலவர்களின் மருத நிலப் புனைந்துரையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. நீர்நாய், யானை, சிரல், வராஅல், வாளை முதலியனவும் புலவர்தம் கற்பனையில் இடம்பெற்றுள்ளன. இயற்கை எழிலோடு கூடிய சூழலை ஆசிரியர் இப்பாடல்களில் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

முல்லைத்திணைப் பாடல்கள் பெரும்பான்மையும் ஆயர்குல மக்களின் வாழ்வியல் மற்றும் கால்நடைகள் அவை மேய்க்கச் செல்லும் புராதான புல்வெளிகள் என அனைத்தின் அழகியலும் கற்பனை நயத்தோடு

*பதிவுசெய்யப்பட்டுள்ளன. காட்டையும் காடு சார்ந்த இடங்களையும் வாழ்வியல் களங்களாகக் கொண்ட ஆயர்குல மக்களின் வீரம், உறுதி, ஆற்றல், மாண்பு ஆகியவற்றை நல்லுருத்திரன் சிறப்பாகப் பாடியுள்ளார்.*

*சங்கப் பாடல்களில் நெய்தல் நிலப் பாடல்களில் கற்பனை என்பது பெரும்பான்மையும் பிரிவால் வருந்துகிற தலைவியின் துயரமாகவே உள்ளது. கடற்பரப்பில் எழுகின்ற திரையினை ஏற்று அருகில் அருகில் வளர்ந்திருக்கின்ற தாழை போன்றவை நயத்துடன் பதிவுசெய்யப்பட்டுள்ளன. கடற்கரைக் காட்சிகள் பலவும் சங்கப் புலவர்களால் மிகச் சிறந்த முறையில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. கடல்சார்ந்த நிலத்திலுள்ள சுழிகளைப் பற்றிய கற்பனைக் காட்சிகளையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.*

**சான்றெண் விளக்கம்**

1. க.த. திருநாவுக்கரசு, திருக்குறளில் கற்பனைத்திறனும் நாடக நலனும், ப. 12
2. மேலது, ப. 12
3. மேலது, ப. 15
4. மேலது, ப. 23
5. மேலது, ப. 23
6. மேலது, ப. 27
7. மேலது, ப. 31
8. மேலது, ப. 32
9. மேலது, ப. 46
10. மேலது, ப. 50
11. மேலது, ப. 54
12. கலித்தொகை, பா. 2:12-17
13. மேலது, பா. பா.கலி,4
14. மேலது, பா.கலி, பா. 6:5-8
15. மேலது, பா.கலி, பா. 7:1-3
16. மேலது, பா.கலி, பா. 10:6-9
17. மேலது, பா. கலி, பா. 11:6-10
18. மேலது, பா. கலி, பா. 12: 10-13
19. மேலது, பா.கலி, பா.14:10-17
20. மேலது, பா.கலி, பா, 15:13-16
21. மேலது, பா.கலி, பா.16:10-16
22. மேலது, பா.கலி, பா. 17:9-12
23. மேலது, பா.கலி, பா. 19:15-23
24. மேலது, பா.கலி, பா.24:9-12
25. மேலது, பா.கலி, பா. 26:9-16
26. மேலது, பா.கலி, பா. 27:12-20
27. மேலது, கு.கலி, பா. 2:9-13

28. மேலது, கு.கலி, பா. 3:7-10

29. மேலது, கு.கலி, பா. 4:8-14

30. மேலது, கு.கலி, பா. 5

31. மேலது, கு.கலி, பா.7

32. இரா. மாயாண்டி, ப. 149

33. மேலது, கு.கலி, பா. 8:1-7

34. மேலது, கு.கலி, பா. 9

35. மேலது, கு.கலி, பா.12:1-7

36. மேலது, கு.கலி, பா.13:1-9

37. இரா. மணியன், ப. 221

38. கலித்தொகை, கு.கலி, பா. 19

39. மாயாண்டி, ப. 153

40. கலித்தொகை, ம.கலி, பா. 6

41. மேலது, ம.கலி, பா. 12

42. மேலது, ம.கலி, பா. 20

43. மேலது, ம.கலி, பா. 26

44. மேலது, ம.கலி, பா. 31

45. மாயாண்டி, ப. 150

46. கலித்தொகை, மு.கலி, பா. 8: 35-45

47. மேலது, நெ.கலி, பா.1

48. முத்துச்சாமி கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 269

49. கலித்தொகை, நெ.கலி, பா.1

50. மேலது, நெ.கலி, பா. 3

51. மேலது, நெ.கலி, பா. 4

52. மேலது, நெ.கலி, பா. 6

53. முத்துச்சாமி கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 61

54. கலித்தொகை, நெ.கலி, பா. 9

55. கலித்தொகை, நெ.கலி, பா. 13

56. கலித்தொகை, நெ.கலி, பா. 16

57. இரா. மணியன், கலித்தொகை, ப. 50

58. கலித்தொகை, நெ.கலி, பா.21

59. மேலது, நெ.கலி, பா. 22

60. மேலது, நெ.கலி, பா.25

61. மேலது, நெ.கலி, பா.28

# முடிவுரை

தமிழர்களின் பண்பாட்டுக் கருவூலமாகத் திகழ்கிற சங்க இலக்கியம் அகம், புறம் என்னும் இரு பெரும் பிரிவுகளைக் கொண்டது. அக்காலப் புலவர்கள் புறவாழ்வைவிட அகவாழ்வையே மிகுதியாகப் பேசியுள்ளனர். வாழ்வில் பின்பற்ற வேண்டிய அறங்களையும் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், சடங்குகள் முதலானவற்றையும் அவர்கள் பாடல்களின் வழியாக எடுத்துரைத்துள்ளனர். இது அக்காலச் சூழலைப் புரிந்துகொள்வதற்கு பெரிதும் பயன்பாடு உடையதாக விளங்குகின்றது.

பழந்தமிழ் இலக்கியங்கள் பல திறத்தன. அவற்றுள் 'கற்றோர் ஏத்தும் கலி' எனப் புகழ்ந்துரைக்கப்பட்ட கலித்தொகை பண்டைத் தமிழர்களின் அறநெறி சார்ந்த காதல், கற்பு சார்ந்த வாழ்வைச் சிறப்புற படம்பிடிக்கும் வாழ்வியல் பெட்டகமாக விளங்குகின்றது. ஐந்திணைக்குரிய ஒழுக்கமும் பண்பும் ஒருங்கே பெற்ற கலைக்கருவூலமாகத் திகழ்கிறது. அகனைந்திணை என்று கூறப்படும் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் திணை வகைகளில் பாடல்கள் புனையப்பெற்றுள்ளன.

**சங்க இலக்கியம் – கலித்தொகை காட்டும் ஐந்திணை வாழ்வியல்** என்னும் தலைப்பில் நிகழ்த்தப்பட்ட இவ்வாய்வின் முடிவுகள் ஆய்வுலகின் அறிவுப் பார்வைக்கு முன்வைக்கப்படுகின்றன.

கலித்தொகைப் பாடல்கள் யாவும் நாடகப்பாங்கில் எழுதப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலும் ஓரங்க நாடகம் போன்றே விளங்குகின்றன. கலித்தொகைப் பாடல்கள் மற்ற அகத்திணை நூல்களிலிருந்து சற்றே வேறுபட்டு காணப்படுகின்றது. பாடல்கள் சிலவற்றில் அந்நிய பண்பாடும் பழக்கவழக்கங்களும் மேலோங்கியிருப்பதைக் காணமுடிகிறது.

இந்தக் கலித்தொகைப் பாடல்கள் பண்டைய தமிழர்களின் அகவாழ்வினை விளக்கியிருக்கும் பாங்கு இயல்கள் தோறும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**நூலமைப்பும் முதல் கரு உரிப்பொருள்களும்** என்னும் முதல் இயலில் கலித்தொகை நூலமைப்பு குறித்தும் அதன் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற முறைவைப்பும் அந்த முறைவைப்பு குறித்த ஆய்வாளர்களின் கருத்தும் தெளிவுற எடுத்துரைக்கப்பட்டுள்ளன. உரிப்பொருளை விளக்கவே சங்கப்புலவர்கள் முதல், கருப்பொருள்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்றும் அகப்பாடல்களில் கருப்பொருளும் உரிப்பொருளும் மட்டுமே சிறந்து விளங்குகின்றன என்பதும் ஆராய்ந்து உரைக்கப்பட்டுள்ளன.

மனித வாழ்வு சிறப்புற விளக்கம் பெற்று விளங்குவதற்கு இயற்கை எந்த அளவிற்குத் துணையாக இருக்கிறது என்பதை முதற்பொருளாக விளங்கும் நிலமும் பொழுதும் தெளிவாக்கும் பாங்கு ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

குறிஞ்சி நிலக் கடவுளாக முருகனையும் மருத நிலக் கடவுளாக இந்திரனையும் சுட்டுவர். ஆனால் கலித்தொகையில் வெளிப்படையான பதிவுகள் குறிப்புகளே காணப்படுகின்றன.

**காதல் வாழ்வு** என்னும் இரண்டாம் இயலில் கலித்தொகைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள தலைவனும் தலைவியும் தம்முள் காதல் கொண்டு மணம் புரிந்து இல்வாழ்வை அமைத்துக்கொண்ட முதிர்ச்சியும் அந்தக் காதல் வாழ்வில் வெளிப்படும் பண்டைத் தமிழ் மக்களது உயர்ந்த இலட்சியங்களும் நன்றாகப் புலப்படுத்தப்பட்டுள்ளது. கலித்தொகையில் அன்பொத்த காதல் மட்டுமல்லாமல் கைக்கிளை என்னும் ஒருதலைக்காதலும் பெருந்திணை என்னும் பொருந்தாக்காமமும் குறித்த பாடல்களும் உள்ளன. இது மற்ற அகத்திணை நூல்களிலிருந்து கலித்தொகை வேறுபட்டு இத்தகைய பாடல்களுக்கு இடமளித்துள்ளது என்று விளக்கப்பட்டுள்ளது.

கலித்தொகையில் ஐந்திணைகளில் பாலைத்திணைப் பாடல்கள் பெரும்பான்மையும் செலவு அழுங்குவித்தல் துறையில் மட்டுமே அமைந்துள்ளன என்பதை ஆய்வின்வழி அறியமுடிகிறது. காதல் ஒழுக்கத்தைப் பற்றி ஊர் மகளிர் வாய்க்குள் பேசிக்கொள்வது அம்பல் என்றும் வெளிப்படையாகப் பேசுவது அலர் என்றும் பண்டைத் தமிழ்மக்கள்

கூறியுள்ளனர். இத்தகைய அலர் தூற்றுதல் நன்மையில் முடிவதாகவே அமைந்துள்ள போக்கு ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.

அன்றைய குறும்புக்காதலை வெளிப்படுத்தும் வகையில் **சுடர்த்தொடீஇ கேளாய்** என்னும் பாடல் அமைந்துள்ளது. இந்தப் பாடல் இன்றைய சிறுகதை போல நாடகப்பாங்கில் அமைக்கப் பெற்றிருப்பதை உணரமுடிகிறது. இதுபோல் மேலும் பல பாடல்கள் இத்தகைய வடிவில் அமைந்துள்ளன.

கூனி, குறளன் இருவரும் இடையே நிகழும் பொருந்தா உரையாடல் வேறு எந்த அக நூல்களிலும் இடம்பெறாமல் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகின்றது. இத்தகைய பாடல்கள் நகைச்சுவை உணர்வினைத் தோற்றுவிப்பதாக இருக்கிறது என்னும் கருத்தும் இந்த இயலின்வழிச் சுட்டப்படுகின்றது.

**சமுதாய வாழ்வு** என்னும் மூன்றாம் இயலில் ஐந்திணை மக்களின் பண்பட்ட வாழ்வும் பண்பாட்டுக் கூறுகளும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. மலைசார்ந்த குறிஞ்சி நிலப்பகுதியில் பெரிய ஊர்களோ குடியிருப்புகளோ உருவாக்கிக் கொள்ள முடியாத நிலையில் சிறிய குடியிருப்புகளை உருவாக்கி வாழ்ந்த பாங்கும் நெய்தல் மக்கள் மணல் வெளிகளில் சிறு குடிகளை அமைத்துக்கொண்ட முயற்சியும் முல்லை நில மக்கள் ஆநிரைகளை மேய்த்து வாழ்ந்த வாழ்க்கையும் மருத நிலத்தில் தமிழர்கள் வாழ்ந்த வளமான வாழ்வும் சுட்டப்பட்டுள்ளது.

ஒரு நாகரிகச் சமுதாயத்திற்குத் தேவையான அடிப்படையான கைத்தொழில்கள் அனைத்தும் பழங்காலத்தில் இருந்துள்ளதை ஆய்வின்வழி அறியமுடிகின்றது. பண்டைத் தமிழ்ச் சமூகம் தொடக்கத்தில் இனக்குழுச் சமுதாயமாக இருந்து நாளடைவில் வேலை பிரிவினைக் காரணமாகத் தொழில்வழிப் பிரிவுகள் கொண்ட சமூகமாக மாறியுள்ள போக்கு ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

அன்றைய சமூகத்தில் அந்தணர், அரசர், வணிகர், நிலக்கிழார் ஆகிய நான்கு பிரிவினரும் சமூகத்தில் மதிப்புடையவர்களாக விளங்கியுள்ளனர். ஆனால் பிறதொழில் பிரிவினருக்கு இருந்த சமூக நிலையைக் கூறமுடியவில்லை. தச்சர், கொல்லர், குயவர் போன்றோர் கல்வி கற்றுப்

புலவர்களாய் விளங்கியுள்ளனர். இவர்கள் இழிந்தோராகக் கருதப்படவில்லை என்பது இந்த இயலில் தெளிவுற சுட்டப்பட்டுள்ளது.

**அறச்சிந்தனைகள்** என்னும் நான்காம் இயலில் கலித்தொகைப் பாடல்கள்வழி பண்டைத் தமிழர்களின் அறநெறிக் கோட்பாடும் அதன்வழி வகுத்துக் கொண்ட வாழ்வியல் நெறிமுறைகளும் விளக்கப்பட்டுள்ளன. பழந்தமிழர் குடும்ப வாழ்வையும் பொருளீட்டுதலையும் அடிப்படையாகக் கொண்டு இன்ப வாழ்வு வாழ்ந்தாலும் பொருளை நிலையாமை உடையதாகக் காட்ட முற்பட்டுள்ளது ஆய்வின்வழி அறியமுடிகிறது. ஆடவரும் பெண்களும் தங்கள் வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய, பின்பற்ற வேண்டிய அறங்களைக் கலித்தொகை எடுத்தியம்புகிறது. இந்த அறக் கருத்துகளை இயற்கையோடு இணைத்து கற்பவர் மனஞ்சோராமல் கொடுத்திருப்பது கலித்தொகைக்கே உரிய சிறப்பாக விளங்குகிறது. சங்ககாலத்தில் இளம்பெண்களால் அறமாகக் கருதப்பட்ட காதல் அவளது பெற்றோர்களால் அறமல்லவாகக் கருதப்பட்டிருக்கின்றது. காதல் கொண்ட தலைமக்கள் உடன்போக்குச் சென்றமையைச் சான்றோர்கள் அறமாகவே கருதினர் என்பது கலித்தொகையின்வழிப் புலனாகின்றது.

கலித்தொகைப் புலவர்கள் உயர்ந்த அறக்கருத்துகளைத் தோழி வாயலாகவும் அந்தணர்கள் வாயிலாகவும் வெளிப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

கலித்தொகைப் பாடல்கள் மனிதர்கள் வாழ்வில் கடைபிடித்த அறங்களை மட்டும் சுட்டாமல் அஃறிணை உயிர்களின் வழியாகவும் பல அறக்கருத்துகளைக் கூறியுள்ளனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

**கற்பனை நலம்** என்னும் ஐந்தாம் இயலில் கற்பனை குறித்த விளக்கம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கற்பனை என்னும் சொல் சங்க இலக்கியத்தில் எங்கும் காணப்பெறவில்லை. கற்பனையைக் குறிக்க புனைவு என்னும் சொல்லும் புனைந்துரை என்னும் சொல்லுமே வழங்கிவந்துள்ளதைக் காணமுடிகிறது.

காதலை வெளிப்படுத்தவும் பிரிவின் துயரை அறிவுறுத்தவும் சமுதாய ஒழுங்கைக் கற்பிக்கவும் புலவர்கள் கற்பனை வளத்தோடு பாடல்களைப் புனைந்துள்ளதை ஆய்வின்வழி அறிந்து உரைக்கப்பட்டுள்ளது.

பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்து திணைப் பாடல்களிலும் அந்தந்த நில அமைப்பும் வருணனையும் சூழலும் நன்கு கற்பனை நயத்தோடு புனையப்பட்டுள்ளதை இந்த ஆய்வு சுட்டிக்காட்டுகின்றது.

பாலை திணைப் பாடல்கள் வறண்ட நிலங்களையும் காட்டின் வெம்மையையும் கற்பனைத் திறனோடு பதிவு செய்துள்ளன. குறிஞ்சித்திணைப் பாடல்களில் இயற்கையின் எழிலும் மலையின் வளமும் சிறப்புறக் கூறப்பட்டுள்ளன. மருதத்திணைப் பாடல்களில் தாமரைப் பொய்கைகளும் கழனிகளும் நீர்வளங்களும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. முல்லைத்திணைப் பாடல்களில் ஆயர்குல மக்களின் வாழ்வையும் கால்நடைகளையும் காடுசார்ந்த இடங்களையும் கற்பனை வளத்தோடு பதிவுசெய்யப்பட்டுள்ளன. நெய்தல் திணைப் பாடல்களில் கடற்பரப்பின் அழகையும் கடல்சார்ந்த நிலத்தில் உள்ள சுழிகளையும் கற்பனை திறத்தோடு பதிவுசெய்யப்பட்டுள்ளன.

**மேலாய்வுக் களங்கள்**

மேலாய்வுக் களங்களாகப் பின்வருவன சுட்டப்படுகின்றன.

1. கலித்தொகையில் அயலவர் பண்பாட்டுத் தாக்கம்.
2. கலித்தொகையில் வைதீக நெறிகள்
3. கலித்தொகை காட்டும் பண்பாட்டுப் புரட்சி

# துணைநூற் பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**

1. சோமசுந்தரனார். பொ.வே - கலித்தொகை
நச்சினார்க்கினியர் உரை
கழக வெளியீடு
சென்னை
1970

2. மணியன். இரா - கலித்தொகை
கவின்மதி பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு, டிசம்பர் 2010

**துணைமை ஆதாரங்கள்**

1. கந்தையா. ந.சி - அகநானூறு
அமிழ்தம் பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு 2003

2. கந்தையா. ந.சி - கலித்தொகை
அமிழ்தம் பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு 2003

3. கவிதாராணி. அ - அறமும் அறநெறிச் சிந்தனைகளும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதல்பதிப்பு, ஆகஸ்ட், 2013

4. குருவம்மாள். மு - தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு
காவ்யா வெளியீடு
சென்னை
முதல்பதிப்பு 2015

5. சதீஷ். அ - சங்க இலக்கிய உரைகள்
அடையாளம்
திருச்சி
முதல்பதிப்பு 2008

6. செந்தமிழ்ச் செல்வி கலியபெருமாள் - கலித்தொகை பாலைத்திணை – ஓர் ஆய்வு
மயிலாடுதுறை
முதல்பதிப்பு 2014

7. தட்சிணாமூர்த்தி. அ - சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனிதஉறவுகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதல் பதிப்பு ஜூலை 2016

8. திருநாவுக்கரசு. க.த. - திருக்குறளில் கற்பனைத்திறனும் நாடக நலனும்,
சென்னைப் பல்கலைக்கழகம்
முதல் பதிப்பு 1982

9. திருவள்ளுவர் - திருக்குறள்
பரிமேலழகர் உரை
சாரதா பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு, ஏப்ரல் 2002

10. தெசினி - கலித்தொகையும் முத்தொள்ளாயிரமும்
அருண விஜய நிலையம்
சென்னை
முதல்பதிப்பு 2004

11. தொல்காப்பியர் - தொல்காப்பியம்
இளம்பூரணர் உரை
பதிப்பாசிரியர் மு. சண்முகம்பிள்ளை
முல்லை நிலையம்
சென்னை
டிசம்பர் 1995

12. தொல்காப்பியர் - தொல்காப்பியம்
நச்சினார்க்கினியர் உரை
கழக வெளியீடு
சென்னை 1970

13. நாற்கவிராச நம்பி - நம்பியகப்பொருள்
கழக வெளியீடு
சென்னை
முதல்பதிப்பு 1966

14. நீலகண்டபிள்ளை. தா - சங்கத்தமிழர் வாழ்வியல்
செம்மூதாய் பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு ஏப்ரல் 2012

15. பகவதி கோவிந்தன்.ச - தொல்காப்பியக் கொள்கைகளும்
கலித்தொகையும்
பகவதி பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு 2003

16. பாலுச்சாமி (மு. ப. ஆ) வாழ்வியல் களஞ்சியம்
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்
2002

17. மாணிக்கம். வ.சுப - தமிழ்க்காதல்
சாரதா பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு, ஜூன் 2007

18. மாதையன். பெ - தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும்கருத்தும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதல்பதிப்பு, ஜூலை, 2011

19. மாரியப்பன். சு.மா - கலித்தொகை காட்டும் வாழ்வியல்
மெய்மைகள்
தி பார்க்கர்
சென்னை
முதல்பதிப்பு ஏப்ரல் 2008

20. மாயாண்டி. இரா - சங்க இலக்கியத்தில் கற்பனை
எழிலகம்
சென்னை
முதல்பதிப்பு 1980d

21. முத்துச்சாமி கண்ணப்பன், - சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்,
சென்னை
முதல் பதிப்பு 1978

22. ராஜ்கௌதமன் - கலித்தொகை – பரிபாடல் ஒரு
விளிம்புநிலைநோக்கு
விடியல் பதிப்பகம்
கோயம்புத்தூர்
முதல்பதிப்பு, நவம்பர் – 2011

23. ராஜ்கௌதமன் - தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும்
விடியல் பதிப்பகம்
கோயம்புத்தூர்
முதல்பதிப்பு, 2008

24. வரதராசன். மு. - இலக்கியத்திறன்
சென்னை
முதல் பதிப்பு 1979

25. வரதராசன். மு - பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை
பாரி நிலையம்
சென்னை
இரண்டாம் பதிப்பு 2006

26. வையாபுரிப்பிள்ளை.ச, - இலக்கியச் சிந்தனைகள்,
வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம்
சென்னை
முதல்பதிப்பு, 1989

**பார்வை நூல்கள்**

27. அமிர்த கௌரி. அ - சங்க இலக்கியத்தில் உரையாடல்
பாரிநிலையம்
சென்னை
முதல் பதிப்பு. 1989

28. இந்திரா மனுவேல் - பாலைபாடிய பெருங்கடுங்கோ
நாகர்கோயில்
முதல்பதிப்பு 1973

29. இராமகிருஷ்ணன். எஸ் - இந்தியப் பண்பாடும் தமிழரும்
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
முதல்பதிப்பு. 1971

30. கார்த்திகேசு சிவத்தம்பி - சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதல்பதிப்பு. 2009

31. குமாரசாமிப்பிள்ளை. அ - இலக்கியச் சொல்லகராதி
சந்தியா பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு. 2016

32. குளோரியா சுந்தரமதி - சங்க இலக்கியம் (மருதம்)
கேரளப் பல்கலைக்கழகம்
முதல் பதிப்பு. 1973

33. சக்குபாய். இரா - சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமயவடிவங்களும்
மனிதம் பதிப்பகம்
திருச்சி
முதல்பதிப்பு, 2007

34. சரளா ராசகோபாலன் - சங்க இலக்கியக் கட்டுரைகள்
ஒளி பதிப்பகம்
சென்னை

35. சாம்பசிவம். ச - தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை
மதுரை
முதல் பதிப்பு 1964

36. சேலை சகதேவ முதலியார் - கழகத் தமிழ்க் கையகராதி
கழக வெளியீடு
சென்னை
முதல் பதிப்பு. 1940

37. ஞானசம்பந்தம். அ.ச - இலக்கியக் கலை
பாவை பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு. 2010

38. நமசிவாயம் - தமிழர் உணவு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதல் பதிப்பு. 1981

39. பரமசிவம். தொ - அறியப்படாத தமிழகம்
காலச்சுவடு
நாகர்க்கோயில்
எட்டாம் பதிப்பு. 2014

40. பரமசிவம். தொ - வழித்தடங்கள்
மணி பதிப்பகம்
திருநெல்வேலி
இரண்டாம் பதிப்பு. 2012

41. பிள்ளை. கே.கே - தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை
மறுபதிப்பு. 1981

42. மாதையன். பெ - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்
பாவை பதிப்பகம்
சென்னை
முதல்பதிப்பு. 2012

43. ஜெயமோகன் - சங்கச் சித்திரங்கள்
கவிதா வெளியீடு
சென்னை
முதல்பதிப்பு. 2002

**ஆய்வேடு**

*44. கலைச்செல்வி. கா* — *சங்க இலக்கியங்களில் மறவர்கள் – பன்முக ஆய்வு*
*சென்னைப் பல்கலைக்கழகம்*
*மார்ச், 2010*